# ஊடல் அன்றும் இன்றும்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
(Ph.D)அளிக்கப்பெறும் ஆய்வின் பகுதியாக முடிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**க.மோகன்**

**(பதிவு எண்.1442)**

**நெறியாளர்**

பேராசிரியர் **முனைவர் மு.பாண்டி,**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தர நிர்ணயக் குழுவால் 'A' மதிப்புப் பெற்றது)

**காரைக்குடி - 3**


**ஜனவரி 2009**

**முனைவர் மு. பாண்டி,**
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 07. 1. 2009

# நெறியாளர் சான்றிதழ்

"ஊடல் அன்றும் இன்றும்" என்னும் தலைப்பில் **க.மோகன்** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

07/1/2009

**(முனைவர்.மு.பாண்டி)**
**நெறியாளர்**

க.மோகன்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 07.01.09

# ஆய்வாளர் உறுதிமொழி

**"ஊடல் அன்றும் இன்றும்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

க.மோகன்
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
07/1/2009

நெறியாளர்
முனைவர் மு. பாண்டி,
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

ஆய்வுப் பணி மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னைக் கரைத்து; எனக்குள் கரைந்து, என்னை அவையத்து முந்தியிருக்கச் செய்த, என் கட்டைவிரல் கேட்காத குருநாதர் நெறியாளர் **பேராசிரியர் முனைவர் மு.பாண்டி** தமிழ்த்துறைத்தலைவர் அவர்களுக்கு என் வணக்கம் கலந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்கு உதவிய பல்கலைக்கழகத் தமிழ்த்துறை பேராசிரியர்கள் ***முனைவர் சு. இராசாராம், முனைவர் இரா.தாமோதரன், முனைவர் மு.சுதா, திரு.மு.நடேசன்*** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

என்னை, பூவின் மடலுக்குள் பொத்தி வைத்து, என் தாயின் மடியினைத் தத்தெடுத்த என் மனைவி **மோ.இராஜேஸ்வரி**, எப்பொழுதும் எனக்குள்ளே இதயத்துடிப்பாய் இருக்கும் என் அருமைச் செல்வங்கள் **மோ.நிதிஷ்பிரபா, மோ.நித்திகா** அவர்களோடு என் மகிழ்வான நன்றிகளை பகிர்ந்து கொள்கிறேன்.

தூரத்தில் இருந்தாலும் என்னைத் தொட்டுப் பார்க்க ஆசைப்படும் எனது சகோதரி ***சி.மணிமேகலை***, மைத்துனர் ***க.சிவசாமி*** அவர்களுக்கும், என் சகோதரர்கள், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோருக்கும் என் நன்றிகள் பல.

என் ஆய்விற்கு உதவிய பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகத்தாருக்கும் ஆய்வுத் தொடர்பாக எனக்கு நல்லுதவி புரிந்த அனைத்து உள்ளங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**க. மோகன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத் | அகத்திணையியல் |
| அகநா, அகம் | அகநானூறு |
| இளம் | இளம்பூரணர் |
| உ.ஆ., உரை. | உரையாசிரியர் |
| உ.கு.ஆ. | உரைக்குறிப்பு ஆசிரியர் |
| உவம். | உவமையியல் |
| ஐங். | ஐங்குறுநூறு |
| ஐந்.எழு., ஐந்.70. | ஐந்திணை எழுபது |
| ஐந்.ஐம்., ஐந்.50 | ஐந்திணை ஐம்பது |
| கலி. கலித். | கலித்தொகை |
| கம்ப. | கம்பராமாயணம் |
| களவு | களவியல் |
| கற்பு | கற்பியல் |
| கழகம் | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறள் | திருக்குறள் |
| குறுந். | குறுந்தொகை |
| சிலம்பு | சிலப்பதிகாரம் |
| சீவக. | சீவகசிந்தாமணி |
| செய்யு. | செய்யுளியல் |
| த.கோ.செ. | தஞ்சைவாணன்கோவை செய்யுள் |
| தி.மாலை 150 | திணைமாலை 150 |
| தி.மொ.ஐ., தி.மொ.50 | திணைமொழி ஐம்பது |
| தொல். பொருள். | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நச்சி. | நச்சினார்க்கினியர் |
| நற். | நற்றிணை |
| நூற். | நூற்பா |
| ப. | பக்கம் |
| பக். | பக்கங்கள் |

| | | |
|---|---|---|
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பதிற்று | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| பா. | - | பாடல்கள் |
| பா.எ | - | பாடல் எண் |
| புறம், புறநா | - | புறநானூறு |
| பொருளி. | - | பொருளியல் |
| மணி | - | மணிமேகலை |
| மதுரைக் | - | மதுரைக்காஞ்சி |
| மெய். | - | மெய்ப்பாட்டியல் |
| மேலது | - | மேலே உள்ள நூல் |
| மொ.எண். | - | மொத்த எண் |
| வ.எண் | - | வரிசை எண் |
| வி.கு | - | விளக்கக் குறிப்பு |
| வெ.ஆ | - | வெளியீட்டு ஆசிரியர் |

# பொருளடக்கம்

# முன்னுரை

உணர்ந்தோர் உணர்த்த உணரப்படுவது இலக்கியமாகும். ஓர் இலக்கியம் சமுதாயத்தின் பயன்பாட்டிற்கு; உழுத நிலத்தில் விழுந்த மழையாகப் பயன்பட வேண்டும். பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம் இவைகளைக் காலந்தோறும் நடைமுறைப்படுத்திக் கொண்டிருப்பது இலக்கியம். குடும்ப வாழ்வில் ஏற்படும் சிறுசிறு பிரச்சினைகள், அதனால் ஏற்படும் பிரிவினைகள் தொடர்ந்து கொண்டே இருந்தாலும், பொருளாதாரச் சூழலுக்கேற்ப அவைகளில் மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றுளொன்று தலைவன் தலைவி ஊடலாகும்.

## ஆய்வுத் தலைப்பு

"*ஊடல் அன்றும் இன்றும்*" என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

## ஆய்வின் நோக்கம்

இன்றைய சூழலில் சமுதாயத்தின் வாழ்வியல் கொள்கைகள் மரபிலிருந்து விலகி, புதுமை என்ற நோக்கில் கட்டவிழ்ந்து நிலைமாறி சென்று கொண்டிருக்கிறது. இல்லறத்தை நல்லறம் ஆக்க வேண்டிய தலைவனும், தலைவியும் தேவையற்ற, பொருத்தமற்ற காரணங்களுக்காக முன்னிற்கின்றனர். அவரவர் கடமையையும் பொறுப்பையும் மறந்த காரணத்தினால் அமைதியின்மையும் போராட்டமும் அதிகமாகி மனையற மாண்புச் சிதைந்து வருகிறது. இல்லறம் சிறக்க வேண்டுமானால் தலைவனும் தலைவியும் தத்தமது கடமைகளில் பிறழாமல் வாழ்ந்தால் மட்டும் போதாது. அவர்களைச் சுற்றி வாழக்கூடிய உறவுகள், நட்புகள்

துணையாக அமைதல் நலம்பயக்கும். உள்ளத்துள் உறவாடி இன்பமுற வாழவேண்டிய தம்பதிகளுக்கிடையே நிகழும் சிறு பிணக்குகள் கூட இன்று குடும்ப நீதிமன்றங்களில் காத்து கிடக்கின்றன. நீரோட்டமாய் இருக்க வேண்டிய மனித வாழ்வு இன்று தேங்கிய நீராய்க் காணப்படுகின்றது. பொருளாதாரம் மட்டுமே இல்லறத்தை நடத்திச் செல்வதில்லை. ஒத்த அன்புடைய தம்பதியரால் தான் ஒரு நாட்டின் எதிர்காலம் தீர்மானிக்கப்படுகிறது. முன்னோர் வாழ்ந்து காட்டிய வாழ்க்கையை இளம் தலைமுறையினருக்கு எடுத்துக்காட்டுவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

தமிழ் இலக்கியப் பரப்பு இரண்டாயிரம் ஆண்டு கால எல்லையாகக் கொண்டது. தொல்காப்பியம் தொடங்கி இன்றைய சென்றியூ கவிதைவரை இலக்கிய வடிவுங்கள் விரிந்து காணப்படுகின்றன. தொல்காப்பியத்தில் முளைவிடும் ஊடல் சங்க இலக்கியங்களில் காய்த்து பழமாக மிகுந்துள்ளன. இவ்வூடல் அன்றுதொட்டு இன்றைய இலக்கியங்கள் வரை தலைவன் தலைவி வாழ்வியலைச் சுட்டும் நிலையில் எடுத்தாளப்பட்டு வந்துள்ளது. ஆய்வின் எல்லை கருதி ஒவ்வொரு இலக்கிய வடிவிலும் ஊடல் பற்றி கண்டறியும் வகையில் காலந்தோறும் தோன்றிய இலக்கிய வடிவங்களில் ஊடல் வெளிப்படுத்தும் இலக்கியங்கள் எல்லையாக அமைகின்றன. ஒவ்வொரு வடிவத்திலும் ஊடல் பற்றித் தனித்தாய்வதற்கு களம் உள்ளது. ஆய்வு எல்லை மற்றும் கால அளவு கருதி பதச்சோறு அடிப்படையில் ஒவ்வொரு இலக்கிய வடிவிலும் ஊடல் கண்டறியப்பட்டுள்ளது.

## கருதுகோள்

நல்ல சமுதாயம் அமைய அடித்தளமாக அமைவது இல்லற வாழ்வாகும். இன்றைய இல்லற வாழ்வில் ஏற்படும் பிணக்குகள் பற்றி தொல்காப்பியம் கூறும் வாழ்க்கை நெறியோடு சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள ஊடல் பொருண்மைகள் பிற்கால இலக்கியங்களில் இருக்கும் என்பதாகக் கருதுகோள் அமைந்துள்ளது.

## ஆய்வின் மூலங்கள்

தொல்காப்பியப் பொருளதிகார உரைகள், சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை நூல்களுள் அகவாழ்வைச் சுட்டும் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவை முதன்மைத்தரவுகளாவும், திருக்குறள், பக்தி இலக்கியம், சிலப்பதிகாரம், மணிமேகலை, ,சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், முத்தொள்ளாயிரம், முக்கூடற் பள்ளு, தற்காலப் புதினங்கள், சிறுகதைகள், புதுக்கவிதைகள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள். இதழ்கள், அகராதிகள், ஆய்வேடுகள், சஞ்சிகைகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகவும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது.

## ஆய்வு அணுகுமுறைகள்

ஆய்வின் நிறைவிற்கும் சிறப்பிற்கும் முதற் காரணமாய் அமைவன, அதனை மேற்கொள்ளப் பயன்படுத்தும் ஆய்வு அணுகுமுறைகளாகும் **(Research Methodology).** சங்க இலக்கியங்களில் காணப்படும் ஊடல் பற்றி பகுத்தாயும் நிலையில் பகுப்பாய்வு அணுகுமுறையும் **(Analytical Approach),** ஊடலைச் சமுதாயப் பார்வையோடு நோக்கும் நிலையிலும்,

ஊடலினால் இல்லறத்தில் விளையும் மாற்றங்கள் பற்றிக் காணும் முறையிலும் சமுதாயவியல் அணுகுமுறையும் (Sociological Approach), தலைவன் தலைவிக்கிடையே ஊடலினால் ஏற்படும் பல்வேறு பிரச்சினைகளைப் பற்றி விளக்கும் சூழலில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach) இவ்வாய்விற்குரிய அணுகுமுறைகளாக விளங்குகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

"*ஊடல் அன்றும் இன்றும்*" எனும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்கண்ட நான்கு இயல்களைக் கொண்டு அமைந்திருக்கின்றது. அவை,

1. ***ஊடல் - சொற்பொருள் விளக்கம்***
2. ***சங்க இலக்கியத்தில் ஊடல்***
3. ***பிற்கால இலக்கியங்களில் ஊடல்***
4. ***சங்ககால - பிற்கால ஊடல் ஒப்பீடு***

என்பனவாகும்.

## இயல் விளக்கங்கள்

'*ஊடல் - சொற்பொருள் விளக்கம்*' என்னும் முதலாமியலில் தொல்காப்பியம் கூறும் ஊடல் இலக்கண வரையறை, ஊடல் சொற்பொருள் விளக்கம் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. ஊடல் பெரும்பான்மையாகக் கற்பிலும் சிறுபான்மையாக களவிலும், பிற திணைகளிலும் நடைபெறுவது கண்டறியப்பட்டுள்ளது. ஊடல் வந்ததால் பிரிவு வந்ததா? பிரிவு வந்ததால் ஊடல் வந்ததா? என்பது விளக்கும் போது அது பெண்ணிற்குப் பிறப்பியல்பு என்ற கருத்துப் பெறப்பட்டுள்ளது. நம்பியகப் பொருள், அகப்பொருள் விளக்கம், வீரசோழியம், சுவாமிநாதம்,

அபிதான சிந்தாமணி, திவ்ய பிரபந்த அகராதி, தற்காலத் தமிழ் சொற்களஞ்சியம், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, அகராதி நிகண்டு, நாபதீப நிகண்டு போன்றவைகளிலுள்ள ஊடல் பற்றி விளக்கங்கள் எடுத்தாளப்பட்டுள்ளது. புலவி என்பது மனத்தளவில் வெறுத்தல்; மனத்தின்கண் நின்ற வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுதல் ஊடல்; அதன் முதிர்ச்சியே துனி ஆகும். புலவி, ஊடல், துனி என்ற வைப்பு முறையும் எடுத்தாளப்பட்டுள்ளது.

'*சங்க இலக்கியத்தில் ஊடல்*' என்பது இரண்டாமியலாகும். சங்க காலத்தில் தலைவனுக்கு உணர்ப்புவயின் வாரா ஊடற் கண்ணும், களவில் அல்லகுறிப்பட்டு மீளும் போதும் ஊடல் உண்டாகும் என்பது அறியப்பெறுகிறது.

தலைவியும் பரத்தையும் ஒருவருக்கொருவர் கடிந்து கொள்வதிலிருந்து சங்க இலக்கியத்தில் தலைவனின் இரண்டு பெண்களிடையே நடந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் என்பது பெறப்பட்டுள்ளது. தலைவிக்குத் தலைவனின் பரத்தைமையினால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை என்பதும், பொருள்வயிற் பிரிந்த நிலையிலும் ஊடல் உண்டாகும் என்பது தக்கச் சான்றுகளுடன் எடுத்தாளப்பட்டுள்ளது.

தெருவில் விளையாடும் தன் புதல்வனைத் தழுவிக் கொள்ளும்

அபிதான சிந்தாமணி, திவ்ய பிரபந்த அகராதி, தற்காலத் தமிழ் சொற்களஞ்சியம், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, அகராதி நிகண்டு, நாபதீப நிகண்டு போன்றவைகளிலுள்ள ஊடல் பற்றி விளக்கங்கள் எடுத்தாளப்பட்டுள்ளது. புலவி என்பது மனத்தளவில் வெறுத்தல்; மனத்தின்கண் நின்ற வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுதல் ஊடல்; அதன் முதிர்ச்சியே துனி ஆகும். புலவி, ஊடல், துனி என்ற வைப்பு முறையும் எடுத்தாளப்பட்டுள்ளது.

'*சங்க இலக்கியத்தில் ஊடல்*' என்பது இரண்டாமியலாகும். சங்க காலத்தில் தலைவனுக்கு உணர்ப்புவயின் வாரா ஊடற் கண்ணும், களவில் அல்லகுறிப்பட்டு மீளும் போதும் ஊடல் உண்டாகும் என்பது அறியப்பெறுகிறது.

தலைவியும் பரத்தையும் ஒருவருக்கொருவர் கடிந்து கொள்வதிலிருந்து சங்க இலக்கியத்தில் தலைவனின் இரண்டு பெண்களிடையே நடந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் என்பது பெறப்பட்டுள்ளது. தலைவிக்குத் தலைவனின் பரத்தைமையினால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை என்பதும், பொருள்வயிற் பிரிந்த நிலையிலும் ஊடல் உண்டாகும் என்பது தக்கச் சான்றுகளுடன் எடுத்தாளப்பட்டுள்ளது.

தெருவில் விளையாடும் தன் புதல்வனைத் தழுவிக் கொள்ளும்

அபிதான சிந்தாமணி, திவ்ய பிரபந்த அகராதி, தற்காலத் தமிழ் சொற்களஞ்சியம், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, அகராதி நிகண்டு, நாபதீப நிகண்டு போன்றவைகளிலுள்ள ஊடல் பற்றி விளக்கங்கள் எடுத்தாளப்பட்டுள்ளது. புலவி என்பது மனத்தளவில் வெறுத்தல்; மனத்தின்கண் நின்ற வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுதல் ஊடல்; அதன் முதிர்ச்சியே துனி ஆகும். புலவி, ஊடல், துனி என்ற வைப்பு முறையும் எடுத்தாளப்பட்டுள்ளது.

'*சங்க இலக்கியத்தில் ஊடல்*' என்பது' இரண்டாமியலாகும். சங்க காலத்தில் தலைவனுக்கு உணர்ப்புவயின் வாரா ஊடற் கண்ணும், களவில் அல்லகுறிப்பட்டு மீளும் போதும் ஊடல் உண்டாகும் என்பது அறியப்பெறுகிறது.

தலைவியும் பரத்தையும் ஒருவருக்கொருவர் கடிந்து கொள்வதிலிருந்து சங்க இலக்கியத்தில் தலைவனின் இரண்டு பெண்களிடையே நடந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் என்பது பெறப்பட்டுள்ளது. தலைவிக்குத் தலைவனின் பரத்தைமையினால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை என்பதும், பொருள்வயிற் பிரிந்த நிலையிலும் ஊடல் உண்டாகும் என்பது தக்கச் சான்றுகளுடன் எடுத்தாளப்பட்டுள்ளது.

தெருவில் விளையாடும் தன் புதல்வனைத் தழுவிக் கொள்ளும் பரத்தையைக் கடிந்து கொள்ளாமல் இம்மகனுக்கு நீயும் தாய் என உரைத்தாலும் தலைவி தன் உள்ளத்துள் ஊடல் கொண்டமை பெறப்படுகிறது.

வாயில் மறுத்தலால் பரத்தைமை தவறு என்பதும், வாயில் நேர்வதால் தவறு சரி செய்யப்படுவதாலும் சங்ககாலத்தில் பரத்தைமை

சமுதாயம் அங்கீகரிக்கப்பட்ட வாழ்வாக அமைந்திருப்பதை ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

பரத்தை அல்லது காமக்கிழத்தி தலைவனை மணந்தவர்களாகக் காணப்படுகின்றனர். தலைவன் பலதார மணமுடையவனாகக் காணப்படுகிறான். பொருட் பெண்டிராகவோ, ஒருவர்மாட்டும் தங்காதவராகவோ பரத்தையர் அறியப்படவில்லை. தங்கையாகவும், தலைவிக்கு இணையாகவும் பரத்தை பேசப்படுவது விளக்கப்பட்டுள்ளது.

விருந்தெதிர் ஊடாமை, புதல்வனெதிர் ஊடமை சங்ககாலத்தில் பின்பற்றப்பட்ட பண்பாக இருந்தமை அறிப்பட்டு, வாயில்களாக வந்தோர் அனைவரும் இல்லறம் சிறக்கப் பாடுபட்டமையும், புதல்வனும் ஊடல் தணிக்கும் வாயிலாவதையும் இவ்வியல் விளக்குகிறது.

தலைவி கொள்ளும் வெற்று ஊடலால் யாதொரு பயனும் இல்லை என்ற தோழி கூற்றின் வழி பெண்களின் அவல நிலை சித்திரிக்கப்பட்டுள்ளது.

பரிபாடல்களில் கீழ்நிலை மக்களாகப் பரத்தை பேசப்படுகிறது. இப்பாடல்களில் ஊடல் ஊரறிய நிகழ்ந்த மரபு மீறல்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளமை கண்டறியப்பட்டுள்ளது.

'**பிற்கால இலக்கியங்களில் ஊடல்**' என்பது மூன்றாவது இயலாகும். வள்ளுவர் காலத்திலும் தலைவன் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்டிரிடம் உறவு கொண்டிருந்தது, பரத்தைமை இல்லாத காலங்களிலும் தலைவிக்கு ஊடல் நிகழும் என்பதும், ஊடலுக்குக் காரணமாகப் பரத்தமையைக் குறிக்கவில்லை என்பதும், ஆடவனின் பலதார மணத்தால்

நிகழ்ந்த உச்சகட்ட நிலை போன்றவற்றை வள்ளுவரின் ஊடல் பாடல்கள் வழி அறியப்பட்டுள்ளது.

இறைவனிடம் உறவும் உரிமையும் கொண்டாடுவது இறையடியார்களின் தனிச்சிறப்பாகும். சங்க இலக்கியத்திலும் காணப்படாதப் புதுமையான அறப்போராட்டம் பக்தி இலக்கியத்தில் காணப்படுவதை இவ்வியல் விளக்குகிறது.

பரத்தையர்களும் பாணர்களும் பக்தி இலக்கியத்தில் வேறுபாடுகள் சிறிதுமின்றி இறை அன்பர்கள் என்ற உயரிய நோக்கில் மதிக்கப்பட்டமை உணரப்பெறுகிறது.

கம்பராமாயணத்தில், சங்க இலக்கியத்திலிருந்து மாறுபட்ட ஊடல் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது. கண்ணகியின் கற்பு சீதையின் கற்போடு ஒப்பு நோக்கி, பெருங்கற்புடைய மகளிர் தங்கள் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டமை அறியப்பெறுகிறது.

சிலப்பதிகாரத்தில் கோவலனின் ஊடல் மாதவியைப் பிரித்தது; பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது இவ்வியலில் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. காப்பியங்களில் ஊடல் பொருண்மை ஆராயப்பெற்றுள்ளது.

'ஆந்திரநாட்டு அகநானூறு' என்று அழைக்கப்படும் காதா சப்தசதி இவ்வாய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, அதன் ஊடல் செய்திகள் சான்றுகளுடன் விளக்க்ப்பட்டுள்ளது. கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் காரிகையாரும் உண்டு; பரத்தையரும் உண்டு என்பதை காதா

சப்தசதி அறக்கழிவு கோட்பாட்டினை எடுத்துக்காட்டுவதை இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது.

சிற்றிலக்கியங்கள் பலவும் பெரும்பான்மை புலமை இலக்கியங்களாகத் திகழ்கின்றன. முத்தொள்ளாயிரம், முக்கூடற்பள்ளு, தஞ்சைவாணன் கோவைப் பாடல்களில் உள்ள ஊடல் விளக்கப்பட்டுள்ளது.

புதினம், சிறுகதைகளில் பிற பெண்களை நாடும் ஆண்களைத் தள்ளி வைக்க இக்காலப் பெண்கள் தயங்கவில்லை என்பது இவ்வியலில் வெளிக்கொணரப்பட்டுள்ளது.

'***சங்ககால - பிற்கால ஊடல் ஒப்பீடு***' என்பது நான்காம் இயலாகும். இல்லற வாழ்வில் ஏற்படும் பிணக்குகள் பற்றித் தொல்காப்பியம் கூறும் வாழ்க்கை நெறியோடு சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள ஊடல் பொருண்மைகள் பிற்கால இலக்கியங்களோடு ஒப்பிட்டு நோக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்திலிருந்து மாறுபட்ட ஊடல் பிற்கால இலக்கியங்களில் காணப்படுவதை இவ்வியல் விளக்குகிறது. பொருளாதாரத்தை முன்னிறுத்தி கணவனுக்கும் மனைவிக்கும் இடையே நிகழும் போராட்டம் விளக்கப்பட்டுள்ளது. வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் போன்றவை சங்ககாலத்தில் நிகழ்ந்ததைப் போல் புதினம், சிறுகதைகளில் எங்ஙனம் நிகழ்கிறது என்பதும், வாயில் மறுத்தலை மையப்படுத்திப் புதின, சிறுகதைகளின் கதையோட்டம் ஆராயப்பெற்றுள்ளது. சங்ககாலத்தில் தலைவிக்கு உற்ற துணையாக தோழி அமைந்திருந்து, தக்கதோர் நேரத்தில் அறிவுரை வழங்கியதைப்

போல் தற்கால இல்லத்தலைவிக்குத் தோழி அமையவில்லை என்பதையும், இல்லத்தலைவிக்கு நல்ல ஆலோசனைகள் கூறும் தோழி இருந்தால் இல்லத்தரசி தனது குடும்பத்தை இனிதாக நடத்த முடியும் என்பதையும் ஆய்வு நோக்கில் கண்டறியப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அந்தந்த இயல்களின் இறுதியில் வழங்கப்பட்டு இருப்பினும், ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் நிறைவுரையாக இடம்பெற்றுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணை செய்த நூல்களின் பட்டியல் கொடுக்கப்பெற்றுள்ளன.

## இயல் - 1

### ஊடல் - சொற்பொருள் விளக்கம்

இலக்கியங்கள் மனித எண்ணங்களைப் பிரதிபலித்துக் காட்டுவன. இலக்கியங்கள் காலந்தோறும் பாடுபொருள் அடிப்படையிலும் வடிவ அடிப்படையிலும் மாற்றம் பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தின் பாடுபொருளாகக் காதலும், வீரமும் அமைந்திலங்கின. இவற்றுள் காதலைப் பாடுவன அகமென்றும், வீரத்தைப் பாடுவன புறமென்றும் பெயர்பெற்றன. இவ்விரண்டனுள் அகம் சார்ந்த செய்யுட்கள் சாலச் சிறப்புடையன. இச்செய்யுள்களின் வளத்திற்கு வாழ்வு கொடுத்து நிற்பன அதன்கண் உள்ள நற்சொற்களாகும். இச்சொற்கள் கவிஞர்களின் அனுபவத்தை, எண்ணத்தை, உணர்வை வெளிப்படுத்துகின்றன.

மனிதனின் எண்ணத்தைச் சுமந்து செல்லும் கருவி (Vehicle of thought) மொழியாகும் என்பர். சங்க இலக்கியத்துள் மனிதனுடைய செயல்கள், உணர்வுகள், பண்புகள், அனுபவங்கள் மிக நுட்பமாகப் புலவர்களால் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வெளிப்பாட்டிற்குப் புலவர்கள் ஊடலை ஒரு கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இவ்ஊடல் குறித்து இலக்கண நூல்கள், அகராதிகள், நிகண்டுகள் தரும் விளக்கங்களைக் கண்டு கூறுவது இவ்வியலின் நோக்கமாகும்.

**ஊடல் - விளக்கம்**

**தொல்காப்பியத்தில் ஊடல்**

தமிழ் இலக்கண நூல்களில் முதன்மைப் பெற்றது தொல்காப்பியம். ஊடல் எல்லா நிலத்திலும் நடைபெறும். ஒவ்வொரு திணைக்கும் நிலம்

பெரும் பொழுது, சிறுபொழுது எனத் தெளிவாகச் சுட்டிய தொல்காப்பியர் இன்ன திணைக்கு இன்ன உரிப்பொருள் என்று வரையறுத்துச் சொல்லவில்லை.

> **"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
> **தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"**
>
> (தொல்.பொருள்.அகம்.14)

புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை, புணர்தலும், பிரிதலும், இருத்தலும், இரங்கலும், ஊடலும் அவற்றின் நிமித்தம் என்று சொல்லப்பட்ட இவை, தேடுங்காலை திணைக்கு உரிப்பொருள் – ஆராயுங்காலத்து ஐந்திணைக்கும் உரிப்பொருளாம்"(1) என்று விளக்கமளிக்கிறார்.

ஒவ்வொரு திணைக்கென்று தனியாக உரிப்பொருள் அமைக்காத நிலையில், "பிரிவு பாலைக்கு உரித்தாமவது மேற்சொல்லப்பட்டது. புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும் இரங்கல் என்பது நெய்தற்கும் ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரித்தாகவும் சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்"(2) என்று இளம்பூரணர் மேற்சொல்லப்பட்ட நூற்பாவிற்கு விளக்கம் அளிக்கிறார். பெரும்பான்மை இங்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

இதனை நச்சினார்க்கினியர், "தேருங்காலை என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும்,

நெய்தற்கு இரங்கலும், மருதத்திற்கு ஊடலும் அவ்வந் நிமித்தங்களும் உரித்தென்று ஆராய்ந்துள்ளனர். ஏனையவும் வழக்கியலான் நால்வகை நிலத்துஞ் சிறுபான்மை வருமேனும் பெரும்பான்மை இவை உரியவென்றற்குத் திணைக்குரிய பொருளேயென்றார்"[3] என்கிறார்.

இளம்பூரணர் உரையில் ஒன்று சிந்திக்கத்தக்கது. சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும் என்பது. அதேபோன்று ஏனையவும் வழக்கியலான் நால்வகை நிலத்துச் சிறுபான்மை வருமேனும் என்று நச்சினார்க்கினியரும் கூறியுள்ளார்.

உரையாசிரியர்கள் தாம் ஐந்திணைகட்கும் உரிய உரிப்பொருள்களையும் இன்ன திணைக்கு இது என்று கூறினரே ஒழிய, தொல்காப்பியத்தில் குறிப்புகளில்லை. "குறிஞ்சித்திணை ஒன்றே கூடுதற் பொருளைப் பற்றி வருவனவாகும். ஏனைய திணைகளெல்லாம் முற்றும் பிரிந்த நிலையினைக் கொண்டு வருவனவாகும். பொருள் தேடல் முதலாய காரணங்களால் ஒரு தலைவன், தன் தலைவியிடமோ, அவள் தோழியிடமோ கூறி விடைபெற்று, ஆற்றொணா வெப்பம் மிக்க காலத்து (செலற்கரிய, செல்வதற்கரிய) அவள் தலைவியும் இல்லிலிருந்து வருந்துதல் பாலையாகும். அங்ஙனம் சென்றவன், சென்ற வினையினை முற்றி மீளத் தொடங்கி நாளுக்கு நாள் அண்மையில் வாரா நிற்க, தலைவி எதிர்நோக்கி ஆற்றியிருத்தல் முல்லை. பன்னாடுகள் கடந்தோ, கடல் கடந்தோ சென்ற தலைவன் குறித்த காலத்து வாராதொழிய, தலைவி ஆற்றாமை கைமிக்கு வாய்விட்டுப் புலம்பும் அளவிற்கு வந்து இரங்குதல் நெய்தல். இங்ஙனமின்றித் தலைவன் பரத்தையர் இன்பம் காரணமாகத் தலைவியைப்

பிரிந்தொழுகும் வழி, அத்தலைவனுக்குப் புலவி, ஊடல் முதலிய நிகழ்வது மருதமாகும்"[4] என்பர்.

நால்வகை நிலத்தினும் புணர்தலும், பிரிதலும், இருத்தலும், ஊடலும், இரங்கலும் நிகழ்ந்து வருகின்றன. இவையெல்லாம் மக்கள் உணரும் உணர்ச்சிகள். எல்லாருடைய வாழ்விலும் நிகழக் கூடியன. தொல்காப்பியர் காலத்தில் மட்டுமல்ல இன்றும் நிகழ்ந்தும் வருகின்றன. இனியும் நிகழும் அதனால் தான் தொல்காப்பியர் பொதுவாகக் கூறியுள்ளார் என்பது பெறப்படுகிறது.

**களவில் ஊடல்**

தலைவனும் தலைவியும் சந்தித்துக் கொள்ளும் இடத்தைக் குறி என்பர். குறி என்று சொல்லப்படுவது இரவினானும் பகலினானும் இருவரும் அறியச் சொல்லப்பட்ட இடத்தையுடைத்து என்றவாறு. எனவே இரவிற்குறி, பகற்குறி என இருவகைப்படும். இதனைத் தொல்காப்பியர்,

**"குறியெனப் படுவ திரவினும் பகலினும்**

**அறியக் கிளந்த ஆற்ற தென்ப"** (தொல். பொருள்.களவு.39)

என்பர். களவில் ஊடல் தோன்றும் இடமாக,

**"அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே**

**அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே"**

(தொல். பொருள்.களவு.42)

"அல்லக்குறிப்படுதலும் தலைமகட்கு உரித்து, தலைவன் செய்த குறி மயங்கிய பொருத்தத்தொருவரின் என்றவாறு"(5) என்பர் இளம்பூரணர்.

"உணர்ப்புவரை மிறப்பினும் செயற்குறி பிழைப்பினும்
புலத்தலு மூடலும் கிழவோற் குரிய"

(தொல். பொருள். கற்பு.15)

ஊடல் என்பது பெண்ணினத்திற்கு மட்டுமே உரித்தன்று. இருப்பினும், "பெண்ணுக்கு ஊடல் பிறப்பியல்பு; பருவம் ஏற ஏற ஊடும் இயல்பும் உடன் வளர்கிறது. ஊடல் இதுவெனப் பெண்ணுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டியதில்லை. கற்றுக்கொள்ளும் நிலையில் ஒருத்தி இருப்பாளேல் அவள் பெண்மையுடையவள் ஆகாள்"(6) என்பர் வ.சுப.மாணிக்கம். இவ்வாறு பெண்ணிற்கே உரித்தான ஊடல், களவில் சிறுபான்மையாகத் தலைவனுக்கும் உண்டு என்பதை மேற்குறித்த நூற்பாவில் வரும் செய்குறி பிழைப்பினும் எனும் சொல்லாட்சி வெளிப்படுத்துவது உணரப்பெறுகிறது.

இரவில் தலைவனும் தலைவியும் கூடுதற்கு ஓரிடம், தலைவி அல்லது தோழியால் குறிக்கப்படும். அந்த இடத்திற்குத் தலைவன் வந்து அங்குள்ள பறவைகளை எழுப்புதல் முதலிய குறிகளால் தன் வரவைத் தலைவன் அறிவிப்பான். அதனை அறிந்த தோழி, தலைவியை அழைத்துக் கொண்டு அங்கு வருவாள். இவ்வாறு இரவுக்குறி நிகழுங்கால் ஒருநாள் தலைவன் வருவதற்கு முன்பே பிற காரணங்களால் பறவையெழுதல் முதலியன நிகழ்கின்றன; அவற்றைத் தலைவன் தான் செய்தான் எனக் கருதி தோழியும் தலைவியும் குறியிடத்துக்கு வந்து

தலைவனைக் காணாமல் வந்து மீளகின்றனர். பின்னர்த் தலைவன் வந்து பறவைகளை எழுப்ப, முன்னர் பிழைத்தமையால் தலைவி வராமல் இருந்து விடுகின்றாள். தலைவி வாராமல் போகவே தலைவன் வருந்தி மீள்கிறான். அப்பொழுது தலைவன் தன்நெஞ்சை நோக்கிக் கூறும் கூற்றே அல்லக்குறிபட்டு மீளும் போது கூறுங் கூற்றாகும்.

ஊடல் பெரும்பான்மை கற்பிற்கும் சிறுபான்மை களவிற்கும் உரித்தென்பது தெளிவாகும். பல்லாற்றானும் வேண்டித் தெளிவித்த வழியும் தலைவியின் ஊடல் நீங்காவிடினும், களவின்கண் அல்லக்குறிப்பட்ட வழியும் தலைவனும் ஊடுதலுண்டு என்பது பெறப்படுகிறது.

தலைவன் தெளியச் செய்யவுந் தெளியாத ஊடல் உணர்ப்புவயின் வாரா ஊடலாகும். ஊடிய தலைவியைக் கூடும் நோக்கம் கொண்டு வரும் தலைவனை வாயில் மறுத்து, அவனின் பொறுமையை எல்லை கடக்க வைக்கும் போது தலைவனும் ஊடல் கொள்வான். களவில் தலைவியைச் சந்திக்க வரும் போது வேறு நிமித்தங்களால் தலைவி, குறித்த இடத்தில் வாராமல் இருந்தாலும் தலைவனுக்கு ஊடல் உண்டாகும் என்பது அறியப்பெறுகிறது.

புலவி நுணுக்கமாவது, “ஓரமளிக்கண் இனிதிருக்கும் கணவன் மனைவி குடும்பச் செய்திகளைப் பேசலாகாது. குடிப்பேச்சுக் காரணமாக எழும் புலவி கருத்து வேற்றுமைக்கு இடனாகிப் பாயற் பயனைக் கெடுக்கும். ஊடற்குப் பற்றும் காரணங்கள் ஊடும் அப்பொழுது தோன்றிப் புணர்ச்சியோடு அழிய வேண்டும் என்பது வள்ளுவம். ஊடற்கு முன்னும் புணர்ச்சிக்குப் பின்னும் நின்று நிலைக்கும் நீடிய செய்திகளைப் புலவிக்

காலப் பொருளாகக் கொள்வரேல், இன்பத்தோடு மன நலமும் கெடும் என்பது ஒரு தலை... எழுதச் சீவிய கோலின் கூர்மை எழுதுங்கால் ஒடிந்துவிடுதல் போல ஊடலோடு தேய்ந்து அழிவதும் புலவி நுணுக்கம் ஆகும்"[7] என்பர் வ.சுப.மாணிக்கனார்.

தலைவியின் ஊடல் மென்மையாகவும், உண்மையான காரணம் கூறாதும் ஊடுதல் வேண்டும். அவ்வாறு இல்லையெனில் இல்வாழ்க்கையில் உண்மையான கூடுதல் இன்பம் கிடைக்காமற் போய்விடும் என்பது பெறப்படுகிறது. "பரத்தையிற் பிரிவு போலும் உண்மையான காரணம் இருப்பின், மனைவியின் உள்ளத்துள் எவ்வாறும் வருத்தம் ஆழ்ந்து கிடக்கும். கூடும் ஆர்வம் தோன்றாது. கூடினாலும் பெண்ணுள்ளம் மகிழாது. கற்பித்க் காரணம் தூய ஊடலை அளிக்கும். புறத்துச் செயல்கள் மிகுதியுடைய கணவன் நல்லவனாயினும், அவன்மேல் நம்பாத பார்வை ஓடிக்கொண்டிருக்கும் தலைவிக்கு, சமுதாயத்தில் ஆடவனுக்குக் கற்பு வரம்பு இல்லாமையே அவள் தன் ஐயப் பார்வைக்குக் காரணம். பரத்தை நாட்டம் உடையவனாக, வேண்டுமென்றே உட்கொண்டு, நண்ணேன் பரத்த நின் மார்பு (குறள்.1311) என்று புலப்பாள். தலைவனும் அங்ஙனம் கூறலாமா? பழிக்கலாமா? என்று வெகுளமாட்டான். அவன்தன் பொய்ப்பழியை அமளிப் பொருளாக மதித்து இன்பம் மலிவான். ஆதலின் மெய்யான பரத்தையிற் பிரிவு தலைவிக்குப் புலவிப் பொருளாம் எனக் கூறுதல் இன்ப அடிப்படைக்கு எதிராகும். தலைவியின் ஊடலுக்குக் காரணம் வேண்டும் என்பதற்காக இப்பரத்தையிற் பிரிவு அமைந்தது என்பது அத்துணைச் சிறந்த காரணமாகத் தோன்றவில்லை என்று

உடன்படுவர் டாக்டர் உ.வே.சா.(குறுந்தொகை நூலாராய்ச்சி, ப.79)"[8] என்பர் வ.சுப. மாணிக்கனார்.

**களவில் தலைவியின் ஊடல்**

> **"தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்**
>
> **அன்னவும் உளவே ஓரிடத்தான"** (தொல். பொருள்.களவு.20)

எனவரும் நூற்பாவில் அவன்வயின் பரத்தையும் என்பதற்கு இளம்பூரணர் "அயன்மை"[9] என்றும் நச்சினார்க்கினியர் "கற்பின்கண் பரத்தை காரணமாகத் தலைமகள்பால் தோன்றும் புலவி உணர்த்தலாமன்றி நீங்காது. களவின்கண் தோன்றும் அயன்மை பற்றிய இப்புலவி தலைவன்கண் பரத்தைமையின்றியும் தலைவி தனது காதல் மிகுதியால் அங்ஙனம் ஏறிட்டுக் கொள்ளும் பெண் இயல்பால் சிறிது போது வெளிப்பட்டுக் கடிதின் மாறும் இயல்பினை உடையது எனக்கூறி இதனைப் புலவிப் போலி"[10] என்பர்.

களவு, கற்பு என்ற இருவகைக் கைகோளில் களவில் பரத்தமைக்கு இடமில்லை என்பாரும் உளர். "ஒரு தலைவன் ஒரு தலைமகளை மணப்பதற்கு முன் தலைவனுக்குப் பரத்தையர்பால் தொடர்புண்டு. அப்பரத்தை யாரெனின் அவனுக்கென்று அவன் பெற்றோர்களால் விடுத்து வளர்க்கப்பட்டவள். குரவர் பணியைக் கொள்ளுதல் கடன் என்ற நன்நோக்கத்தால் தலைவன் அப்புறமகளிர்களை நயப்பான் காதலாடுவான்"[11] என இறையனார் அகப்பொருள் உணர்த்தும். இதனை வ.சுப.மாணிக்கனார், "இறையனார் அகப்பொருள் உணர்த்துவது தமிழ்

மரபொடு ஒவ்வாது"[12] எனக் குறிப்பிடுவது இங்குச் சுட்டத்தக்கது. "தன்வயின் உரிமையும் அவன்வயின் பரத்தையும் என்ற களவியல் நூற்பாவிற்கு உரையெழுதும் இளம்பூரணர் 'பரத்தை' என்பதற்கு அயன்மை எனப்பொருள் கொண்டமை நோக்கற்பாலது. 'பரத்தையர்' என்பதற்கு அயலார் என்று பொருள் கொள்வது தவறாகாது. அயலாந்தன்மை எனப் பாட்டுந் தொகையும் பொருள் கொள்ளும்"[13] என்பர் சிலம்பு நா.செல்வராசு.

தலைவி உலகியல் நடப்புத் தெரிந்தவள். களவில் நாட்டமுள்ள தலைவன், திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருவதால் உள்ளத்தில் உண்டாகும் ஐயப்பாட்டை வெளியிடுகிறாள். கற்பில் வருவதைப் போல பரத்தையர்பால் கொண்ட தொடர்பினால் வரும் ஊடலைப் போல அல்லாமல்; பரத்தையர்பால் தொடர்பு இருப்பதினால்தான் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறான் என்ற ஐயப்பாடு தானே தவிர, தலைவனுக்குத் திருமணத்திற்கு முன் பரத்தையர் தொடர்பு உண்டு என்று தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. அவ்வாறு உண்மையாகப் பரத்தையர் தொடர்பு இருந்திருக்குமேயானால், தோழி அதனைத் தடுத்திருப்பாள்; அங்ஙமின்றி தலைவனின் தவறை எடுத்துரைத்திருப்பாள். எந்தவொரு இடத்திலும் தோழியும் ஏனையோரும் களவில் தலைவனின் பரத்தமைப்பற்றிக் கூறவில்லை. அவன்வயின் பரத்தை என்பது தலைவி தன் நெஞ்சிற்குத் தானே உரைத்துக் கொள்ளும் ஐயப்பாடு என்பது தெளிவாகிறது.

புலவியில் மனைவி உயர்வு

"மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய"

(தொல். பொருள்.பொருளி.33)

கற்புக் காலத்துத் தலைமகட்குரியதோர் மரபு உணர்த்திற்று. தலைமகள் உயர்வும் தலைமகன் தாழ்வும் ஆராயுங் காலத்துப் புலவிக் காலத்து உரியவென்றவாறு. எனவே ஒழிந்த ஊடல் துனியென்பனவற்றிற்குரியவாம் என்பர் இளம்பூரணர்.

"ஒருஉக் கொடியியல் நல்லார் குரனாற்றத் துற்ற

............ ............... ................ .................

ஆயிழாய், நின்கண் பெறினல்லால் இன்னுயிர் வாழ்கல்லா
என்கண் எவனோ தவறு" (கலித். 88)

தலைவனும் தலைவியும் உறழ்ந்து பேசுவது இது.

"தலைவி : கொடிபோலும் இயல்புடைய பரத்தையரின் மணப்பொருள் கலந்த, மயிர் முடியினின்றும் உதிர்ந்த பூந்தாதுகள் நின் தோளில் இடப்பனவாய் இருக்க எம்மைத் தொட நீர் யார்? பிரிவாற்றாதவர் எல்லோரும் ஆற்றுபவரான ஆடவர்க்கு எளியரோ? என்னைவிட்டு நீங்குக.

தலைவன் : கோபமாய் இருப்பவர்க்குப் பதில் சொல்லத்தக்கவர் யார்?

தலைவி : நீ போகும் தொழிலைவிட்டு இப்போது உண்மையில்லாத பொய்களைச் சொல்லாதே. நின் பொய்யைக் கேட்டு மயங்குவாரிடத்துச் சென்று சொல்க.

தலைவன் : ஆயிழாய்! நின்கண் அருளைப் பெற்றாலன்றி உயிர் வாழாத என்னிடம் தவறு என்ன?

இதனுள் தலைமகன் பணிந்து தலைவி உயர்வுங் காணப்படுகிறது. காமக் கடப்பினுட் பணிந்த கிளிவியென (கற்பியல் - 19) மேற் கூறப்பட்டதாலெனின் ஆண்டுக் கூறியது ஊடல், புலவி, துனியென்று மூன்றிற்கும் பொதுப்பட நிற்றலின், இது புலவிக்கே உரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு காண்க என்கிறார் இளம்பூரணர்."[14] என்பர்.

இது கற்பினுள் தலைவற்குந் தலைவிக்கும் எய்தியதோர் வழுவமைக்கின்றது என்கிறார் நச்சினார்க்கினியர். புலவியுள் மனைவி உயர்வும் - புலவிக் காலத்துத் தலைவன் பணிந்துழி உட்கும் நாணுமின்றித் தலைவி அதனை ஏற்றுக் கோடலும் கிழவோன் பணிவும் - தலைவன் தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிதலும், நினையுங்காலை உரிய - ஆராயுங்காலை இருவர்க்குமுரிய என்றவாறு.

**"வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்**
**தலையுற முன்னடிப் பணிவான் போலவும்**
**கோதை கோலா விறைஞ்சி நின்ற**
**வூதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்"** (கலித். 128)

இது, முன்னே தலைவி மனத்து நிகழ்தலுண்மையிற் கனவிலுங் கண்டாளென்றுணர்க.

"தப்பினே னென்றடி சேர்தலு முண்டு" (கலித். 89)

என்பதும் அது. நினையுங்காலை என்றதால் தோழியுயர்வும் கிழவோன் பணிமொழி பயிற்றலுங் கொள்க.

"ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
லல்லார்கட் டோன்று மடக்குமு முடைய
னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடைய
னன்னா னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ கடரிழாய் பண்பாணும்"(கலித். 47)

இதனுள், தலைவன் இரந்துரைத்தவாறும் தான் அதனை ஏற்றுக் கொண்டவாறுங் காண்க. இச்சூத்திரம் புலவிக்கே கூறினார். ஊடற்குந் துனிக்குங் காமக்கடப்பின் (160) என்பதனுட் கூறினாரென உணர்க என்பர் நச்சினார்க்கினியர்"[15] என்பர். புலவி தோன்றும் காலத்து மனைவி உயர்வுடையளாக இருக்க தலைவன் பணிந்து செல்லும் மன உணர்வுகளை வெளிக் கொணர்வதை அறிய முடிகிறது.

"பயங்கெழு துணையணைப் புல்லிப் புல்லாது
உயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகி

அல்கல் முன்னிய நிறையழி பொழுதின்

மெல்லென் சீறடி புல்லிய இரவினும்

உறலருங் குரைமையின் ஊடன் மிகுத் தோளைப்

பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்"

(தொல். பொருள். கற்பு.5: 33-36)

பயங்கெழு துணையணைப் புல்லிப் புல்லாது உயங்குவனள் கிடந்த கிழத்தையைக் குறுகிய அல்கல் முன்னிய நிறையழி பொழுதின் மெல்லென் சீறடி புல்லிய இரவினும் என்பது -- தலைவன் பரத்தையிற் பிரிந்துழி ஊடற் கருத்தினளாயப் பயங்கெழு துணை அணையைப் புல்லிப்புல்லாது வருந்திக் கிடந்த தலைவியைக் கிட்டித் தங்குதலைக் குறித்த நிறையழிபொழுதில் தலைவியது மெல்லென்ற சீறடியைப் புல்லிய இரத்தற்கண்ணும் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு.[16]

உறலருங்குரைமையினூடன் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற்கண்ணும் என்பது ஊடல் மிகுத்தோளை உறுதற்கருமையாற் பிறபிற பெண்டிர் ஏதுவாக ஊடல் உணர்தற் கண்ணும் என்றவாறு[17]

தலைவன் ஊடல் தீர்க்கவும் அதன் வழி வாராத ஊடலுற்றோள்வயின் அவ்வூடலைத் தீர்த்தல் வேண்டி தலைவன் பக்கத்தாளாகி நின்று தலைவனை வெகுண்டு நின்றுண்டாக்கிய தகுதிக் கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு

"உறுதகையில்லாப் புலவியின் மூழ்கிய

கிழவோள் பால்நின்று கெடுத்தற்கண்ணும்

உணர்ப்புவயின்வாரா ஊடலுற் றோள்வயின்

உணர்த்தல் வேண்டிய கிழவோன் பால் நின்று"

(தொல். பொருள். கற்பு.9:18-21)

மேற் சொல்லியவாற் தலைவன் பிழைத்தவழி அவனால் உறுந்தகைமையில்லாத புலவியின் மூழ்கிய தலைவி பக்கத்தாளாகி நின்று அதனைக் கொடுத்தற்கண்ணும்[18]

"உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்

புலத்தலும் ஊடலும் கிழவோற்குரிய"

(தொல். பொருள். கற்பு.15)

புலவி அண்மைக் காலத்தது, ஊடல் அதனின் மிக்கது.

"புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்

சொலத்தகு கிளவி தோழிக் குரிய"

(தொல். பொருள். கற்பு.16)

"அவன் குறிப்பறிதல் வேண்டியுங் கிழவி

அகமலி யூடல் அகற்சிக் கண்ணும்

வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறுமே"

(தொல். பொருள். கற்பு.18)

தொல்காப்பியர் அக்கால மக்கள் வாழ்க்கை முறைகளை அடியொற்றிப் பொருளிலக்கணம் வகுத்துள்ளார். வாழ்க்கை அக வாழ்க்கை, புற வாழ்க்கை என இருபாற்பட்டமைவது. அகம், புறம் பற்றிய கோட்பாடுகள் தொல்காப்பியரால் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தலைவன் பரத்தையர் இன்பம் காரணமாகத் தலைவியைப் பிரிந்தொழுகும் வழி, அத்தலைவனுக்குப் புலவி, ஊடல் முதலியன நிகழ்வது மருதமாகும் என்றவழி பரத்தை - காமக்கிழத்தி பற்றி அறிதல் வேண்டும். தொல்காப்பியர் பரத்தை — காமக்கிழத்தி என்ற இருவரைப் பற்றியும் சுட்டியுள்ளார். தலைமகன் கூற்றுக்குரிய களங்களில் பரத்தை காரணமாகக் கூற்று நிகழும் என்பர்.

**"பரத்தையின் அகற்சியிற் பரிந்தோட் குறுகி**

**இரத்தலும் தெளித்தலும் என இரு வகையொடு**

**உரைத்திற நாட்டம் இளவோன் மேன"** (தொல். 98)

கற்பியலில் காமக்கிழத்தியர் கூற்றுக்குரிய களன்களைக் குறிப்பர்."[19] களன் சுட்டுங்கால் பரத்தையருக்குச் சுட்டவில்லை.

காமக்கிழத்தியராவார் பின்முறை ஆக்கிய கிழத்தியர். அவர் மூவகைப்படுவர். ஒத்த கிழத்தியரும், இழிந்த கிழத்தியரும் வரையப்பட்டாரும் என. ஒத்த கிழத்தியர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல் இழிந்தாராவார். அந்தணர்க்கு அரச குலத்தினும், அரசர்க்கு ஏனையிரண்டு குலத்தினங் கொடுக்கப்பட்டாரும், வரையப்பட்டார் — செல்வராயினார். கணிகைக் குலத்தினுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரைந்து கோடல் அவர் கன்னியில் வரையப்பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இருவகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற்காகக் கிழத்தியர்பாற்பட்டனர். பரத்தையராவார் யாரெனின், அவர் ஆடலும் பாடலும் வல்லராகி அழகுமிளமையுங் காட்டி இன்பமும் பொருளும்

வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதார். இவருள்ளும் ஒருவரைப் பற்றி மறுதலைப் பெண்டிரைச் சார்த்திக் கூறுவனவும் காமக்கிழத்தியர் கூற்றின்பாற்படும்.

**'புல்லுதல் மயக்கும் புலவிக்கண்ணும்'**

(தொல். பொருள். கற்பு.10:1)

புல்லுதலைக் கலக்கும் புலவி மாட்டும் காமக்கிழத்தியர் கூற்று நிகழும். அஃதாவது முதிராத புலவி மாத்திரமாகிய புணர்ச்சியையுடன்பட்ட நெஞ்சத்தளாதல்."[20]

**'தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்**

**பல்லாற்றானும் ஊடலில் தகைத்தலும்'**

(தொல். பொருள். கற்பு.27: 1-2)

முன்புள்ளோர் இவ்வாறு செய்வரெனக் கூறுதல். நுகர்ச்சி இவ்வாறு இனிய தொன்றெனப் புகழ்தல். பல நெறியானும் ஊடலினின்றுந் தலைமகளை மீட்டல்; அஃதாவது இவ்வாறு செய்தால் குற்றமென்றானும் அன்புடையார் செய்யாரென்றானும் மனைக்கிழத்தியர் செயலன்று என்றானும் கூத்தர் உரைப்பது.

"உடலுக்கு ஒரு பெயர் கூடு என்பது. கூடுவிட்டு இங்கு ஆவிதான் போன பின்பு என்பதில் வரும் கூடு உடல் இல்லையா? குடம்பைத் தனித்தொழியப் புள் பறந்தற்றே என்பதில் வரும் குடம்பையும் கூடு தானே! கூடும் கூடும் (உடலும் உடலும்) ஒன்றுதல் கூடல். கூடும் கூடும் கூடாமல் ஓர் எண்ணம் ஊடு தடுத்திருத்தல் ஊடல். ஆதலால் உடனிருந்தும் பிரிதல் ஊடல் ஆகின்றது. ஆகவே அகவாழ்வில் நம்

முந்தையர் கொண்டிருந்த தெளிந்த கருத்தும் அறிவுறுத்தமும் பாராட்டுக்கு உரியவையாம்."[21] என்பர்.

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாட்டி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப
பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரிபின்றஃ தென்மனார் புலவர்

(தொல். பொருள். கற்பு.52:)

பரத்தையர்மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து. அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம் பெயர்தல் இல்லை. சங்ககாலத்தில் நாடு கடந்தோ, கடல் கடந்தோ பரத்தையற் பிரிவு நிகழவில்லை என்பது பெறப்படுகிறது.

நால்வர்க்கும் உரித்து என்றமையான் நான்கு வருணத்துப் பெண்பாலரும் அவனோடு ஊடப்பெறும் என்றவாறுமாம். "பரத்தையர் மாட்டு வாயில்விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம் பெயாதல் இல்லை என்றவாறு. எனவே தன்னூரகத்துஞ் சார்ந்த விடமுங் கொள்க. நால்வர்க்கும் உரித்து என்றமையான் நான்கு வருணத்துப் பெண்பாலரும் அவளொடு ஊடப் பெறுப என்றவாறுமாம் என்பர் இளம்பூரணர்.

இது தலைவர்க்குரிய தலைவியின் பலருந் தலைவன் பரத்தமை காரணமாக ஊடற்குரியரென்பதூஉம் அவரிடத்து வாயில் சேறற்குரியரென்பதூஉங் கூறி வழுமைக்கின்றது.

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து. தலைவன் பரத்தைமையால் தலைவிக்குள் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய வாயிலை அவர்பாற் செலுத்துதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து, அஃது நிலத்திரிபு இன்று என்மனார் புலவர் - அவ்வொழுக்கம் பெரும்பான்மை மருத நிலத்தினின்று திரிந்து வருதல் இன்றென்று கூறுவர் புலவர் என்றவாறு.

'பரத்தை' வாயில் என்றது 'குதிரைத்தேர்' போல நின்றது. இதனாற் பயன்: அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரிய வாயில்' விடுவரென்பதூஉம், அவர்வயின் மறுத்தலும் நேர்தலும் உடையரென்பதூஉம் ஏனைப் பரத்தையர்க்கு வாயில் விடுதல் இன்றென்பதூஉம் கூறியவாறாயிற்று என்பர் நச்சினார்க்கினியர்.

இற்கிழத்தியாகிய தலைவியேயன்றி மற்றவரும் தலைவன் தம்மையன்றி மற்றவரும் தலைவன் தம்மையன்றிப் பிறள் ஒருத்தியை விரும்பின் அதனை அயன்மை (பரத்தைமை) யொழுக்கமாகவே கருதுவர் என்பதும், அதனால் அவர் ஊடல் கொண்டவழித் தலைவனால் வாயில் அனுப்பப் பெறுவர் என்பதும் பெற்றாம்"[22] என்பர் ஆ.சிவலிங்கனார்.

**"தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்**

**மெய்ம்மையாக அவர்வயி னுணர்ந்தும்**

தலைத்தாட் கழறல்தம் எதிர்ப்பொழு தின்றே

மலிதலும் ஊடலும் அவையலங் கடையே"

(தொல். பொருள். பொருளி.41)

பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகட்குக் கூறியவழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்து வைத்துந் தலைமகன் மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்ட பொழுது இல்லை, மகிழ்ச்சியும் புலவியும் அல்லாத காலத்து என்றவாறு.

கூறினும் என்ற உம்மை எதிர்மறை. கூறாமை பெரும்பான்மை. அதனை ஐயப்படாது துணிதலான் மெய்ம்மையாக வென்றார். அதனைத் தலைமகன் வந்தவழிக் கூறுவாளாயின் தனக்குப் புணர்ச்சியிற் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறியவதனாற் பயனில்லையாம். அதனைக் கலவியிறுதியினும் புலவியினும் கூறப்பெறும் என்றவாறு.

பரத்தையர் தலைவனால் தாம் உற்ற பிரிவுத் துன்பத்தைத் தன்னிடம் கூறினாலும், அவரிடம் அத்துன்பம் உண்டெண்பதை உண்மையாக உணர்ந்தாலும் அவரின் நீங்கித் தலைவன் தன்னிடம் எதிர்ப்பட்ட அப்பொழுதே அவன் முன்னிலையில் அவனைக் கழறியுரைக்கும் கூற்று இல்லை. புணர்ச்சியிறுதியும் புலவிக் காலமும் அல்லாவிடத்து என்றவாறு. எனவே புணர்ச்சி இறுதியிலும் புலவியிலும் கழறுதல் உண்டு. கழறுதல் என்பது தலைவனது பரத்தைமையைச் சுட்டி இடித்துரைத்தலாகும்.

**"இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்**

**உவம மருங்கின் தோன்றும் என்ப"**

(தொல். பொருள். உவம.30)

மகிழ்ச்சி பயக்குங் கூற்றும், புலவி பயக்குங் கூற்றும் உவமப் பக்கத்தால் தோன்றும் என்றவாறு. துனி என்ற சொல்லிற்கு இளம்பூரணர் புலவி என்ற சொல்லினைப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**வருத்தமும் இரக்கமும்**

**"வருத்த மிகுதி சுட்டுங் காலை**

**உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்"**

(தொல். பொருள்.பொருளி.32)

வருத்தமிகுதியைக் குறித்தவழி மனை வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென்று சொல்லுவர் என்றவாறு. எனவே வருத்த மிகுதியைச் சுட்டாதவழி மனை வாழ்க்கையுள் இரக்கம் இனறெனக் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர்.

வருத்தமிகுதி சுட்டுங்காலை - தோழியும் அறிவரும் பரத்தையிற் பிரிவால் தலைவர்க்குந் தலைவியர்க்குந் தோன்றிய வருத்த மிகுதியைத் தீர்க்கக் கருதிக் கூற்று நிகழ்த்துங் காலத்து, வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென மொழிப - அவரது இல்வாழ்க்கை நிகழ்ச்சிக் கண்ணே தமக்கு வருத்தந் தோன்றிற்றாகக் கூறுதலும் உரித்தென்று கூறுவாராசிரியர் என்றவாறு என்பர் நச்சினார்க்கினியர்.

இந்நூற்பா மனை வாழ்க்கையில் அவரவரும் தத்தம் வருத்தத்தைத் தெரிவிக்கும் இடம் கூறுகின்றது

மனையறம் நிகழ்த்தும் காலத்தில் தத்தமக்கேற்படும் வருத்தத்தை வெளிப்படுத்தும் போது இரக்கக் கிளவி உரித்தாகும் என்று சொல்வர் புலவர் என்றவாறு.

தலைவன் பிரிவு கேட்டவழி அவனிடம் தலைவி தான் உயிர் வாழாமை கூறுதல், தோழியும் அவ்வாறு தலைவி உயிர் வாழாள் எனக் கூறுதல், ஊடற் காலத்து ஊடல் நீட்டித்துழித் தலைவன் வருந்திக் கூறுதல், வாயில்கள் தலைவனிடமும் தலைவியிடமும் ஊடல் ஒழிய வேண்டி இரங்கிக் கூறுதல் முதலியன இரக்கக் கிளவியாகும்”[(23)] என்பர்.

ஊடல் தீர்க்க வேண்டி தலைவனும், பிற வாயில்களும் தலைவியிடம் இரந்து கூறி தங்களின் வருத்தத்தை வெளிப்படுத்துவதிலிருந்து இல்லறம் சிறக்க எடுத்துக் கொண்ட முயற்சிகள் தெரியவருகின்றன.

**பரத்தையை ஏத்தல்**

**“கற்புவழிப் பட்டவள் பரத்தையை ஏத்தினும்**

**உள்ளத்தூட லுண்டென மொழிப”**

(தொல். பொருள்.பொருளி.39)

“கற்புக் காரணமாகத் தலைமகனது பரத்தைமைக்குடன்பட்டாளே யாயினும், உள்ளத்தின்கண் ஊடல் நிகழும் என்றவாறு என்று இளம்பூரணரும், கற்பு வழிப்பட்டவள் - கற்பின் வழி நின்ற தலைவி,

பரத்தை ஏத்தினும்-பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும், உள்ளத்து ஊடல் உண்டென மொழிப-உள்ளத்துள்ளே ஊடின தன்மை உண்டென்று கூறுவர் புலவர் என்றவாறு. பரத்தையை ஏத்தவே தலைவன்கட் காதலின்மை காட்டி வழுவாயிற்றேனும் உள்ளத்தூடலுண்மையின் அமைக்கவென்றார் என்பர் நச்சினார்க்கினியர்.

தலைவி தான் கற்பு வழிப்பட்டவளாய்த் தலைவன் பரத்தைமையை உடன்பட்டுப் பரத்தையை அவனிடம் புகழ்ந்துரைத்தாலும் அவள் உள்ளத்தில் ஊடல் உண்டு எனக் கொள்ளல் வேண்டும் என்பது இதனாற் கூறப்பட்டது"[24] என்பர் ஆ.சிவலிங்கனார்.

பெரும்பாலாலும் குடும்பப் பண்பினைப் பெற்றவள் சங்ககாலப் பரத்தை. தெருவில் விளையாடும் தலைவனின் மகனை மார்போடு எடுத்தணைத்துக் கொண்டு தன் குழந்தையென மெய்தீண்டி இன்புறும் பரத்தையைக் கண்ட தலைவி, இம்மகனுக்கும் நீயும் தாய்தான் என்று கூறுவதிலிருந்து பரத்தையை ஏத்திக் கூறி, கடிந்து கொள்ளாமல் உரைத்தாலும் தலைவியின் உள்ளத்தில் ஊடல் இருப்பதாக உரைக்கின்றனர். கற்புவழிப்பட்டவள் தலைவி என்ற சொல்லாட்சியினை நோக்கும் போது, அவளின் கற்பினைக் காட்டுவதற்காகப் பரத்தைமை நிகழ்ந்தாகக் கூறமுடியாது. "பெண்ணின் கற்பினைக் காட்டும் சான்றாக வேண்டுமென்று நாட்டிற் பரத்தைமை நிகழவில்லை. பரத்தைமை நிகழ்வை ஆற்றவும் பொறுத்துத்தான் பெண் தன் கற்புடைமையைப் புலப்படுத்த வேண்டும் என்பதில்லை. அதுபோல் இவள் ஊடலுக்காக

அவன் புறம் போவதும் அவனது புறப்போக்கை வைத்துத்தான் இல்லவள் ஊடுவதும் இல"[25] என்பர் வ.சுப.மாணிக்கம்.

**குறிப்புணர்தல்**

> ***"கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறிக்***
> ***கிழவோள் குறிப்பினை உணர்தற்கும் உரியள்"***
>
> (தொல். பொருள்.பொருளி.40)

தலைவி, தலைவனுடன் தொடர்புடைய பிறள் குணம் இவை என்று கூறி, அவன் மறுமொழியால், அவன் உள்ளக் குறிப்பினை உணர்வாள். "தலைவி மற்றொருத்தி குணம் இத்தன்மையள் எனச் சொல்லித் தலைமகன் குறிப்பினையறிதற்குமுரியள் என்றவாறு என்று இளம்பூரணரும், இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது. உள்ளத்தூடலின்றியும் பிறளொருத்தியைத் தலைவி புகழுமென்றலின். கிழவோள் பிறள் குணம் இவையெனக் கூறித் தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத்தன்மையவென்று தலைவற்குக்கூறி, கிழவோன் குறிப்பினை அறிதற்கும் உரியள்-அவள் மாட்டு இவன் எத்தன்மையனாயிருக்கின்றா னென்று தலைவன் குறிப்பினை உணர்தற்கு முரியள் என்றவாறு. பரத்தையென்னாது 'பிறள்' என்றதனால் தலைவியேயாயிற்று; அன்றிப் பரத்தையாயின் ஊடலின்மை அறனன்றாகலின் உள்ளத்தூடல் நிகழ்பவை வேண்டும். தோழி கூறுங்கால் தலைவியரைக் கூறப்பெறாளென்பதூஉம் பரத்தையரைக் கூறின் அவர்க்கு முதுக்குறைமை கூறிக் கூறுவளென்பதூஉம் கொள்க என்பர் நச்சினார்க்கினியர்"[26] என்பர் ஆ.சிவலிங்கனார்.

தலைவனின் உள்ளத்தில் பரத்தைமை உணர்வு உள்ளதை அறிந்து கொள்ளும் வகையில் தலைவி பிற பெண்களின் குணங்கள் இத்தகையன எனக் கூறி தலைவனின் குறிப்பினை உணர்கிறாள். தலைவியின் உள்ளத்தில் ஊடல் இருப்பதை இது காட்டுகிறது என்பதும் பெறப்படுகிறது.

*"தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி*
*எங்கையர்க்கு உரை என இரத்தற் கண்ணும்,*
*செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்*
*காமக்கிழத்தி தன்மகத் தழீஇ*
*ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்,*
*சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி*
*அறம்புரி நெஞ்சமொடு தன்வரவு அறியாமைப்*
*புறம்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்*
*தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்*
*அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்*
*கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது*
*நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்*
*பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்*
*கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி*
*அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்*
*காதல் எங்கையர் காணின் நன்று என*
*மாதர் சான்ற வகையின் கண்ணும்*
*தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை*
*மாயப் பரத்தை உள்ளிய வழியும்,*
*தன்வயின் சிறைப்பினும், அவன்வயின் பிரிப்பினும்"*

(தொல்.பொருள்.கற்பு. 6: 7-15)

விரும்பிய உள்ளத்தோடு புதுப்பெண்டிரைச் சார்ந்து அகன்ற தலைவனை, தனிமை மிகுதியை உணர்ந்து நெஞ்சத்தை உறுதிப்படுத்திக் கொண்டு அவனை எதிர்பெய்தது கூட மறுத்த அன்பின் காலத்தும், புற ஒழுக்கத்தில் தங்கிய தலைவனை நீ உன் அன்பை என் தங்கையராகிய பரத்தையர்க்குக் கூறுக என இரந்து வேண்டுதற்கண்ணும், அவரிடம் செல்லாத காலத்தும் செல்க என விடுத்தல் கண்ணும், காமக்கிழத்தித் தன் குழந்தையைத் தழுவி விளையாடிய காலத்தும், அவ்விடத்தே தோன்றிய தலைவன் இல்லறம் புரியும் எண்ணத்துடன் அவளிடம் ஊடலைப் போக்க விரும்பிய இடத்தும், தந்தையைப் போன்றவன் மகன் என மகனைப் பழித்துக் கூறுவது போன்று கூறும் போதும், கொடுமையுடையோர் கொடுமை அவரையே பின்னர் சுடும் என்ற பழமொழியை மனத்துட் கொண்டு தலைவனது புகழை விரும்புவரோடும் சேர்ந்து, நின்ற தகுதிக் கண்ணும், தனது கொடிய ஒழுக்கத்தைப் பொறுத்தக் கொள்ளல் வேண்டும் எனத் தலைவி காலில் தலைவன் வீழ்ந்த போது, உம்முடன் காதலலுடைய எம் தங்கையர் இதைக் காணின் நன்று எனக்கூறும் போதும், தன் புதல்வனுக்கு அணிகலன்களை அணிந்து அனுப்பிய பரத்தையரை நினைத்த போதும் தலைவிக்கு ஊடலின் போது கூற்று நிகழுமிடங்களாகக் குறிப்பிடப்படுகிறது.

ஊடலை புலவோர், படிப்போர் இன்பக் கிளர்ச்சி அடைய வேண்டின் அகத்திணையைப் படைக்கவில்லை என்பதும் அவ்வாறிருப்பின் தலைவன், தலைவி காதலை மட்டும் பாடாது, தோழி காதல், பாங்கன் போன்றவற்றையும் படைத்திருப்பர். தலைவன் தலைவியிடையே

ஏற்படும் உண்மை அன்பின் உட்பொருளை உளவியல் நோக்கோடு புலவர்கள் கொண்டுவந்துள்ளனர். "தலைவன் எத்துணைக் கொடுமை செய்யினும் தலைவி தன் கற்பினின்று சிறிதும் கலங்காள் என்பதனை வெளிப்படுத்துவதற்கே பரத்தைமையைப் புலவர் புனைந்துரைத்தனர் என்பது ஒரு கருத்துரை (கலித்தொகை சொற்பொழிவுகள், ப.13)"(27) என்பர் வ.சுப.மாணிக்கனார்.

**நம்பியகப் பொருள்**

கற்பு என்பது ஊடலும் ஊடலுணர்தலும் என்பதை,

***"பொற்பமை சிறப்பிற் கற்பெனப்படுவது***
***மகிழ்வும் ஊடலும் ஊடலுணர்தலும்***
***பிரிவும் பிறவும் மருவியதாகும்"*** (நம்பியகப்பொருள்.200)

என்று நம்பியகப்பொருள் குறிப்பிடுகிறது. பொலிவமைந்த சிறப்பினையுடைய கற்பென்று சொல்லப்படுவது மகிழ்ச்சியும் ஊடலும் ஊடலுணர்த்தலும் பிரிவும் பொருந்தியதாம் என்றவாறு"(28) என்கிறது அகப்பொருள் விளக்கம்.

உணர்த்த உணரும் ஊடற்குரிய கிளவிகள் என்று கூறுமிடத்தில்,

**"காதலன் பிரிவுழிக் கண்டோன் புலவிக்**
**கேதுவீ தாமிவ் விறைவிக் கென்றலும்**
**தனித்துழி இறைவி துனித்தழு திரங்கலும்**
**ஈங்கிது என்னெனப் பாங்கி வினாதலும்**

இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தலும்
தலைவியைப் பாங்கி கழறலும் தலைவி
செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி
அவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறலும்
பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தையர்
உலகிய னோக்கி விடுத்தலிற் றலைவன்
வரவுகண் டுவந்து வாயில்கள் மொழிதலும்
வரவுணர் பாங்கி அரிவைக் குணர்த்தலும்
முதிரா மென்முலை யெதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியின் மகிழ்வுமென் றுரைத்த பண்ணோன்றும்
உணர்த்த உணரும் ஊடற் குரிய”

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏது ஈதாம் இவ்விறைவிக்கென்ரல் முதலாகப் புணர்ச்சியின் மகிழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினென்றும் உணர்த்தவுணரும் ஊடற்குரியவாம் என்றவாறு”[29] என்று நம்பியகப்பொருள் கூறுகிறது.

அவை மேலும்,

“வெள்ளணி யணிந்து விடுத்தவழிப் புள்ளணி
மலைவேல் அண்ணல் வாயில் வேண்டலும்
தலைவிநெய் யாடிய திகுளை சாற்றலும்
தலைவன் தன்மனத் துவகை கூறலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
தலைவி உணர்ந்து தலைவனொடு புலத்தலும்

பாணன் முதலாப் பாங்கன் ஈறாப்

பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி

மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்

டிறையோன் மகிழ்தலும் இறைமகள் விருந்துகண்

டொளித்த வூடல் வெளிப்பட நோக்கிச்

சீரே லென்றவள் சீறடி தொழுதலும்இவ்

தெங்கையர் காணின் நன்றன் றென்றலும்

அங்கவர் யாரையும் அறியே னென்றலும்

காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்

தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்

தணியா ளாகத் தலைமகன் ஊடலும்

அணிவளைப் பாங்கி அன்பிலை கொடியையென்

றிணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவும்

உணர்த்த உணரா ஊடற் குரிய"

வெள்ளையணிந்து விடுத்துழித் தலைவன் வாயில் வேண்டல் முதலாகப் பாங்கி தலைவனை அன்பிலை கொடியையென்றிகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்டனவும், பிறவும் உணர்த்த உணரா ஊடற்குரியவாம் என்றவாறு"[30] என்று நம்பியகப்பொருள் ஊடல் பற்றிக் குறிப்பிடுகிறது.

"ஆயிழை மைந்தனும் ஆற்றா மையுமே

வாயி லாக வரவெதிர் கோடலும்

மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ

டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தலும்

தலைவனைப் புகழ்தலும் சிலைநுதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலும் இனையவை பிறவும்
அனைவகை மொழிந்த அதன்பாற் படுமே"

ஆயிழை மைந்தனும் ஆற்றாமையும் வாயிலாகத் தலைமகன் வந்துழித் தலைமகள் எதிர்கோடல் முதலாகப் பாங்கி மனைவியைப் புகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்டனவும், பிறவும் அத்தன்மைத்தாகிய உணர்த்த உணரா ஊடற்குரியவாம் என்றவாறு"(31) என்றுரைக்கிறது.

"கெவைல் பாணன் பாடினி கூத்தர்
இளையர் கண்டோர் இருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி அறிவர்
காமக் கிழத்தி காதற் புதல்வன்
விருந்தாற் றாமை யென்றிவை ஊடல்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்கள் ஆகும்" (நம்பியகப்பொருள்:67)

என்று ஊடல் தணிக்கும் வாயில்களைக் குறிப்பிடுகிறது.

**பரத்தையற் பிரிவின் வகை**

**அயல்மனைப் பிரிவு**

அயல்மனைப் பிரிவு, அயற்சேரிப் பிரிவு, புறநகர் போக்கு என்ற மூன்று பரிவுகளை நம்பியகப் பொருள் விளக்குகிறது.

அயல்மனை விரிதலாவது பொருந்திய காமக்கிழத்தியர் காரணமாகத் தலைமகன் தொடர்ந்து அயல்மனைக் கண்ணே பிரிவது. இதனை,

"கெழிஇய காமக்கிழத்தியர் பொருட்டத்
தழிஇய அயல்மனைத் தலைவன் பிரியும்"

என்று விளக்கும். (நம்பியகப்பொருள்:64)

**அயற்சேரிப் பிரிவு**

அயற்சேரிப் பிரிவானது வரைந்து சொல்லப்பட்ட பெதும்பை பருவக் கிழத்தியும் காதற்பரத்தையும் இனிய தன்மையுடைய விழவும் காரணமாகத் தலைமகன் அயற்சேரியின் கண்ணே பிரிதல். இதனை,

**“பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையும்**

**இன்னியல் விழவும் ஏதுவாக**

**அவனயற் சேரியின் அகலும் என்ப”** (நம்பியகப்பொருள்:65)

என்று விளக்குகிறது.

நம்பியகப்பொருளுக்கு விளக்கம் அளிப்பதற்காக இந்நூலாசிரியர், எல்லாக் கிளவிகளுக்குந் தஞ்சைவாணன் கோவைச் செய்யுட்களும், பல கிளவிகளுக்குந் தஞ்சைவாணன் கோவைச் செய்யுளோடு ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, திணைமொழி ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது முதலியவற்றை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

**வீரசோழியம்**

வீரசோழியம் மருதநடையியல் என்ற பகுதியில்,

**“புலவிகற் பொன்றால் நண்ணரிச் சீறல்**

**ஆற்றானாகி யவளெதி ரூடல்**

**தேற்றேனென்ற தொழித்துவழி படுதல்**

**வளவய லூரன் வதுவை கேட்டுளை**

உளநனி யடக்கி யுவந்தோள் போறல்
பண்ணி விடுதல் பான்மையின் மொழிதல்
எண்ணிய சிறப்பி னெங்கையொன் றிசைத்தல்
மனைச்செல் பரத்தையை மகிழ்ந்தெதிர் கோடல்
முனித்தக வின்மை முயன்றுபண் பெய்தல்
ஆயிடையவர்க ளமர்ந்தெதிர் கோடல்
போயவை தீண்டல் புகழ்த லேத்தல்
பள்ளியுள் மகிழ்தல் பாங்குறப் புணர்தல்
எள்ளருந் தோழி யேற்பக் கூறலெனச்
சொன்னவை போல வன்னவு மெல்லாம்
பன்னுங் காலை யவ்வயிற் படுமே"(32)

ஊடல் பற்றி வீரசோழிய பாடலடிகள் விளக்குகின்றன.

"காதலன்மே லூடல் கரையிறத்தல் காட்டுமான்
மாதர் நுதல்வியர்ப்ப வாய் துடிப்ப - மீது
மருங்கவளை விண்முரிய வாளிடுக நீண்ட
கருங்குவளை சேந்த கருத்து"

இம்மாதருடைய நெற்றி வியர்க்கவும், வாய் துடிக்கவும், பக்கங்கள் வளைந்த புருவங்களாகிய விற்கள் மேலே நெறிக்கவும், வாள்கள் தோற்கும்படி (கூர்மை.கொண்டு) நீண்ட நீலோபல மலர் போன்ற கண்கள் சிவந்ததன் குறிப்பு, இவர் தம்முடைய காதலன் மீது கொண்ட உடல் அளவிறந்து மிகுதலை உணர்த்தும். (வல்மீது முரிய என இயைக்க) நுதல் வியர்த்தல் முதலிய காரியங்களால் ஊடலாகிய காரணம் அறிவிக்கப்பட்டமையின் இது ஞாபக ஏதுவாயிற்று. (ஞாபகம்-

அறிவிப்பது)"[33] நுதல் வியர்த்தல் முதலியவற்றிற்கு ஊடல் ஏது (காரணம்) ஆம் என அறிக என்று ஏது அணியின் வகைகளில் ஞாபக ஏது பற்றி வீரசோழியம் குறிப்பிடுகையில் ஊடல் பற்றிக் குறிப்பிடுகிறது.

**சுவாமிநாதம்**

ஊடல் பற்றி சுவாமிநாதம்,

**"கற்பியலிற் பரத்தை, கல்வி, காப்பு (உ)தவி, தூது,**
**கைபொருளிற் பிரிவு ஆறு (உ)ண்டு; அதிற் காவல் பரத்தை**
**இற்பிரிவும் படுவம் இலைத்; தூது(உ)தவி பொருளிடைப்**
**பிரிவுஓ ராண்டு; கல்வி பிரிவு மூன்று ஆண்டாஞ்;**
**சொற்பிரிவால் ஊடல் உண்டாம் பாணர், இரு பாங்கர்**
**துணைவி, கண்டோர், பாகன், பாடினி, கூத்தர், இளையர்,**
**நற்புதல்வன், செவிலி, அறிவோர், காமக்கிழத்தி,**
**சார்விருந்தாற் றாமையிலவ் ஊடர்தீர் மருந்தே"**

என்று குறிப்பிடுகிறது.

பரத்தையிற் பிரிவு, ஓதற்பிரிவு, காவற் பிரிவு, அரசனுக்கு உதவிக்காகப் பிரிவு, தூதுவயிற் பிரிவு, பொருள்வயிற் பிரிவு எனக் கற்பின்கண் பிரியும் பிரிவு ஆறு வகைத்தாம். காவற் பிரிவுக்கும் பரத்தையிற் பிரிவுக்கும் குறிப்பிட்ட கால வரையறை இல்லை. தூதுவயிற் பிரிவு, உற்றுழிப் பிரிவு, பொருட் பிரிவு மூன்று ஆண்டுமாம். பிரிவால் ஊடல் உண்டாகும். பாணர், இருவகைப் பாங்கர், மனைவி, கண்டோர், பாகன், பாடினி, கூத்தர், இளையர், தன்னுடைய புதல்வர், செவிலி, அறிவோர், காமக்கிழத்தியர், விருந்து செய்தல் ஆகிய அனைத்தும்

ஊடலைத் தீர்க்கும் மருந்துகளாகும்”[34] என்று ஊடல் தீர்க்கும் வாயில்கள் பற்றிச் சுவாமிநாதம் குறிப்பிடுகிறது.

தலைவனும் தலைவியும் களவில் சந்தித்துக் கொள்ளும் குறியிடத்தில் அல்லகுறிபடுதலை சுவாமிநாதம்,

“இரவு இடையீடு அல்லகுறி; வரற்கு அருமை எனவாய்
இருளை இற வரவு உணர்த்தல், இறைவிதான் குறியின்
மருள்வது சாற்றுதல், இறைதீங்கெடுத்து இருளை இயம்பல்
மனன் புலந்து ஏகுதல், வளவின் வறுங்களம் கண்டு
இரங்கல்
துரமுறுதன் துணைக்கு உரைத்தல், அவள் அவலம் பாங்கி
தணித்தல், இறைமேற் பாங்கி குறி பிழைப்பு ஏற்றுதல்
கோன்
கருவிழிமேல் ஏற்றல், அவள் குறிமருட்சி சொலல், கோன்
கடுஞ்சொல் அவட்கு உணர்த்தல், கவன்று என் பிழைப்பு
அன்று எனவே”

என்கிறது. இரவுக்குறி இடையீடு என்பது, அல்லகுறியும் (குறியில்லாத போது உண்டாகும் போலிக்குறி), வருவதற்கு அருமையும் (வருவதற்குரிய துன்பம்) என இரண்டு வகையினை உடையது. 1. தோழி தலைவன் வந்திருப்பதைக் கூறுதல், 2. தலைவி தான் குறி அஞ்சியதைக் கூறுதல், 3. தோழி தலைமகனுக்குரிய தீங்கு எடுத்துக் கூறுதல், 4. தலைவன் மனம் வருந்திப் போதல், 5. பொழுது விடிந்த பிறகு வறுங்களம் கண்டு தலைவி வருந்துதல், 6. தன்னுடைய தோழிக்குக் கூறுதல், 7. தலைவியின் துன்பத்தைத் தோழி தணித்தல், 8 குறி தவறியது தலைவனால் ஏற்பட்டது என்று தோழி கூறுதல், 9. தலைவி மேல் தலைவன் குற்றம் சாட்டுதல்,

10.தலைவி குறி மருண்டமையைத் தோழி தலைவனுக்குச் சொல்லுதல், 11. தலைவன் கூறிய கடுஞ்சொல்லைத் தலைமகளுக்குத் தோழி உணர்த்துதல், 12. தலைவி தன்னுடைய தவறு இல்லை என்று கூறுதல்"[35] என்று சுவாமிநாதம் குறிப்பிடுகின்றது.

> **"மேவவேண்டுதல், மறுத்தல், மகிழ்தல், வினா நேர்தல்,**
> **விடுத்தல், அறு வகைப்பரத்தைப் பிரிவாகும்; அதனிற்**
> **காவலன்நீங் குழிப்புலவிக்கு இவட்கு ஏது இது என்றே**
> **கண்டோர் கூறுதல், தனித்த தலைவி தனித்து இரங்கல்**
> **ஓஇதுஎன் னெனத் தோழி வினவல், இறை புறத்தின்**
> **ஒழுக்கு இறைவி சொலல், பாங்கி கழறுதல், செவ்வணியைப்**
> **பாவைசே டியர்க்கு அணிதல் அணிந்துவிடல், அணியூர்ப்**
> **பார்த்து அழுங்கல், கண்டு பரத்தையர்கள் பழித்திடலே"**

இது பரத்தையிற் பிரிவு உணர்த்துகின்றது.

தலைவன் நீங்குவதைக் கண்டோர்கள் தலைவியின் புலவிக்குக் காரணம் அதுதான் (அவன் பிரிவு) என்று கூறுதல், 2. தனித்து இருக்கும் போது தலைவனை வெறுத்து வருத்தப்படுதல், 3. வருத்தப்படுவது எதற்கு என்று தோழி விசாரித்தல், 4. தலைவனுடைய புற ஒழுக்கத்தைத் (பரத்தையிற் பிரிவு) தலைவி தோழிக்குச் சொல்லுதல், 5. தோழி பதில் சொல்லுதல், 6. செவ்வணி (பெண்கள் பூப்பெய்தியதை அறிவிக்க அணியும் சிவந்த மலர்) பாவை சேடியர்க்கு அணிதல், 7. அணிதலைப் பார்த்து ஊரார் வருந்துதல், 8. அதைக்கண்டு பரத்தையர்கள் பழித்தல்"[36] என சுவாமிநாதம் விளக்குகிறது.

உணர்த்த உணரும் ஊடல்

"பரத்தைஉல கியல், நோக்கிவிடல், விடலில் தலைவன்
படர்தல், கண்டு வாயில்கள்கூ றுதல், பாங்கி இறைவிக்கு
உரைத்தல், அவள் எதிர்கொண்டு பணிதல், புணர்ந் திடல்
பத்தொடு நான்கும் உணர்த்த உணர்ந்திடும் ஊடல் எனவாம்;
இரட்டுறும்வெள் ளணிஅணிதல், அணிந்துவிடல் விடுங்கால்
இறைவாயில் வேண்டல், நெய்யாடியதுஇருளை சாற்றல்
தரிப்பின்மனை மகிழ்ச்சிஅவன் சொலல், சகிகோன் வரவு
தலைவிக்குஓ துதல், அவள் ஓர்ந்து இறையோடு
ஊடுதலே"[37]

என உணர்த்த உணர்ந்திடும் வாயில்களையும் உணர்த்த உணரா ஊடற்குரிய கிளவிகளையும் கூறுகின்றது.

பரத்தை உலகியல் நோக்கித் தலைவனை விடுதல், அதனால் தலைவன் வீட்டிற்குச் செல்லுதல், அவன் வருதலைக் கண்டு துணையாக இருப்போர் (வாயில்கள்) கூறுதல், அதைத் தோழி தலைவனுக்குக் கூறுதல், தலைவி எதிர் சென்று பணிதல், இருவரும் சேர்ந்திடல் எனப் பதினான்கும் உணர்த்த உணரும் ஊடலுக்குரிய கிளவிகளாகும் என்கிறது. அகப்பொருள் உணர்த்த உணரும் ஊடற் கிளவிகள் பதினொன்று எனக் கூறியுள்ளது. சுவாமிநாதம் பதினான்கு எனக் கூறுகிறது.

உணர்த்த உணரா ஊடல்

"ஊடல்இலா மகவேந்தல் பாணன் முதல் வாயி
லோர் வேண்டல், மறுத்தல்முனிந் திடல், பழித்தல், அவர் போய்
நீடிடிறைவர்க்கு உரைத்தல், விருந் தொடுவருகாற் பொறுத்தல்

நீருபன்கண்டு உவத்தல் பின்னும் ஊடல்புறங் காட்டல்,
ஆடவன் ஊடலை நோக்கிச் சீறேல்என் றவள்சீர்
அடிதொழல்ஈது எங்கையர்கண் டிடில்நன்றன்று என்றல்
தோழியரை யும் அறியேன் எனல், காமக் கிழத்தி
செலக்கண்டு உணர்த்தல்சகி அவளைஆற் றுதலே”

ஊடல் கொள்ளாத மகவை எடுத்தல், பாணன் முதலிய வாயிலோர் வேண்டுதல், தலைமகள் வாயில் மறுத்தல், கோபித்தல், பழித்தல், பாணர் தலைமகனிடம் சென்று சொல்லுதல், தலைவன் அதைக் கண்டு மகிழ்ச்சி அடைதல், பின்னர் தலைவி ஊடுதல், புறங்காட்டுதல், தலைவன் தலைவியின் ஊடலைக் கண்டு கோபித்துக் கொள்ளாதே என்று அவள் அடியை வணங்குதல், இந்நிகழ்ச்சியைத் தன்னுடைய சகோதரியர் கண்டால் நல்லதல்ல என்று தலைவி கூறுதல், யாரையும் எனக்குத் தெரியாது என்று கூறுதல், காமக்கிழத்தி சென்றதைத் தான் பார்த்து உணர்த்தல், தோழி தலைவியை ஆற்றுதல்”(38) என்று உணர்த்த உணரா ஊடற்கிளவிகள் என சுவாமிநாதம் விவரிக்கின்றது.

உணர்த்த உளரா ஊடற் கிளவியில் ஒரு பகுதியும் ஊடற் கிளவியின் ஒரு பகுதியும் ஊடல் நீக்குதலுக்குரிய கிளவியும் விளக்குகின்றது.

“ஆறுகிலா, துஊடல்,பா லனைப் பழித்தல், அதுகண்
டவன்ஊடல், கொடியையெனச் சகிஅவனை இகழ்தல்,
கூறுஇருபா னாறு உணர்ந்த உணரா ஊடலதாம்,
கோதைமைந்தன், ஆற்றாமை வாயில்களாய் வருங்கால்
தேறிஎதிர் கொளல், மணத்தல், மணந்தவன்போ கியபின்
சேர்த்துபுதல் வனைப்புகழ்தல் சகி அவளைப் புகழ்தல்,

ஏறியநாற் றுறைஉணரா ஊடல்நீக் குதலாம்

இவைநாற்பான் நான்குமதன் விரிவெனப்பே சுவரே”

பொறுத்துக் கொள்ளாது ஊடல், மகனைப் பழித்தல், அதைக்கண்ட தலைவன் ஊடல், கொடியவன் என்று தோழி தலைவனைக் கூறுதல் என்ற இருபத்தாறு கிளவியும் உணர்த்த உணரா ஊடலுக்குரிய கிளவிகளாய்ப் பரத்தையிற் பிரிவின்கண் நிகழும். மகனும் (தந்தையின் பிரிவைப்) பொறுத்துக் கொள்ளாததன் காரணமாகத் தலைவன் வீட்டிற்கு வரும் போது தலைவியின் மனம் அமைதிப்பட்டு ஏற்றுக் கொள்ளுதல், மணத்தல், புணர்ந்து நீங்கியபின் தலைவனைத் தன்னோடு சேர்தற்குக் காரணமான புதல்வனைப் பாராட்டுதல், தோழி தலைவியைப் புகழ்தல் என்ற நான்கும் ஊடல் நீக்குதற்குரியன. உணர்த்த உணர்த்திடும் ஊடலுக்குரிய பதினான்கு வகையும் உணர்த்த உணரா ஊடலுக்குரிய இருபத்தாறு வகையும் ஊடல் நீக்குதலுக்குரிய நான்கு வகையும் சேர்த்து வரும் நாற்பத்து நான்கு வகையும் பரத்தையிற் பிரிவிற்குரிய விரியாகும்”(39) என்று சுவாமிநாதம் ஊடல் பற்றி இயம்புகின்றது.

### அகராதிகள் கூறும் ஊடல்

கணவன் மனைவியரிடையே ஏற்படும் காதற்கலாபத்தைப் பொதுவாக ஊடல் என்ற சொல்லாற் குறித்தல் இலக்கிய மரபாகும். ஊடல் - **(Courtship)** “காதலர்களிடையே அல்லது கணவன் மனைவிக்குள் ஏற்படும் சிறு பிணக்கு”(40) **(Fit of sulkiness as between lovers)** என்கிறது க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி. ஊடலைக் குறிக்க ஊடல், புலவி, துனி என்ற மூன்று சொற்கள் பயனில் உள. “ஊடலென்பது உள்ளத்து

நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழியானன்றிக் கூற்று மொழியானுரைப்பது"[41] என்பர் பேராசிரியர்.

கணவன் மனைவியரிடையே நடைபெறும் அன்புப் பூசலை, **(Love quarrel from jealously, appropriate to the agricultural tracts, one of the five Uri-p-porul)** மருதத்திணையின் உரிப்பொருளுள் ஒன்றாகிய புலவி (நம்பியகப்பொருள்.25) என்றும், **Pleasure derived from reunion after sulking, from temporary variance and huff between husband and wife,** புலவியின் பின் கூடலால் நிகழும் மகிழ்ச்சி என்றும் உரைக்கிறது. தலைவன் தலைவிக்குள் உண்டாகும் பிணக்கு; புலவி; துனி; கலவியிற் பிணங்கல்; பிரிவு; பகைத்தல்; வெறுத்தல்; ஊடுதல் என்று கழகத் தமிழகராதி கூறுகிறது. "காதலர்க்கிடையே எழும் அன்புப் பூசல். பிரிந்து சென்ற போது இன்னாத காட்டிடையே துயின்றேனாக, ஒரு பெண்மான் தோன்றினாற் போலத் தோன்றிக் குனிந்த நோக்கோடு கைவளை கழலாமற் செறித்து நிலத்தைக் கிளைத்து நின்ற நின்னைக் கண்டு, யான் நின்பால் பேரன்பு பூண்டிருக்கவும் நினக்கு என்னிடத்து எவ்வாறு ஊடல் வந்தது என்று நின் புருவத்தையும் நுதலையும் நீவிக் கூந்தலைத் தைவந்த போது கண்விழித்துக் கனவென உணர்ந்து பின் ஏங்கிக் கவன்றேன் எனத் தலைவன் தலைவியிடம் இயம்பினான் (அகம்.39:15-24).

நற்றோள் நெகிழும்படி எம்மை நீர் மறத்தற்கு யாம் நும்மையன்றி வேறு விளையாட்டயரத் தொழிலையும் நும்மையின்றிப் பிரிந்து தங்கச் சோலையையும் நும்மை நினைக்கலாகாது வருந்தும் நெஞ்சினையும் நும்மிடம் ஊடுதலையும் உடையமோ என்று தோழி தலைவனிடம்

கூறுதல் (நற்.131: 1-3, 9). என்னிடத்தே நிகழும் பிரிவுத் துன்பமெல்லாம் செய்மையில் நீங்கத் தலைவன் வந்துகூடி யான் கொண்ட புலவியைப் போக்குமாறு என்னைப் பணிந்துரைத்தல் முதலிய வன்மையைச் செய்தலான் அவன் பெரிதும் இனியனாயினும் அவனிடத்தே யான் வருத்தம் மேற்கொண்டது போல் ஊடல் கொள்வேன் என்று தலைவி தோழியிடம் கூறுதல் (நற்.217: 5-9). மணங்கமழ்கின்ற கூந்தலுடைய மகளிரிடத்துண்டாய ஊடலை அது தோன்றிய பொழுதே தலைவன் வணங்கித் தீர்த்தான் (கலி.131: 39-40).

ஊடல் உணர்த்தவல்ல வாயில்கள் இரந்தும் பரந்தும் வருந்தி ஊடலுணர்த்தத் தலைவனும் காதற் பரத்தையும் கூடி மது பருகிக் களித்தனர்; களியால் வையையில் குளித்தனர்; குளித்துக் காம மிகுதியாற் கலந்து மகிழ்ந்தனர் (பரி.6:101-104). வையை வெள்ளம் ஆடலியல்பு அறியாத அரிவை போலத் தான் வேண்டிய இடங்களிற் புகுந்தும் ஊடலியற்கையறியாத ஊடலுவகையள் கணவனைக் கடந்து நீங்குமாறு போலத் தகைந்த அணைகளைக் கடந்தும் சென்றது (பரி.7:17-19). தலைவியின், நறவுண்டு சிவந்த கண் ஊடலினால் மேலும் சிவப்பாயிற்று; தன் மாலையையறுத்து வெகுண்டாள்; தலைவன் அடி வீழ்ந்து வணங்க அவன் தலைமிதித்தும் வெகுளி தீராது ஊடினாள் (பரி.7:65-75). புணர்ச்சி இன்பம் இயல்பானன்றி ஊடலால் உண்டாவது (பரி.9:22). யாமத்தில் உண்டான ஊடலின் குறையாகிய இனிய கலவி நசையைத் தரும் தேனைச் சிலர் நுகர்ந்தனர் (பரி.10:32).

வையைப் புனலாடச் செல்வோர் சிலர் போர்வையால் தம்மை மூடுவார்; சிலர் ஊடுவார்; சிலர் ஊடல் நீக்குவார்; சிலர் ஊடல் உணர்வார் (பரி.2:19-20). வையைப் புனல்வழி வந்த தலைவனது பூமாலையைப் பரத்தை தனது கொண்டையில் பலரறியச் சூடினாள்; நினைக்குமளவில் நெஞ்சிற்குத் துயர்தரும் ஊடற்கேதுவாகிய இக்கொடிய செயல் தலைவன் தலைவியைச் சென்றடையுமுன் ஊரில் அலர்மொழி வாயிலாய்ப் பரவித் தலைவியின் செவியில் படுமாயின் அவள் சினந்து ஊடாளோ எனத் தோழி தலைவனிடம் கேட்டாள் (பரி.2:51-56)"[42] என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் கூறுகிறது.

நர்மதாவின் தமிழ் அகராதி, ஊடல் கணவனுக்கும் மனைவிக்கும் அல்லது காதலர்களுக்கிடையே உண்டாகும் பிணக்கு **(Fit of sulkiness as between lovers; or husband and wife)** என்று கூறுகிறது. "ஊடல் கலவியிற் பிணங்கல், பிரிவு, விரோதித்தல், வெறுத்தல் என்றும், ஊடல் விரி வெள்ளையணிந்து விடுத்துழித் தலைவன் வாயில் வேண்டன் முதலாகப் பாங்கி தலைவனை அன்பிலை கொடியையென்றிகழ்தல் ஈறாகியவை என்றும், புலவி ஊடலின் முதிர்தல், கூடியுங் கூட்டமின்மை என்றும், புலவிநீட்டம் ஊடல் என்றும், துனி அச்சம், கோபம், சினம், துன்பம், நோய், புலவி நீட்டம், யாறு, வெறுப்பு"[43]என்றும் நா.கதிர்வேற்பிள்ளையின் தமிழ்மொழியகராதி குறிப்பிடுகின்றது.

ஊடல் பற்றி பெருஞ்சொல்லகராதி, "ஊடல் (மருதத்திணையின் உரிப்பொருளாகிய) புலவி. தலைத்தாட் கழறல் தம் எதிர்ப்பொழுது இன்றே மலிதலும் ஊடலும் அவையலங்கடையே (தொல்.பொருள்.231 இளம்),

வல்லவர் ஊடல் உணர்த்தர (பரி.6,102) ஊடல் உணர்தல், புணர்தல் இவை காமம் (குறள்.1109), கூடலும் ஊடலும் கோவலற்களித்து (சிலப்.6,109). ஊடற் செவ்வி பார்த்து நீடாது (மணி.25, 84) ஊடல் என ஒன்று தோன்றி அலர் உறூஉம் (முத்தொள்.99) புன்புறவே சேவலொடு ஊடல் பொருள் அன்றால் (திணைமாலை.74), சிலம்பு அடியாள் ஊடலைத் தான் தவிர்ப்பான் (காரைக்.அந்.68), பெடையின் ஊடல் அன்பு கொள் சேவல் நீக்கி (சீவக.1625), உமையாளை ஊடல் உணர்த்துவோர் ஆறு (புற.வெண்.236) பாடலால் ஊடல் நீங்கும் பரிமுகமாக்கள் (கம்பரா.1,15,16), மானமும் முன் பெறாது வந்த ஊடல் (பெரியபு.2,5) 1.2.பகைத்தல் (சங்.அக.) 1.3 வெறுத்தல் (முன்) என்றும், ஊடலுவகை என்பது புலவியின் பின் சேர்தலால் கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் தோன்றும் மகிழ்ச்சி (குறள்.133அதி)"[44] என்று குறிப்பிடுகின்றது. ஊடலுணெகிழ்தல் என்பதை, செறிந்த இருளையுடைய மாலைக் காலத்துத் துளங்கா நின்ற துயர நெடுக்க ஒள்ளிய தொடியாற் சிறந்த தோளினையுடையாள் வழக்காடிடத்துக் குழைந்தது (பு.வெ.பெருந்திணை) என்றும், புலவியுட் புலம்பல் என்பதை, அழகிய தொடியினையுடைய மடவாள் தலைவன் மார்பின் மாலையை அறுத்து ஊடலாற்றாளாய்த் தனிமையுற்றது (பு.வெ.பெருந்திணை)"[45] என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

திவ்ய ப்ரபந்த அகராதி, "ஊடல் ஸம்போக மத்யத்திலே பிறக்கும் கலஹம்"[46] என்று குறிப்பிடுகிறது. தற்காலத் தமிழ் சொற் களஞ்சியம், "பிணங்குதல், ஊடுதல், உடக்குதல், மனஸ்தாபங்கொள்ளுதல், மனத்தாங்கலடைதல், பிணங்கல், மனஸ்தாபம், மனத்தாங்கல், மனவிரிசல், ஊடல், உடக்கு, பொல்லாப்பு"[47] என்று ஊடலுக்கு விளக்கமளிக்கின்றது.

மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ஊடல் என்பது "கலவியிற் பிணங்கல், பிரிவு, விரோதம், வெறுத்தல், ஊடுக, ஊடற்க என்றும், ஊடல் விரி வெள்ளையணிந்து விடுத்துழித் தலைவன் வாயில் வேண்டடன் முதலாகப் பாங்கி தலைவனை அன்பிலை கொடியையென்றிகழ்தல் ஈறாறகவுள்ள அகப்பொருட்துறை"[48] என்று விளக்குகிறது.

ஊடல் என்பது புலவி, கணவன் மனைவியருக்கிடையில் காதற் பிணக்கு, பொய்க் கோபம் என்றும், புலவி என்பது வெறுப்பு, புலவு என்றும் புலவி நீட்டம் என்பது ஊடல் மிகுதி என்றும், புலவி நுணுக்கம் என்பது அற்பக் காரணத்தைக் கொண்டு தலைவி ஊடுகை என்றும் செந்தமிழ் அகராதி குறிப்பிடுகின்றது.

*அகராதி நிகண்டு*

அகராதி நிகண்டு ஊடல் என்பதற்கு கலவி முதிர்ச்சி[49] என்றும், துண்பம் என்பதற்கு புலவி மிகுதல் நோய்[50] என்றும் குறிப்பிடுகிறது.

*நாமதீப நிகண்டு*

**"புல்லல் கிரீடை புணர்ச்சிகூட் டங்கலவி**
**வல்லவிழை வாடல்சங்க மைதுனமாம் - சொல்புலவி**
**யூடல்துனி யத்தீர்ப் புணர்த்தலாந் தேய்த்தல்சிதைப்**
**போடுரைப்பு ரிஞ்சலுரோ சல்"[51]**

புலவியின் பெயர் - புலவி, ஊடல், துனி என்றும் புலவித் தீர்த்தலின் பெயர் - உணர்த்தல் என்றும் நாமதீப நிகண்டு குறிப்பிடுகிறது.

ஊடலின் மூவகை நிலை

தலைவன் தலைவிக்கிடையே நிகழும் காதற் விளையாட்டை பொதுவாக 'ஊடல்' என்ற சொல்லாற் குறித்தல் இலக்கிய மரபாகும். "ஊடலைக் குறிக்க, ஊடல், புலவி, துனி என்ற மூன்று சொற்கள் தமிழில் உள்ளன. மூன்றும் ஒருபொருட் பன்மொழியா, நுண்பொருள் வேறுபாடுடைய தனித்தனிச் சொற்களா என்பதில் சிக்கல் உள்ளது. உரையாசிரியர் சிலர் புலவி என்ற சொல்லுக்கு ஊடல் என்றும், ஊடல் என்ற சொல் வருகின்ற இடத்தில் புலவி என்றும். பொருளெழுதி உள்ளனர். உற்று நோக்குங்கால், முச்சொற்களும் ஊடலின் ஆரம்ப நிலை, வளர்ந்த நிலை, முதிர்ந்த நிலை என்னும் மூன்று நிலைகளைக் குறிப்பனவாக உள்ளன. இவ்வாறு முச்சொற்களுக்கிடையே பொருள் வேறுபாடு உண்டு எனச் சிக்கல் தீர்த்தாலும், இம்மூன்றனுள் எது முன்னது, எது நடுவணது, எது மூன்றாவது என்ற முறை வைப்பில் அடுத்த சிக்கல் எழுகிறது. பெருமைக்குரிய இக்காலப் பேராசிரியர்களும் உரையாசிரியர்களும் இதில் கருத்து வேறுபடுகின்றனர். துனியை முன்வைத்து ஒரு சாராரும் ஊடல், புலவி, துனி என்று முறைவைத்துப் பிறிதொரு சாராரும் எழுதியுள்ளனர்"(52) என்பர்.

துனி என்பது வெறுப்பின் மிகுதியைக் காட்டும் சொல்லாதலின், அஃது ஊடலின் ஆரம்ப நிலையாக இருக்க முடியாது. 'நும்மொடு ஊடினள் சிறுதுனி செய்து' (அகப்.306:14) என வரும் அகநானூற்று அடி ஊடலின் முதிர்ச்சியே துனி எனச் சுட்டுகிறது. "புலவி, ஊடல், துனி என்னும் முறைவைப்பே சரியானது என்பதைத் தொல்காப்பியந் தொட்டுப்

பிற்கால நிகண்டுகள் வரைப் பலகாலம் ஆழ்ந்து நோக்கி வேறுபாடுணர்ந்த பிறகே சிக்கல் தீர்க்கும் அளவுக்குத் தெளிவு ஏற்பட்டது"(53) என்பர் வெ.தெ.மாணிக்கம்.

"புலத்தலும் ஊடலும் கிழவோற்குரிய என்ற தொல்காப்பியத் தொடரைக் கொண்டும்,(தொல்.1102) புலப்பென் யான், ஊடுவென், துனிப்பென் யான் (கலித்.67:8,12,16) என மருதக்கலிப் பாடலொன்றின் முத்தரவுள் முறையே அமைந்த சொல்லமைப்பைக் கொண்டும், புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை எனவரும் திருக்குறள் அதிகார வைப்புமுறை நோக்கியும், முதலது புலவி எனவும், அதன் வளர்ச்சி ஊடலெனவும், அதன் முதிர்ச்சியே துனி எனவும் ஓராற்றால் வரையறை செய்தேன்"(54) என்பர்.

***"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து***
***இல்லாளின் ஊடி விடும்"*** (குறள்.1039)

என்ற குறளில் 'புலந்து', 'ஊடிவிடும்' என ஒரே வரியில் அடுத்தடுத்து இடம்பெற்றுள்ள தொடர் பொருட் சிறப்புடையதாகும். இத்தொடருக்குப் பரிமேலழகர் 'தன்னுள்ளே வெறுத்துப் பின் அவனோடு ஊடிவிடும்' என்று எழுதிய உரையால் இச்சிக்கல் தீர்க்கப்படுகிறது. எனினும்,

***"உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது***
***மிக்கற்றால் நீள விடல்"*** (குறள்.1302)

என்னும் இக்குறளுக்கு மேலோட்டமாகப் பொருள் காணின் புலவியை நீளவிடக் கூடாது என்றமையால், ஊடல், புலவி, துனி என்ற முறைவைப்பே தக்கது என்பது போலத் தெரியும். ஆழ்ந்த உரை காணின்

அக்கருத்திலுள்ள பிழைப்பாடு புலனாகும். சுவை கருதி, உணவுப் பொருளின் அளவுக்குத் தக உப்பை அதிகரிப்பது இயல்பே. அதன் அளவுக்கு மிகுதியாகக் கூட்டும் போது தான், சுவை தர வேண்டிய உப்பு சுவை கேட்டிற்குக் காரணமாகும் என்பது போதரும். அது போலக் காதலர் எந்த அளவுக்கு இன்பத்தைத் துய்க்க விரும்புகின்றனரோ, அந்த அளவுக்குப் புலவியை நீட்டலாம். அளவு மிகுதல் என்பது நீண்டு ஊடலின் எல்லை கடந்து துனி ஆவதாகும். எனவே புலவி, ஊடல், துனி என்ற முறைவைப்பே ஏற்புடைத்து"[55] என்பர் வெ.தெ.மாணிக்கம்.

"புலவி என்பது புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்கருதிக் கொண்டுய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி. ஊடலென்பது உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழியானுரைப்பது. புலவிக் காயின் உணர்த்தல் வேண்டா, அது குளிர்ப்பக் கூறலுந் தளிர்ப்ப முயங்கலும் முதலியவற்றான் நீங்குதலின்.. அவ்வூடலிற் பிறந்த துனியும் பிரிவின்பாற்படும்..."[56] என்பர் பேராசிரியர்.

***"துனியின்றி உயிர் செல்லச்***

***சுடராழிப் படை வெய்யோன்"***[57]

என்ற கம்பராமாயண பாடலடிகளில் துனி என்பது துன்பத்தைக் குறித்தது குறிப்பிடத்தக்கது. புலத்தலாவது மனத்தளவில் வெறுத்தல்; மனத்தின்கண் நின்ற வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுதல் ஊடல்; அதன் முதிர்ச்சியே துனி ஆகும். புலவியும் ஊடலும் இன்ப நுகர்வை நோக்கியே செல்கிறது. துனி ஊடலின் உச்சநிலையான துன்பத்தைக் குறிக்கிறது.

## தொகுப்புரை

இலக்கியத்தின் வழியாகச் சங்கப் புலவர்கள் மக்களின் எண்ணங்களையும் உணர்வுகளையும் வெளிக் கொணர்ந்துள்ளனர். ஒழுக்கங்களை நெறிப்படுத்தும் விதமாக ஊடலை ஒரு கருவியாகப் பாடியுள்ளனர்.

நிலங்கள் அனைத்திலும் நிகழும் உணர்வுப் போராட்டமாகக் கருதப்படும் ஊடல், மருதத்திணை ஒழுக்கமாக உரையாசிரியர்கள் உரையாத்தனர் அன்றி; தொல்காப்பியர் யாதொரு இடத்திலும் குறிப்பிடவில்லை. அற்றைநாட் முதல் இற்றைநாட் வரையிலும் நிகழ்ந்துவரும் ஊடலானது இனியும் தொடரும் என்பதால் தொல்காப்பியர் பொதுவாகக் கூறியுள்ளார் என்பது உணரப்பெறுகிறது.

ஊடல் பெரும்பான்மை கற்பிற்கும்; சிறுபான்மை களவிற்குமுரியது. களவில் தலைவனும் தலைவியும் தோழியும் தங்களுக்குள் குறித்துக் கொண்டபடி தலைவனால் நிகழ்த்தற்குரிய பறவையெழுப்புதல் போன்ற குறிகள் பிறிதொன்றினால் நிகழ்த்தப்படத் தலைவி அவ்விடத்திற்கு வந்து தலைவனைக் காணாது செல்வாள். பின்னர் தலைவன் வந்து பறவைகளை எழுப்ப, முன்னர் பிழைத்தமையால் தலைவி வாராமல் இருக்க தலைவன் வருந்தி மீளும் போது தலைவனுக்கு ஊடல் உண்டாகும்.

ஊடல் பெண்ணிற்குப் பிறப்பில்பு என்பதினால் பெண்ணிற்கு மட்டும் ஊடல் உண்டாகும் என்பதில்லை. மனித உணர்வுகள் ஆண், பெண் என்ற வேறுபாடின்றி அனைவருக்கும் உண்டாகக் கூடியது. அதில் ஆண்களுக்குப் பிற செயல்பாடுகளினால் ஊடும் தன்மை குறைவாகக்

காணப்படுகிறது. தலைவன் தெளியச் செய்ய, தலைவியின் ஊடல் தணியாமல் இருப்பது உணர்ப்புவயின் வாரா ஊடலாகும். தலைவன் தலைவியைப் பல்லாற்றானும் வேண்டித் தெளிவித்தவழி தலைவியின் ஊடல் நீங்காவிடினும் தலைவனுக்கு ஊடல் உண்டாகும் என்பதும் பெறப்படுகிறது.

தன்வயின் உரிமையும், அவன்வயின் பரத்தையும் என்று தொல்காப்பியர் களவியலில் கூறியுள்ளதால், களவில் தலைவனுக்குப் பரத்தையர் தொடர்பு உண்டு என்பது போல் தோற்றமளிக்கிறது. தலைவி உலகியல் நடப்புத் தெரிந்தவள். களவில் நாட்டமுள்ள தலைவன், திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருவதால் உள்ளத்தில் உண்டாகும் ஐயப்பாட்டை வெளியிடுகிறாள். கற்பில் வருவதைப் போல பரத்தையர்பால் கொண்ட தொடர்பினால் வரும் ஊடலைப் போல அல்லாமல்; பரத்தையர்பால் தொடர்பு இருப்பதினால்தான் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறான் என்ற ஐயப்பாடு தானே தவிர, தலைவனுக்குத் திருமணத்திற்கு முன் பரத்தையர் தொடர்பு உண்டு என்று தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. அவ்வாறு உண்மையாகப் பரத்தையர் தொடர்பு இருந்திருக்குமேயானால், தோழி அதனைத் தடுத்திருப்பாள்; அங்ஙமின்றி தலைவனின் தவறை எடுத்துரைத்திருப்பாள். எந்தவொரு இடத்திலும் தோழியும் ஏனையோரும் களவில் தலைவனின் பரத்தமைப்பற்றிக் கடிந்துரைக்கவில்லை. அவன்வயின் பரத்தை என்பது தலைவி தன் நெஞ்சிற்குத் தானே உரைத்துக் கொள்ளும் ஐயப்பாடு என்பது தெளிவாகிறது.

தலைவியைவிட்டுப் பிரிந்து பரத்தையிடம் சென்ற தலைவன் அதிகாலைப் பொழுதில் தலைவியை நாடி வருவான் என்பதிலிருந்தும், தேர்வழங்கு தெருவில் கண்ட புதல்வனைப் பரத்தை விரும்பிச் சென்று 'வருக என்னுயிரே' என்று தழுவி நின்றதையும், அதனைக் கண்ட தலைவி 'குறுமகளே நீ ஏன் பேதுற்றனை நீயும் இவனுக்குத் தாய் ஆவாய்' என்று கூறித் தழுவியதையும் பரத்தை நிலங்கிளைத்து நாணி நின்றதை நோக்கும் போதும், மடவாய் யானும் நின்சேரியேனே அயலிலாட்டியேன் (அருகில் வசிப்பவள்) என்பதினாலும் பரத்தையற் பிரிவு கடல் கடந்தோ, நாடு கடந்தோ நிகழவில்லை என்பதும்; உள்ளூரிலே நிகழ்ந்தது என்பதும் பெறப்படுகிறது.

தலைவிக்கு ஊடல் தோன்றும் காலத்தில் தலைவன் அவளின் அன்பைப் பெறுவதற்காகப் பணிந்து செல்லும் மன உணர்வுகளை பெற்றிருந்தான் என்பது அறியப்பெறுகிறது.

ஊடல் தீர்க்கும் வாயில்களாகப் பனிரெண்டு வாயில்கள் தொல்காப்பியரால் சுட்டப்பட்டுள்ளன.

இளம்பூரணர், ஆடலும் பாடலும் வல்லராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதவர் என பரத்தையர்க்கு இலக்கணம் வகுத்துள்ளார். புலவியும் மகிழ்ச்சியும் இல்லாத காலத்து பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைவிக்குத் தெரிவித்தாலும், தலைவி உண்மையினை உணர்ந்து வைத்துக் கொண்டு தலைமகனிடம் ஊடல் கொள்வாள். தலைவியின் துன்பத்தைப் போலவே

பரத்தையின் துன்பமும் எடுத்தாளப்படுவதாலும், தலைவியும் அவளைத் தன் புதல்வனின் தாய் என்று கூறுவதினாலும், தலைவிக்கும் பரத்தை என வருணிக்கப்படும் பெண்ணிற்கும் ஓர் இணக்கமான உறவுமுறை இழையோடிக் கொண்டிருப்பதால் இளம்பூரணரின் ஒருவர் மாட்டும் தங்காதவர் என்ற கொள்கை மறுஆய்விற்கு உட்படுத்தப்படுகிறது.

தெருவில் விளையாடும் தன் புதல்வனைப் பரத்தை மார்போடு எடுத்தணைத்துக் கொள்ளும் போது இம்மகனுக்கு நீயும் தாய் தான் என்று கூறி, அவளை கடிந்து கொள்ளாமல் உரைத்தாலும் தலைவியின் உள்ளத்தில் ஊடல் உண்டாகும் என்ற உளவியல் சிந்தனை காட்டுகிறது.

தலைவனின் உள்ளத்தில் பரத்தைமை உணர்வு உள்ளதை அறிந்து கொள்ளும் வகையில் தலைவி பிற பெண்களின் குணங்கள் இத்தகையன எனக் கூறி அவனின் குறிப்பினை உணர்கிறாள். குறிப்பால் உணர்ந்து கொண்டாலும் தலைவியின் உள்ளத்தில் ஊடல் இருப்பதை இது காட்டுகிறது என்பது அறியப் பெறுகிறது.

தலைவன், தலைவி இருவரோடு சில பாத்திரங்களையும் உலவச் செய்வதன் நோக்கம், இல்லறத்தில் இருக்கும் இவர்களுக்கு உதவுவற்கே பனிரெண்டு வாயில்கள் படைக்கப்பட்டுள்ளனர். அதில் கண்டோர் தவிர்த்த அனைவரும் தலைவன், தலைவியருக்கிடையே நிகழும் ஊடலைத் தணிப்பதற்காகப் படைக்கப்பட்டுள்ளனர். மனையறத்தின் முக்கியத்துவம் கருதி இவர்களின் பாத்திரப் பண்புகள் காட்டப்பட்டுள்ளன.

மனையறம் நிகழ்த்தும் காலத்தில் தத்தமக்கேற்படும் வருத்தத்தை வெளிப்படுத்துவதிலிருந்து இல்லறம் சிறக்க அனைத்துப் பாத்திரங்களும் எடுத்துக் கொண்ட முயற்சிகள் தெரியவருகின்றன.

நம்பியகப்பொருள், அகப்பொருள் விளக்கம், வீரசோழியம், சுவாமிநாதம், க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, பெருஞ்சொல்லகராதி, தமிழ்மொழியகராதி, அபிதான சிந்தாமணி, திவ்ய பிரபந்த அகராதி, தற்காலத் தமிழ் சொற் களஞ்சியம், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, அகராதி நிகண்டு, நாபதீப நிகண்டு முதலியன ஊடல் என்பது தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் தோன்றும் சிறு பிணக்கு என்று தொல்காப்பியத்தைச் சார்ந்து விளக்கங்கள் கொடுக்கின்றன.

ஊடலின் நுட்பமான வேறுபாடுகளை நுனித்து நோக்கும் பண்பு காலப்போக்கில் மறைந்த நிலையிலேயே நம்பியகப்பொருள் உணர்த்த உணரும் ஊடல், உணர்த்த உணரா ஊடல் என்ற இரு பிரிவுகளை மட்டும் சுட்டிச் செல்வது நோக்கத்தக்கது.

ஊடலின் மூவகை நிலைகளை ஆராயும் போது, புலவி, ஊடல், துனி என்ற வைப்புமுறையே ஏற்புடையதாகிறது. புலவி என்பது மனத்தளவில் வெறுத்தல்; மனத்தின்கண் நின்ற வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுதல் ஊடல்; அதன் முதிர்ச்சியே துனி ஆகும். புலவியும் ஊடலும் இன்பத்தை உரைப்பதாகவும், துனி இன்பக் கேட்டிற்குக் காரணமாகி துன்பத்தைக் குறிப்பதாகவும் உள்ளது எனக் கண்டறியப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தொல். இளம். உரை, பக்.14-15.
2. மேலது, நூற்.960, இளம் உரை.
3. தொல்.நூற்.960, நச்சினார் உரை.
4. அகநானூற்றுச் சொற்பொழிவுகள், ப.11.
5. தொல். இளம்.உரை பக்.241-242.
6. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்277-278.
7. மேலது, ப.278.
8. மேலது, பக்.278-279.
9. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பிய உளவியல், க.வெள்ளைவாரணன் உரைவளம், ப.129.
10. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பிய உளவியல், க.வெள்ளைவாரணன் உரைவளம், ப.130.
11. நக்கீரர் (உ.ஆ.), இறையனார் களவியல் உரை, ப.40.
12. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.246.
13. சிலம்பு நா.செல்வராசு, வள்ளுவப் பெண்ணியம், ப.96.
14. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம், பக்.111-112.
15. மேலது, பக்.112-113.
16. தொல்.இளம்.உரை, பக்.254-255.
17. மேலது, ப.255.
18. மேலது, ப.284.
19. தொல். நூற்.109.

20. தொல்.இளம்.உரை, ப.288.

21. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்.பொருள்.பேராசிரியம்-1, ப.33.

22. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம், பக்.111-112.

23. மேலது, பக்.109-110.

24. மேலது, பக்.128-129.

25. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.

26. ஆ.சிவலிங்கனார்,. தொல்காப்பிய உரைவளம், பக்.128-129.

27. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.277.

28. கா.ரா.கோவிந்தராச முதலியார், அகப்பொருள் விளக்கம் (பழைய உரையுடன்) ப. 246.

29. மேலது, ப.252.

30. மேலது, பக்.255-256.

31. மேலது, ப.262.

32. பெருந்தேவனார் (உ.ஆ), வீரசோழியம், பக்.96-97.

33. மேலது, பக்.411-412.

34. செ.வை.சண்முகம் (ப.ஆ), சுவாமிநாதம், பக்.173-174.

35. மேலது, ப.174.

36. மேலது, பக்.211-212.

37. மேலது, ப.213.

38. மேலது, ப.214.

39. மேலது, ப.214.

40. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, அகரவரிசைப்படி.

41. பேராசிரியர் (உ.ஆ), தொல்.பொருள்.(நூற்.499), ப.398.

42. இரா.சாரங்கபாணி (ப.ஆ), சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், (தொகுதி-1), அ-ஔ.

43. நா.கதிர்வேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி.

44. பெ.மாதையன் (ப.ஆ), பெருஞ்சொல்லகராதி (தொகுதி.4).

45. ஆ.சிங்காரவேலு முதலியார் (திருத்தியது), ஆ.சிவப்பிரகார முதலியார், அபிதான சிந்தாமணி அகராதி.

46. டி.சந்திரசேகரன், திவ்ய ப்ரபந்த அகராதி.

47. ச. இராசேந்திரன், .தற்காலத் தமிழ் மொழி களஞ்சியம்.

48. மதுரைத் தமிழ்ப் பேரகராதி (முதல் பாகம்).

49. டாக்டர் இரா.நாகசாமி (ப.ஆ), அகராதி நிகண்டு, ப.116.

50. மேலது, ப.71.

51. எஸ். வையாபுரிபிள்ளை (ப.ஆ), நாபதீப நிகண்டு.

52. Dr. V.T.Manickam, Marutham An Aspect of Love in Tamil Literature, p.10.

53. வெ.தெ.மாணிக்கம், ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும், ப.375.

54. மேலது, 375.

55. மேலது, பக்.376-377.

56. பேராசிரியர் (உ.ஆ), தொல். பொருள். (நூ.449), ப.398.

57. கம்பராமாயணம், பாலகாண்டம் (தொகுதி -2), பா.733.

## இயல் - இரண்டு

## சங்க இலக்கியத்தில் ஊடல்

சங்ககால மக்கள் இல்லறப் பெருமை உணர்ந்து இனிய வாழ்வில் கலந்து மகிழ்ந்து வாழ்ந்துள்ளனர். காமம் கலந்த காதலாக, அன்புறு காமமாக இல்லற வாழ்க்கையில் திளைத்து, உடலாலும் உள்ளத்தாலும் ஒன்றிணைந்த வாழ்க்கையைப் பெற்றிருந்தனர். உறவு தெரியாமல் உடல்கள் இணையும் காமத்தைச் சங்கப்புலவர்கள் தம் பாக்களில் பதிவு செய்யவில்லை.

மிக உயர்ந்த வாழ்வறங்களைப் பேசுகின்ற சங்க இலக்கியத்தில் பரத்தையின் ஊடாட்டம் காணப்படுகிறது. இலக்கியக் கவர்ச்சிக்காகப் படைக்கப்பட்ட பாத்திரமாகப் பரத்தை காணப்படுகிறாள். பரத்தையர் ஒழுக்கம் காலத்தால் நேர்ந்த வாழ்க்கைப் பாதையாகவும், பரத்தையர் ஒழுக்க எதிர்ப்புகள் அறத்தால் நேர்ந்த வாழ்க்கைப் பார்வையாகவும் அமைகின்றன. ஒருவனின் பல மனைவியர் இடையே நிகழ்ந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் எனப்பட்டது. பலதார மணத்திற்கு எதிராக எழுப்பப்பட்ட முதல் குரல் ஊடலில் தான் தொடங்கியது. இத்தகைய ஊடல் சங்க இலக்கியத்தில் எங்ஙனம் காணப்படுகிறது என்பதை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்தது எனக் கூறப்பட்டதாய், யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருளாதலின்

அதனை அகம் என்பர் நச்சினார்க்கினியர். சங்ககாலம் மெய்யோடு மெய் இணையும் பொய்க்காமத்தைப் பேசவில்லை, ஐம்புலன்களும் கலந்து புரளும் இன்பச்சேற்றில் உழலும் தன்மைபற்றிப் புகழவில்லை. பொழுது புரியாமல் எவரோடும் புரண்டு கிடந்து புணர்ந்த நிலையை புகட்டவில்லை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கின் உரிப்பொருள்கள் களவு, கற்பு இயல்களுக்கு உரியவாக விளக்கம் பெறும். திருமணத்திற்கு முன் அமைந்த ஒழுக்கம் களவு எனப்படும். மணத்திற்குப் பின் நிகழ்வது கற்பு எனப்படும். களவு வாழ்வு காதல் வாழ்வு. உணர்வு மேலோங்கி நிற்கும். கற்பு வாழ்வில் கடமை வாழ்விற்கு அறிவு மேலோங்கிக் காணப்படும். தலைவனும் தலைவியும் நடாத்துகிற இன்ப வாழ்க்கையின் ஊடாகப் பரத்தைக் காணப்படுகிறாள். நிலவில் காணப்படும் மறுவினைப் போல பரத்தையர் காணப்படுகின்றனர். அந்நிலவிற்கும், அதன் ஒளிக்கும் எத்தகைய இடையூறும் இல்லாமல் நிலவினைச் சார்ந்து இருப்பதினால், மறுவிற்கும் நிலவோடு சேர்ந்து பெயர் கிடைப்பதைப் போல, தலைவன் தலைவி வாழ்வோடு பரத்தையும் பேசப்படுவதைச் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

**களவில் ஊடல்**

தலைவனும் தலைவியும் இரவில் தனிமையில் சந்திப்பதற்கு வழிவகுத்துக் கொடுப்பவள் தோழி. தலைவி வாழும் இல்லத்தருகில் இரவு நேரத்தில் இருவரும் சந்திக்கும் இடத்தை அவள் குறிப்பாள். அப்போதுதான் தாய் கூப்பிடும் போது உடனே தலைவி செல்வதற்கு வழி ஏற்படும். “இரவு நேரத்தில் தன்னந்தனியாக எவரும் பயிலாத

இடத்தில் தோழியும் தலைவியும் செல்லுதல் தகாததும் ஆகும். தலைவன் வந்தவுடன் நீர்நிலைகளில் கல்விட்டெறிதல், பறவைகளை நோக்கிக் கல்லெறிதல் ஆகிய செயல்களின் மூலம், தான் வந்துள்ளதை அவன் தலைவிக்கு அறிவிப்பான். அதை அறிந்த தலைவியும் தோழியும் தலைவனைக் காணக் குறியிடத்திற்குச் செல்வார்கள். சில சமயங்களில் அவன் அவற்றைச் செய்யாமலேயே, இயற்கையாகவே அச்செயல்கள் நிகழ்ந்துவிடும். தலைவன் செய்த குறியென நினைத்த மகளிர் ஏமாந்து வறிதே மீள்வார்கள். தலைவியும் தோழியுடன் குறித்த இடம் சென்று ஏமாந்து திரும்பிச் சென்ற பிறகு, தலைவன் வந்து குறியிடத்தில் காத்திருப்பான். தலைவியைக் காண முடியாமல் ஏமாந்து செல்வான். இதைக் 'குறிபிழைத்தல்' என்று இலக்கண நூலார் குறிப்பிடுவர்''(1) என்பர் சரளா இராசகோபாலன்.

தலைவி இரவுக்குறியிடத்தே தன்னைச் சந்திப்பதற்கு வாய்ப்பாகத் தலைவன் அடையாளமாகச் சில வகை ஒலி எழுப்புவதாகக் கூறிச் செல்வான். இரவில், அந்த அடையாளக் குறியொலி, அவனாலன்றி, இயற்கையாக வேறு வகையில் நிகழ, அதனைத் தலைவன் செய்த அடையாளமாகக் கருதிய தலைவி, குறியிடம் போந்து தலைவனைக் காணாது மீள்வதுண்டு. அந்நிலையில் தலைவன் குறியிடம் போந்து, அக்குறியீட்டினை நிகழ்த்த இதுவும் பொய்க்குறி போலும் எனக் கருதிய தலைவி ஆண்டுச் செல்லாமல் மனைக்கண் இருந்து விடுவாள். அங்குச் சென்ற தலைவன், தலைவியைக் காணாது அல்லகுறிப்பட்ட நிலையில் தலைவன் ஊடல் கொள்கிறான். இதனை,

"அயத்து வளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன

நகைப் பொலிந்து ............." (அகநா.62)

என்ற குறிஞ்சித்திணைப் பாடலடிகள், தலைவன் அல்லகுறிபட்ட போது தன் நெஞ்சிற்கு உரைப்பதாக உரைக்கின்றன. அகம்.126, 136, 212, 258, 280 போன்ற பாடல்களும் சுட்டுகின்றன.

மற்றுமொரு பாடலில், தலைவன் 'இன்றிரவு யான் வந்து இன்ன ஓசையை உண்டு செய்வேன். அது உணர்ந்து நீ வருக' என்று போயினன். ஆயின், அவ்வரவின்கண் அத்தகைய ஓசை பறவையால் உண்டாயிற்று. அதனைத் தலைவன் செய்ததாக எண்ணித் தலைவி குறியிடம் சென்று, தலைவனைக் காணாது, "அவன் வரவை எதிர்பார்த்து வீட்டின் முன்பக்கத்தில் உள்ள கிளை முறியப் பிடித்துக் காத்து நிற்கும் நிலைமையில் அவள் கொங்கைகள் அவன் மார்பில் அழுந்தத் தழுவுதலைவிட இனியதாய் உளது"(2)என்பள். இருப்பின், பின் ஒரு நாள் அவ்வோசை உண்டான போது தலைவன் வந்துள்ளான் எனத் தோழி கூற அவள் தோழியிடம், 'மெய்யோ' எனக் கேட்டு, மெய்யெனின் நீ வாழ்வாயாக! எனக்கூறி, அவள் அல்லகுறிபட்ட செய்தியை,

'மைப்பட்டன்ன மாமுக முசுக்கலை

ஆற்றப் பாயாத் தப்பல் ஏற்ற

கோட்டொடு போகி யாங்கு' (குறுந். 121: 2-4)

எனக் கூறுவள். இங்ஙனம் தலைவனுடைய இரவுக்குறி வருகையை நினைந்தும், ஏதத்திற்கு அஞ்சியும், ஆற்றாமையால் அவன் வருகையை நோக்கியும், மிக்க காமத்தால் அல்லகுறிப்பட்டும் தலைவி தன் மொழியால்

கூறியமை உணர்த்தப் பெறுகிறது. அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைவன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியதாக அகம்.212, 258 ஆகிய பாடல்களும் கூறுகின்றன.

**உணர்ப்புவயின் வாரா ஊடல்**

உணர்ப்புவயின் வாரா ஊடல், அல்ல குறிப்பட்டு மீளும் போது நிகழும். தலைவன் தெளியச் செய்யவுந் தெளியாத ஊடல் உணர்ப்புவயின் வாரா ஊடல் எனப்படும். தலைவன் தன்பால் தவறின்மை கூறித் தெளிவிக்கவும் தலைவி ஊடல் நீங்காளாகத் தலைவன் தன்னெஞ்சை நோக்கி, தலைவி நமக்கு அயலாள் போலக் காணப்படுகின்றாள். ஆதலால் நீ இனி எவ்வியென்னும் வள்ளலை இழந்த யாழ்ப்பாணர் தலை பொற்பூவின்றிப் பொலிவழிந் திருத்தல் போலப் பொலிவழிந்து வருந்துக என்று கூறுகின்றான்.

**"குணகடற் றிரையது பறைதபு நாரை**
**திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை**
**யயிரை யாரிரைக் கணவந் தாங்குச்**
**சேய ளரியோட் படர்தி**
**நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே"** (குறுந்.128)

என்னும் பாடல், தலைவன் தன் உள்ளத்தை நோக்கி, உணர்ப்புவயின் வாரா ஊடற்கட் கூறியதாகவும், அல்லகுறிப்பட்டு மீளும்போது கூறியதாகவும் துறை வகுத்தவர்களால் கொள்ளப் பெற்றுள்ளது.

உணர்ப்புவயின் வாரா ஊடற்கட் கூறியதாகக் கொள்ளுங்கால், கிழக்குக் கடற்கரைக்கண்ணுதாகிய முதுமையாற் சிறையிழந்த நாரை, சேரனது மேற்குத் திசையிலமைந்த தொண்டிப் பட்டினத்தின் கடற்றுரையிலுள்ள அயிரை மீனாகிய பெறுதற்கரிய உணவை முன்னுண்ட பழக்கத்தாற் பெறுதற்குத் தலையை மேலே தூக்கினாலும், அயிரை சேய்மைக்கணிருத்தலாலும், தான் பறந்து சென்று பெறுதற்குக் கருவியான சிறையை இழந்தமையாலும் அது பெறுதற்கரிதாயவாறு போல, நீ தலைவியை முன்னுகர்ந்த பழக்கத்தாற் பெற விரும்பினும், அவள் நெஞ்சார்ந்த சேயளாயிருந்தாலும், ஊடல் தீர்க்கும் வலி உனக்கு இன்மையாலும் பெறற்கரியளாவாள் என்பதாம். அயிரை, சேய்மைக்கணிருத்தல் போலத் தலைவி நெஞ்சாற் சேயளாயினள் எனவும், நாரை பறந்து சென்று பெறுதற்கேற்ற சிறையிழந்தது போல, உள்ளம் ஊடல் தீர்க்கும் வலியிழந்ததெனவும் கொள்க

தொல்காப்பியத்து உணர்ப்புவரை யிறப்பினும் (தொல்.156) என்னும் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர், அல்லக்குறிப்பட்ட தலைவன் ஊடற்கு மேற்கோளாக இப்பாடலைக் காட்டி, 'நாரை தெய்வங் காக்கும் அயிரை இரையை வேட்டாற் போல் நமக்கு அரியளாயினாளை நீ வேட்டாயென்பதனாற் குறி பிழைத்துழி ஊடினமை கூறிற்று' என உரைப்பர். 'நின்வாய் செத்து'(3) எனும் பாடலும், அகம்.136, 280 பாடல்களும் அல்லகுறிப்பட்டு மீளும் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைக்கும் கூற்றாக அமைந்துள்ளது.

**கற்பில் ஊடல்**

**தலைவி தலைவனோடு ஊடுதல்**

தலைவி ஊடுவதாகக் கற்பில் 'நாற்பது செய்யுட்கள்'[4] அமைந்துள. "இச் செய்யுட்கள் மருதத்திணையில் உளதால் தலைவனின் புறத்தொழுக்கத்தை நயமாக இடித்துரைக்கும் இடங்களில் காணப்படுகின்றன. அகப்பாடல்களில் மருதத்திணைப் பாடல்களில்தான் அங்கதக் குறிப்புகள் அதிகம் (40 இடங்கள்) இடம் பெற்றுள்ளதாக மு.அருணகிரி குறிப்பிடுவர்."[5] அத்துடன், தலைவனை வெளிப்படையாகவும், பரத்தையைக் குறிப்பாகவும் சாடுகின்றாள். தலைவியின் ஊடல் மனத்தைப் பிரதிபலிக்கும் பின்புலங்கள் பின்வருமாறு அமையும்.

***தலைவன் தன் குடிப்பெருமையை உணராமை***

தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்டு ஒழுகினும், தலைவி தனக்குரிய கடமைகளில் அறத்தொடு நின்று ஒருவாறு மகிழ்ந்த நிலையில் தலைவனை நோக்கி 'நீர்நாய், பொய்கையைத் தான் வாழுமிடமாகக் கொண்டிருந்தும், தன் உடலில் நாறும் புலால் நாற்றத்தைக் கழுவிக் கொள்ளாமல் மீண்டும் புலால் நாறும் வாளை மீனையே இரையாகப் பெறுதல் போன்று, சிறந்த குடியில் தோன்றிய உனக்கு இவ்வொழுக்கம் நன்றன்று' என்பதை,

**'பொய்கைப் பள்ளி புலவுநாறு நீர்நாய்**
**வாளை நாளிரை பெறூஉ ஊர'** (ஐங்: 63)

என இகழ்ந்து தலைவி ஊடல் கொள்கின்றாள். இக் கருத்தை ஐங்:48, 85ஆம் பாடல்களும் வழி மொழியும். இதனால் "பலவகையானும் உயர் நெறியாகிய அன்புடைய வாழ்க்கை, பூவிற்குப் புல்லிதழ் வாய்த்தற் போலவும் மதிக்கு மறு வாய்த்தற் போலவும் பரத்தையிற் பிரிவு என்னும் இழிந்த ஒழுக்கத்தினால் சிறிது கலக்கமடைகிறது"[6] என்பர் உ.வே.சா.

**தலைவன் பரத்தைக்கு முன் உரிமை தருவதாக நினைத்தல்**

பரத்தை புறங்கூறினாள் எனக் கேட்ட நிலையிலும், புதல்வன் பிறந்த விடத்துத் தலைவன் இல்லின்கண் வந்த நிலையிலும் தலைவி தலைவனிடம் "நீ பெண்டின் பேதைமையை நன்கு அகற்றாமையால் அவள் என்னைப் பழிதூற்றுகின்றாள்; நீ என்னைப் புறக்கணித்து அவட்கு அளி செய்யும் பிழையே"[7] அவள் என்னைப் புறங்கூறவும் செய்தாள் என்னும் பண்பினை,

**'பேனாளோ நின் பெண்டே**

***யான் தன் அடக்கவும் தான் அடங்கலளே'*** (ஐங்: 68)

என்று உரைப்பள். ஆதலின், 'தலைவனே நீ என்னை அவமதித்துப் பரத்தையர்க்கு உரிமை வழங்கியுள்ளாய். அவள் தன்னை அவமதித்தற்குக் காரணம் தான் மகப் பெற்றமையே' எனும் கருத்தால் 'புதல்வனை ஈன்ற மேனி நின்மார்பு சிதைக்கும்' எனும் உணர்வினை,

**'புதல்வனை யீன்ற வெம் மேனி**

***முயங்கன்மோ தெய்ய நின் மார்பு சிதைப்பதுவே'*** (ஐங்: 65)

என உட்கொண்டு ஊடல் செய்கின்றாள் தலைவி.

**தலைவன் பரத்தையர் நெஞ்சம் பிணித்தலைத் தொழிலாகக் கொண்டவன் என உணர்த்தல்**

பரத்தையர் யாரையும் யான் அறியேன் எனக் கூறும் தலைவனிடத்துத் தலைவி, நீ வேறு எங்கு சென்று வந்தாய்? எனக் கேட்க அதற்குத் தலைவன் 'கோவிலுக்குச் சென்றேன்,"[8] 'புனலாடி வருகின்றேன்,"[9] 'யானை ஏறி வந்தேன்,"[10] 'குதிரை ஏறி வந்தேன்,"[11] 'குறும்பூழ்ப் போர் காணச் சென்றேன்"[12] என உரைக்கத் தலைவி பரத்தையை மேற்கூறிய செயல்களோடு ஒப்பிட்டுத் தலைவனைக் கடிந்து, 'உன் முயக்கமில்லாது தெருவில் சென்றவளை நான் அறிவேன்."[13] அத்தகையவளின் 'புறத்தோற்றத்தில் மயங்கி எம்மைப் புறக்கணித்து அகத்தில் அன்பும் இனிமையும் அற்றுப் பொய்மையுடையவனாக"[14] விளங்குகின்றாய் பரத்தையின் காம இன்பத்தினும் சிறந்த மகவின்பத்தை மறந்து உன்னைப் பற்றிக் கொண்டவள் நினைவினைக் குறித்து,

**'. . . . .   . . . . .   . . . . . தேரொடு**

**தளர் நடைப் புதல்வனை யுள்ளிநின்**

**வளமனை வருதலும் வெளவி யோனே'** (ஐங்: 66)

எனக் கூறி, மேலும்,

'என் மகனையும் பற்றிக் கொண்டு நிற்கும் நிலையில் இவனுக்கு நீயும் தாய் எனச் சொல்ல அவள் நாணி நின்றாள். அவளை நான் விரும்பினேன்."[15] ஆயின் 'மிகவும் காதல் உள்ளவன் போல் விளங்கும் நீ கூந்தல் மாலை சிதைத்த பகைவன்."[16] 'பரத்தையைத் தழுவிய உன் மார்பை யாம் தீண்ட மாட்டோம்."[17] எனவே, எம்மை நெருங்காதே என ஊடுகின்றாள்.

**தலைவன் பாணனைத் தூண்டிலாக இட்டுப் பரத்தை மீன்களை அகப்படுத்துபவன் என உணர்த்தல்**

ஊடிய பரத்தையைத் தலைவன் பாணனைக் கொண்டு ஊடல் தீர்த்துக் கூடினான் என்பதைக் கேள்வியுற்றிருந்த தலைவி பின்னர் தலைவியையும் ஊடல் தீர்க்கும் பொருட்டுப் பாணனோடு வந்த தலைவனை நோக்கி, இவன் யார் யார் நலஞ் சிதையும்படி பொய் கூறி நின்னொடு கூட்டுவனோ நான் அறிகிலேன்.

***'யாணர் ஊர நின் பாண்மகன்***

***யார் நலம் சிதையப் பொய்க்குமோ இனியே'***(ஐங்: 49.3-4)

என்று புலந்து கூறி ஊடல் கொள்கின்றான்.

**புனலாடும் பரத்தையர்க்குப் புணர்ச்சியாகி நிற்பவன் எனக் குறித்தல்**

தலைவன் பரத்தையரோடு நீராடினான் எனும் செய்தியைத் தலைவி தோழிகளின் வாயிலாகக் கேள்வியுற்றிருந்த நிலையில் தலைவன் பிழையொன்றும் செய்யாதவன் போன்று இல்லத்தில் வந்து தலைவியொடு அளவளாவத் தொடங்கும் போது, தலைவி 'தலைவ, நீ தோழியர் சூழ உன்னால் விரும்பப்பட்ட பரத்தையை முயங்கி இன்பம் மிகுதற்குக் காரணமான"(18) 'புதுப்புனலை ஆடியதால் கண்கள் சிவந்தன."(19) இந்நிகழ்வினைக் 'கண்டவர் பலராவர்."(20) இவ்வுண்மையை மறைக்க முயன்று என் 'புதல்வன் தாயே' எனக் கூறி என் முதுமையை இகழாதே.

***'. . . . . . . . . . இன்று வந்து***

***ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்***

***மாசுஇல் கற்பின் புதல்வன் தாய் என***

*மாயப் பொய்மொழி சாயினைப் பயிற்றி'* (அகநா: 6: 12-14)

எனக் குறிப்பிடுவள். ஏனெனின் உன்னுடைய இச் செயல் ஞாயிற்றின் ஒளியை மறைக்க முயல்வது போன்றது ஆயிற்று"[21] எனப் புலந்து ஊடல் கொள்கின்றாள்.

அது மட்டுமன்று, 'அத்தகையவனை நீராடுதற்குரிய பெரிய நீர்த் துறையின்கண் நானும் கண்டேன்"[22] என்றும் மொழிபள்.

**பரத்தையால் எழுந்த வன்புறை**

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் காரணமாகத் தலைவி 'தலைவன் பற்பலர் மாட்டும் துய்க்கச் செல்லுதல் போல என் மாட்டும் வந்தான்; விரும்பினோர்க்கு உதவாத அவனது மார்பை யான் விரும்பவில்லை. அதனால் யான் வருத்தமும் அடையவில்லை.' இதனை,

**'பயந்து எழு பருவரல் தீர**

**நயந்தோர்க்கு உதவா நார் இல் மார்பே'**(நற்: 225: 8-9)

என்று வன்மையாகக் கூறுகின்றாள்.

**தலைவன் ஒருசேரப் பல பரத்தையரைப் புணர்கின்றான் என ஊடுதல்**

தலைவன் ஒரு சேரப் பல பரத்தையருடன் கூடி இன்புறுவதனைத் தலைவி 'இந்திர விழாவின் போது பரத்தையர் பலரையும் ஆடல் பாடல் நிகழ்த்துவதற்கு ஒருங்கே கூட்டினான் செயலை,'

***'இந்திர விழவில் . . . . . . . . . . தொகுத்தினி***

***பெவ்வூர் நின்றன்று மகிழ நின் தேரே'*** (ஐங்: 62.1,4)

என மொழிபள். மற்றும், 'நாரை பொது நிலத்தில் உள்ள பல்வேறு மீன்களையும் தின்று தங்குதற் பொருட்டு மருத மரத்தின் உச்சிக்கு வருதல் போன்று தலைவன் பொழுதெல்லாம் பல்வேறு பரத்தை மகளிரைக் கூடியிருந்து இன்புறுவதனால்,"(23) 'இல்லறம் நிகழ்த்தி அன்பு செய்தல் அவன் குறிக்கோள் அன்று"(24) என இடித்துரைத்தும் ஊடுகின்றாள்.

**மனைவயிற் புகுந்த பாணனிடம் ஊடுதல்**

பரத்தைமை மேற்கொண்டிருந்த தலைவன் தலைவியின் பால் வாயில் வேண்டி விடுத்த பாணன் மனைக்கண் வந்த பொழுது தலைவி, பாண நின் தலைவியாகிய பரத்தை தலைவனுடைய மார்பின்கண் உள்ள மாலையில் பூந்தாதுகள் உண்ணும் வண்டுகள் என்னுடைய கூந்தலில் வந்து மொய்த்தன என்று பாங்காயினர் கூறக் கேட்டு, உன் தலைவி சினந்தாள் என்று கண்டோர் கூறுவர். ஆதலின் நீ தலைவனுக்கு வாயிலாய் வருதலை அறியின் சினம் கொள்வாள். இதனை.

**'. . . . . பாணநின் தலைமகள்**
**மகிழ்நன் மார்பின் அவிழ் இணர் நறுந்தார்த்**
**தாது உண் பறவை வந்தெம்**
**போதார் கூந்தல் இருந்தன எனவே'** (ஐங்: 82)

எனப் பரத்தையின் கொடுமை கூறி ஊடுகின்றாள்.

### அலரஞ்சாது பரத்தைமை கொள்கின்றமையை உணர்த்துதல்

தலைவன் ஒரு பரத்தையை மணந்து கைவிட்டு, மீண்டும் ஒரு பரத்தையை மணந்த நிலையிலும் பரத்தையுடன் பொழிலாடிய நிலையிலும் தலைவி, தலைவனிடம் 'கள்வனே! நீ பரத்தை மகளொருத்தியோடு புணர் குறி செய்தாய் என்று கண்டோர் கூற,"[25] உன் செயல் 'இல்லற உரிமையுடைய எனக்குப் பயன்படாமல்,"[26] 'பரத்தையருடன் புதுப்புனலாடினாய்; உம்முடைய பரத்தையின் தொடர்பால்,"[27] இளவேனிற் பருவத்தில் குரவ மரக்கிளையில் இருந்து ஊரெங்கும் குயில் கூவுதல் போல அலராகி ஊர் முழுவதும் பரவும் தன்மை ஆயிற்று என்பதனை,

**'குரவ நீள்சினை யுறையும்**

**பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே'** (ஐங்: 369: 4-5)

என்பள். இருப்பின் நான் அதற்கு வருந்தவில்லை. 'நீ முருகப் பெருமான் மீது உரைத்த சூள் எனக்குத் துன்பத்தைத் தருவதாய் உள்ளது"[28] என ஊடல் கொள்கின்றாள். இவ்வாறு அலரஞ்சா நிலை எடுத்துரைக்கப் பெறுகிறது.

### தன் தவற்றிற்கு அஞ்சாது பரத்தையை நாடும் தலைவனின் செயலைக் கூறல்

பரத்தையின்பாற் பிரிந்து வந்த தலைவனை நொந்து தலைவி 'வாளை மீன் குளத்திலிருந்து புறப்பட்டுக் கால்வாய் அடைந்து வயலுள் ஓடி, உழும் எருமையின் கால் சேற்றை உடலில் பெற்று, உழவர் கோல் அடிக்க அஞ்சாது செருக்கடைந்து வயல் வரப்பில் புரளுவது போல, தலைவன் இல்லத்தில் இருந்து புறப்பட்டுப் பரத்தையை அடைந்து,

அவளொடு இன்பம் நுகர்ந்து, ஊரார் பழி மொழியைப் பெற்று, அவர் அலர் மொழிக்கும் அஞ்சாது, தருக்கடைந்து, சேரியிலே புரளும் தன்மை உடையவன்"[29] எனத் தலைவனின் செயலைக் கூறி ஊடுகின்றாள்.

**மகனிடம் தலைவனின் பரத்தைமையை உணர்த்துதல்**

தலைவி தன் மகனை இறைவழிபாட்டிற்காகத் தோழியருடன் அனுப்பினாள். அவன் திரும்பி வருவதற்கு நேரமாயிற்று. 'அங்குப் பரத்தையர் அம் மகனுக்கு அணி செய்தனர். அதனை மகன் திரும்பி வந்த போது கண்ட தலைவி தலைவன் சிறைப்புறமாய் இருக்க,"[30] 'உன் தந்தையைப் போல் நீயும் பரத்தையர் பால் காமமுற்றுத் திரியாதே"[31] எனச் சினந்து, மகன் அணிந்திருந்த தந்தையின் தொடி அணியைக் கண்டு யார் அணிவித்தது என வினவ, புதல்வன் விடை கூறாமையால் இத்தவற்றிற்கு யானே காரணம் எனக்"[32] கண்கள் நீர்துளிக்கத், தூக்கமும் கொள்ளாது வாடும் என்னிடமாவது வந்து கொஞ்சம் பால் உண்பாய்"[33] எனக் கூறும் வேளையில், 'தலைவன் பரத்தையர் அணிவித்த அணிகளைக் காட்டி ஆங்கு வந்த தலைவியின் உள்ளமானது வெந்த புண்ணில் வேல் எறிவது போல் இருந்தது.' இதனை,

> **'வெந்த புண் வேல் எறிந்தற்றால் வடுவொடு**
> **தந்தையும் வந்து நிலை'** (கலி: 83: 30-31)

எனும் அடிகள் மொழியும்.

இதனைக் கண்ட தலைவி தன் மகனுக்கு அறிவுரையாக,'தந்தை உன்னிடம் கூட அன்பின்றி மாறிவிட்டார். ஆயின், என் அன்பு மாறாது.

நான் இன்புறுவதெல்லாம் உன் நடை அழகு கண்டும், உன் மொழி கேட்டும், உனக்கு அம்புலி காட்டுவதிலும் நான் விருப்புடையேன்."[34] ஆயின் 'உன் தந்தை பால் அன்புடையவர்கள் படும் துயர் மிகவும் துயரமானது. அதனால் 'உன் தந்தையின் மார்பில் உள்ள கோதையை அறுத்தெறிந்து அவன் வருந்த நீ செய்தல் வேண்டும்"[35] என்கிறாள்.

**தலைவியின் ஊடலை தோழி எடுத்துரைத்தல்**

ஊடலில் தோற்றவர் வென்றார். ஊடல் காமத்திற்கு இன்பம் என்ற போதிலும், உணவிற்கு உப்பைப் போல் இருத்தல் வேண்டும். தலைவனும் தலைவியும் தனித்திருக்கும் வேளையில் குடும்பச் செய்திகளைப் பேசுதல் கூடாது. உண்மை காரணமின்றியும் தலைவி ஊடுவாள். இதனை,

**"பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்**
**கருந்தாள் எருமைக் கன்று வெரூஉம்**
**பொய்கை யூரன் மகளிவன்**
**பொய்கைப் பூவினும் நறுந்தண் ணியளே"** (ஐங்.97)

தலைவன் முற்றும் நல்லவன் ஆயினும் பரத்தைமை உடையவன் என்று தலைவி ஊடினாள். தன் ஒழுக்கத்திற்கு மாசு கற்பிக்கலாமா? பொய்ப் பழி சுமத்தலாமா? என்று தலைவன் சினந்தானல்லன். கோபம் கொள்ளாமல் இது பள்ளியிடைப் பெண்ணின் இயல்பு என்று மகிழ்ந்து புலவி நீக்கி மெய்யின்பம் நுகர்ந்தான். மேயப் போய் வந்த எருமையின் கொம்பில் பகன்றைக் கொடியின் வெள்ளிய மலர்கள் செறிந்து கிடந்தன, அதனைக் கண்ட கன்று இது தன் தாயில்லை என்று மயங்கியதாம் என்று நகையாடி தலைவியின் உள்ளத்தை மாற்றுகிறான்.

இவ்வாறெல்லாம் தமக்கு அஞ்சி நடக்கின்றானே என்றெண்ணி தலைவி ஊடலை நீட்டித்து வாயில் மறுத்தல் கூடாது. இதனை,

**"புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை**
**அதுபுலந் துறைதல் வல்லி யோரே**
**செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்**
**தாமட் டுண்டு தமியராகித்**
**தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப**
**வைகுந ராகுதல் அறிந்தும்**
**அறியா ரம்மவஃ துடலுமோரே"** (அகம்.316: 11-17)

என்று தோழிக்கூற்றுப் பாடலடிகளால் அறியலாம். தலைவன் பரத்தையை நாடிச் செல்வதால், அவனுடன் ஊடல் கொள்வதில் ஏதும் பயனில்லை. இல்லறப் பெண்டிர் எதையும் தாங்குதல் வேண்டும் என்பது அக்கால வாழ்வியல் பார்வையாகும். ஊடல் நீட்டித்துத் தலைவி உரிமைக்குரல் எழுப்பினால் திருமகள் நீங்குவாள் என எச்சரிக்கப்படுகிறாள். பொருள் வலிமை தலைவனை ஒட்டியதாகலின் தலைவன் நீங்கப் பொருளும் நீங்கலாம். தனிமையும் வறுமையும் துன்புறுத்தும். எளிய உணவு உண்ண வேண்டும். இனிய புதல்வரும் துன்புறுவர். இதனை எல்லாம் மனதில் வைத்துக் கொண்டு தலைவி ஊடல் கொள்ள வேண்டும் என்பது தோழியின் அறிவுரையாகும். தலைவியின் வெறுமையான புலத்தல் பயனற்ற ஊடலே ஆகும் என்கிறாள் தோழி. ஊடல் கொண்ட பெண்களின் மனநிலையைத் தோழி கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது. சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்குப் பால் இன்றியும், சுற்றத்தார் யாருமின்றியும் தனித்து நின்று வருத்தப்படுவதைக் கண்கூடாக கண்டும், நீ தலைவனுடன்

ஊடுவது சரியல்ல என்று தோழி, தலைவிக்குக் கூறுவதாக அமைந்த இப்பாடலில் பரத்தைமை மேற்கொண்ட தலைவனிடம் கோபம் கொண்டால் இழப்பு பெண்களுக்கே என்பதும் வலியுறுத்தப்படுகிறது.

தலைவன் தலைவியரின் வாழ்க்கை என்னும் தேரின் அச்சாணியுடன் கூடிய சக்கரம் போன்றவள் தோழி. தலைவனுக்கு வாயில் மறுக்கும் தோழி, தலைவன் தலைவியின் துன்பத்தை அறிய ஒரு வாய்ப்பு ஏற்படுத்தித் தருகிறாள். தன் உள்ளம் மிகவும் வருந்துகிறது என்று தன் புண்பட்ட உள்ளத்தைக் காட்டினாள். ஏன் வருந்துகிறது என்ற வினாவிற்குப் புன்புலமாகிய முல்லை நிலத்திலே நெருங்கி முளைத்திருக்கும் நெருஞ்சியைப் பார்த்திருக்கிறோம். அது சிறிய இலைகளை உடையது. கண்ணுக்கு இனிமை செய்யும் புதிய மலர், அவ்வழியே செல்பவர்களின் கண்களுக்கு விருந்தளிக்கும். அழகிய மலர் அந்தப் புதுமலர் வாடிப் போய் உலர்ந்து முள்ளாக மாறி, தொடுவோரையும் நடப்போரையும் அந்த முள் வருத்தியது. அதுபோலத் தலைவனும் நெருஞ்சியைப் போன்று தான் இருக்கிறான் என்று கூறினாள்.

கண்ணுக்கு இனிமை செய்த புதுமலர் வாடி உலர்ந்து போவது போலக் காதலன் சில நாட்கள் தந்த இன்பம் விரைந்து கெட்டது. அப்புதுமலர் கண்ணைக் கவர்ந்து இன்பம் செய்தது, தலைவன் அழகாயிருந்ததால் என் கண்களைக் கவர்ந்து இன்பம் செய்தான். அம்மலரே முள்ளானது போல, இனிய காதலனே என்னைப் பிரிந்து பரத்தையர்களிடம் சென்று வருத்துகிறான். அவனை நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சம் முள்ளாகக் குத்துகிறது. அவனுடைய

பரத்தை உள்ளம். முள்ளாகக் குத்துகிறது. என் அன்பை மறந்த அவனை நினைக்கும் போது என் நெஞ்சம் வருந்துகிறது என்றாள் தலைவி.

**"நோமென் னெஞ்சே நோமென் நெனஞ்சே**
**புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்**
**இனிய செய்த நங்காதலர்**
**இன்னா செய்த னோமென் னெஞ்சே"** (குறுந்: 202)

நோமென் நெஞ்சே எனத் தலைவி தன் வருத்தத்தை மூன்றுமுறை அடுக்கிக் கூறுகின்றாள். வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் வாயில் நேர்ந்தது என்ற துறையில் அமைந்து இப்பாடலை அள்ளூர் நன்முல்லையார் பாடியுள்ளார். தலைவனுடைய பிரிவினால் ஏற்படும் ஆற்றாமை, அவனுடைய பரத்தமை வாழ்வு, தன் அன்பை மறந்த நினைப்பு ஆகியவை அவளை வருத்த, தோழியிடம் ஆற்றாமையை வெளியிடுகிறாள்.

**வேம்பின் பைங்காய் என் தலைவி எனத் தோழி தலைவனிடம் கூறுதல்**

தலைவன் தலைவியின் ஊடல் தீர்த்து உதவி புரிய வேண்டுமென்று தோழியை வேண்டினான்; அப்பொழுது அவள், முன்னர் என் தோழி கைக்கும் இயல்புடைய வேப்பங்காய் தந்தாலும் வெல்லக் கட்டியெனக் கொண்டீர்; இப்பொழுது பாரி வள்ளலின் பறம்புமலைச் சுனையிலுள்ள தைத்திங்களில் மிகக் குளிர்ந்த தெளிந்த இன்னீரைத் தந்தாலும் சுடுவதாய் உவர்ப்புச் சுவையைத் தருமென்று வெறுத்தீர்; உன்னுடைய அன்பு அத்தன்மையது என முன் அன்புடையவனாக இருந்தமையும், இப்பொழுது

அன்பின்மையுங் காட்டி மறுக்குந் திறனை,

**'வேம்பின் பைங்காயென் றோழி தரினே**

**தேம்பூங் கட்டி யென்றனி ரினியே**

**பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்**

**தைஇத் திங்கட் டண்ணிய தரினும்**

**வெய்ய வுவர்க்கு மென்றனிர்**

**ஐய வற்றா லன்பின் பாலே'** (குறுந்.196)

என்று தோழி வாயில் மறுக்கிறாள். இது,

**'ஏனது சுவைப்பினு நீகை தொட்டது**

**வானோ ரமிழ்தம் புரையுமா லெமக்கென**

**அடிசிலும் பூவுந் தொடுதற் கண்ணும்'** (தொல்.146)

என்னும் தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு மேற்கோளாகக் காட்டப்படுகிறது.

**தலைவன் ஒழுக்கமுடையவன் எனக்கூற தோழி மறுத்துரைத்தல்**

தலைவன் தோழி வாயிலாகத் தலைவியின் ஊடல் தீர்க்கக் கருதி, அவளிடம் நான் பரத்தைமை உடையேனல்லேன் என்று சூளுற, அதனை மறுக்கும் தோழி, 'உன் சூளினியல்பை நன்கறிவோம்; எம்பாற் சூளுற வேண்டா, நீ நுகர்ந்த எம் நலத்தைத் தந்து, நின் சூளை நீயே கொண்டு செல்க' என்றாள் (குறுந்.238). பரத்தையிற் பிரிந்த தலைவன் வந்த போது, நம் நலந்தாவெனக் கேட்போம் எனத் தோழி தலைவியிடம் கூற, அதனைத் தலைவி மறுத்துக் கொடுத்ததைத் தாவென மீட்டுங் கேட்டலைக் காட்டிலும் இறத்தல் நன்று என்று கூறுகிறாள்"(36)

தலைவன் சூளுற, இவ்வாறே பரத்தையர் மாட்டுஞ் சூளுற்றிருப்பான் எனக் கருதி தோழி, அவனை நோக்கி, 'நீ இவ்வாறே பரத்தையரிடமும் சூளுற்று அவர் நலம் நுகர்ந்து சூள் பிழைத்து, இங்கு வந்துஞ் சூளுறுகின்றாய்; இச்சூளும் அவர்பால் நிகழ்த்தியது போன்ற பொய்ச் சூளேயாகும் ஆதலால் ஏற்கத் தகுவதன்று எனக் கூறுகிறாள் தோழி."[37] 'வாரலெஞ் சேரி தாரனின் றாரே அலராகின்றால்"[38] எனக் கூறித் தோழி மறுத்தலும் உண்டு. தலைவியின் உயர்ந்த குணத்தினால் தலைவனின் கொடுமையை மறைத்து அவனை ஏற்றுக் கொள்ளுதலும் உண்டு. அதனையறிந்த தோழி, 'யாயாகியளே... தண்ணந்துறைவன் கொடுமை, நம்மு னாணிக் கரப்பா டும்மே"[39] எனவும், 'காஞ்சியூரன் கொடுமை, கரந்தன ளாகலினாணிய வருமே"[40] எனவும், 'தெறுவ தம்மவித் திணைப்பிறந் தல்லே"[41] எனவும் தலைவன் கொடுமையும், தலைவியின் துன்பமும் பெருந்தன்மையும் புலப்படக் கூறுகிறாள் தோழி.

### தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தல்

தலைமகற்கு வாயில் மறுக்கும் தோழி, 'யாம் புலப்பேம், அதை நீ கேட்க உனக்கு என்ன உரிமை உளது? நீ பரத்தையை மணந்தாய் என்று ஒரு சில பெண்கள் எம் மனையிடத்து வந்து கூறினர். அவர்கள் கூறியதைக் கேட்டோமே ஒழிய நீ பரத்தையை மணந்தாய் என்று நாங்கள் சொல்ல மாட்டோம். அள்ளுரைப் போன்ற சிறந்த வளையலை அணிந்த என் தலைவி மெலியினும் மெலிக பெரும! நீ பரத்தையிடம் செல்லுவதை விலக்குவார் யாவர்?"[42] என்று உரைக்கிறாள்.

தலைவன் பரத்தையுடன் காவிரியில் நீராடினான் என்ற செய்தியைக் கேட்டுத் தலைவி ஊடி இருந்தாள்; மீண்டும் தலைவன் தலைவியிடம் வந்த பொழுது தலைவி ஊடி இருந்தமை அறிந்து தோழியிடம் வாயில் வேண்டினான்; அதற்குத் தோழி பரத்தையுடன் நீராடியதனால் உண்டான அலர் மொழியை எடுத்துக் கூறி வாயில் மறுத்ததாக அகம்.226, 246, 256, 296, குறுந்.295, 354 போன்ற பாடல்களின் வழி அறியலாகிறது.

***தலைவியின் ஊடலைத் தணிக்கத் தன்னால் இயலாது எனத் தோழி உரைத்தல்***

வாயில் வேண்டி நிற்கும் தலைவனை நோக்கி இது என்னால் இயலாது என மறுக்கிறாள் தோழி. இதனை,

***'பெரும்பெயர் மகிழ்ந பேணாது அகன்மோ***

................ ............... ................ ................

***நண்நறுங் கமழ்தார் பரீஇயினள் நும்மொடு***

***ஊடினள் சிறுதுனி செய்து எம்***

***மணல்மலி மறுகின் இறந்திசினோரே'*** (அகம்: 306)

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை அறிந்து கொண்ட தலைவி பெரிதும் ஊடினாள். அவளை அணுகி ஊடலைத் தீர்க்க அஞ்சிய தலைவன் தோழியை அணுக, அது என்னால் இயலாது என்பதுபட மறுத்துக் கூறியது.

***தலைவனின் பண்புகளைத் தலைவியிடம் தோழி எடுத்துக் கூறல்***

தோழி தலைவியைப் பார்த்து, 'அடீ, தனக்கு ஒரு குழந்தை

பிறந்துவிட்டது; தந்தை பேர் சொல்வதற்கு மகன் வந்துவிட்டான் என்ற மகிழ்ச்சியில், நள்ளிரவில் யாவரும் உறங்கும் நேரத்தில் கள்ளன்போல் மெல்ல வந்தார். அவர் ஆசையைப் பார்த்தனையோ'"(43) என்றும்,

நான் விழாவிற்குச் சென்றேன். வழியில் சந்து திருப்பத்தில் அவரும் வந்திருந்தார். ஒருவரையொருவர் எதிர்த்துக் கொண்டோம். 'உம்மைத் தட்டிக் கேட்பார் உண்டோ இல்லையோ, ஒழுங்காய்க் காலம் தள்ளுகிறது தானே என்றேன். இதோ பார், மேல் எல்லாம் சுணங்கு என்று காட்டிப் போய்விட்டார். அவர் பெருங் குணத்தைப் பாராட்டாமலிருக்க முடியுமா"(44) என்றும்,

'அடி நீ எல்லாம் அறிந்தவள். அவரை எண்ணி வருந்துதல் தகாது. ஆடவர் யாவரும் வண்டு அனையர். இது தெரிந்து நீ மனங் கவல்தல் ஒழிப்பாய். அவர் விரும்புங்கால் நீ மிஞ்சுகின்றாய்; நீ விரும்பினால் அவர் மிஞ்சுகின்றார். நான் இறந்த நாளிலேதான் நீங்கள் சேர்ந்து மகிழ்ந்து வாழ்வீர்கள் நான்தான் உங்கள் பூசலுக்கெல்லாம் காரணம்"(45) என்றும்,

விறலியைப் பார்த்து, 'ஏ, விறலி, நீ அவருக்குப் பல பல சொல்லிப் பரத்தையிடம் கொண்டு சேர்க்கின்றாய். அவள் அம்மாவிடத்திலும் பலபல பேசி யாரையும் உறவு ஆக்கினை"(46) என்றும்,

உழவனைப் பார்த்து உழவா, நீ நாற்று நடும்போது ஆங்குள்ள நெய்தல் கோரைகளைப் பிடுங்காதே. அவை வளரட்டும். எம் தலைவிக்கு அணியாக அவை வேண்டியவாகும்"(47) என்றும்,

தலைவனைப் பார்த்து, 'ஐய! உம் செல்வமும் பெருமைகளும் உமக்குச் சிறப்பாகா. உம்மை நம்பினோர்மீது நீர் காட்டும் கண்ணோட்டம் ஒன்றே செல்வம் என்று கூறத் தக்கதாகும். சான்றோர் ஒப்பும் செல்வம் அஃதே ஆதலின் தலைவியைக் கைவிடாது தழுவி வாழ்வீர்"(48) என்றும், தலைவிக்கு அறிவுரை கூறியும், தலைவனைப் புகழ்ந்தும், நொந்தும், உலகியலை எடுத்துரைத்தும், தலைவியின்பால் இரக்கம் கொண்டு இயம்புகிறாள் தோழி.

தலைவன் பரத்தமை ஒழுக்கம் கொண்டவனாக ஒழுகித் தலைவியின் ஊடலைப் போக்க அவள்பால் வாயில்களை அனுப்பினான். வாயில் மறுக்கும் குறிப்புடையவளாகத் தலைவி இருத்தலைக் கண்ட தோழி, முன்பொருகால் தலைவன் வீட்டில் இருந்த பொழுது கிண்கிணியணிந்த காலும் பாலருந்தும் சிவந்த வாயும் உடைய புதல்வன் மாலை அணிந்து தலைவன் மார்பில் ஏறி விளையாட்டயர்ந்தான். அதனால் தலைவன் மார்பு பொலிவு குன்றக் கண்ட தலைமகட்கு உள்ளத்தே பொறாமை தோன்றியது. தலைமகன் மார்பையும் மகனையும் மாறி மாறி நோக்கினாள். தன் புலவிக் குறிப்பைப் புலப்படுத்தினாள். அதனைத் தலைவனும் உணர்ந்தான். தன் மகன் தலைவன் மார்பைச் சிதைத்தலைக் கூட தலைவி பொறாள் என்பதை அறிந்தும் தலைவன் தலைவியை ஒரு பொருட்டாக நினையாது பரத்தமையொழுக்கம் கொண்ட பிறகு அவருக்காக வாயில் வேண்டுதல் பயனற்ற செயல் என்று தோழி கூறுகிறாள். இதனை,

'செயிர்தீர் கொள்கைநம் உயிர்வெங் காதலி

பெருமர வள்ளியிற் பிணிக்கும் என்னார்

சிறுபல் குன்றம் இறப்போர்

அறிவார் யாரவர் முன்னி' யவ்வே' (நற்.269: 5-9)

என்று இளங்கீரனார் பாடியுள்ளார். இப்பாடலில் தலைவன் பரத்தமை ஒழுக்கத்திற்காகப் பிரிந்தான் என்னும் குறிப்பு வெளிப்பட இல்லாமையால் செலவழுங்குவித்தல் என்ற துறைக்குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**தலைவன் தலைவியிடம் எண்ணியும் பார்த்தும் தொட்டும் இன்புறுதல்**

யாரும் அறியாமல் விடியற் காலங்களிற் சென்று அவளுக்குக் கண்ணியும் மலரும் கொடுத்து வந்தேன். அதனை எண்ணி மகிழ்ந்து, 'என்னை விரும்பி அவள் தை நோன்பு ஆற்றி வந்தாள். அவளைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியுமோ! என் மனக் கவலை தீர்க்கும் மருந்து அவள்தான்"[49] என்றும்,

'என்னோடு முனிவுற்றிருந்த அவள் விருந்து வந்ததும் இலையை அறுத்து ஒழுங்கு பண்ணினாள். சமையலறைக்குள் சென்று வேலையைத் தொடங்கினாள். நெற்றி முழுவதும் வியர்வை அரும்ப, அதையும் தன் முந்தானையில் துடைத்துக் கொண்டாள். நான் சென்று அங்கு உற்று நோக்கினேன். என்ன இளஞ்சிரிப்பு! இப்படி ஒரு விருந்து நாள்தோறும் வந்தால் நன்றாயிருக்கும். பிணக்கு என்பதே அங்குத் தோன்றாது. மனை நிறைந்த வாழ்வாகயிருக்கும்"[50] என்றும்,

பாணனே, ஒரு வார்த்தை கேட்டனையா? மகனைக் கையில் பிடித்துக் கொண்டு ஊடல் தீர்க்கும் எண்ணத்துடன் மெல்ல அருகில்

சென்றேன். 'யார் அது, எம்மைத் தீண்டாதீர்' என்று மெல்ல, மான் பிணை போல அயலில் விலகிச் சென்றாள். மற்றொரு குறிப்பு, சிரிக்க வேண்டியது தான்! கருவுயிர்த்துப் படுத்திருந்தாள். அருகில் சென்றேன். ஓ! இனி முதுமை யுற்றவளாயினாய், தாய் ஆகி விட்டாய் என்று வயிற்றைத் தடவினேன். எட்டிப் பார்த்து நாணிக் கண்களைக் கையால் புதைத்துக் கொண்டாள். முகம் மட்டும் மலர்ந்து விளங்கிற்று"[51] என்றும் தலைவியை எண்ணியும் பார்த்தும் தொட்டும் ஊடலின் போது இன்புறும் தலைவனாகக் காணப்படுகிறான்.

**பிரிவிடை வற்புறுத்தும் பாணர்க்குக் கூறல்**

தலைவனைப் பிரிந்து தலைவி ஆற்றாது வருந்த, பாணன் ஆற்றியிருந்திடுக என்று வற்புறுத்தும் துறையில் அமைந்த பாடல்கள் நான்காகும்."[52]

தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தும் தலைவன் வாராமையால் நான் வருந்தவில்லை. இடையர்கள் முல்லை மலர்களை மாலையாகத் தொடுக்கும், உயிர்களிடத்தும் அன்பு செய்தல் இல்லாத இம்மாலைப் பொழுது தலைவன் சென்றுறைந்த நாட்டில் இல்லையோ என்பதை,

**'அன்புஇல் மாலையும் உடைத்தோ**
**வன்புறைப் பாண அவர் சென்ற நாடே'**(ஐங்: 476: 4-5)

என வருந்துகின்றாள். ஆதலின் 'என் கையில் அணிந்த தொடலைக் குறுந்தொடி கழன்று விழும்படி செல்வதும், மாவடு போன்ற தம் அழகினை

இழந்த கண்களையும் நோக்கி இரங்கும் இப் பாண் மகன் மாறுபட்ட பேரன்பை உடையவனாக"[53] விளங்குகின்றான். ஆகையின் உலகம் புகழும் நம் தலைவனிடம் செல்லும் பாணன் நம் இன்னா நிலையை அவர்க்கு உணர்த்துவான் என்பதை,

**'இன்னா அரும்படர் எம்வயின் செய்த**

**பொய்வலாளர் போலக்**

**கைவல் பாண எம் மறவாதீமே'** (ஐங்: 473: 3-5)

எனக் கூறி, அது மட்டுமன்று; குற்றமற்ற எனது ஒளி நுதல் பண்டு போல் திகழும்படி, போர் மேற் சென்றுள்ள நம் தலைவனை நான் விரைந்து சென்று இப்பொழுதே அழைத்து வருவேன் எனக் கூறும் பாண் மகனது பண்பு மிகவும் சிறப்பிற்குரியதை,

**'சென்றவர்த் தருகுவல் என்னும்**

**நன்றா லம்ம பாணனது அறிவே'** (ஐங்: 474: 4-5)

எனக் கூறுவதால், அவன் செயல் நமக்கு நன்மைக்குரியதாகும் எனப் பாணனது ஆற்றுவிக்கும் திறனுக்குத் தலைவி பதில் மொழிகின்றாள்.

**தலைவி தோழிக்கு வாயில் மறுத்தல்**

தலைவி வாயில் மறுத்தல் எனும் துறையில் 'அறுபத்தொன்று"[54] பாடல்கள் அமைந்துள. தலைவி தோழியிடம், தலைவனிடம், வாயில்களிடம் வாயில் மறுத்தல் என்பது ப்ரத்தமை தவறு என்பதைப் பொதுவாக உணர்த்துவதாயின் 'அன்பு வாழ்வின் ஒரு முறையாகவே பரத்தையிற் பிரிவு அமைந்திருந்தலைச் சான்றோர் கூறியுள்ளனர்."[55] ஆயின் தலைவி கூற்றில் அவை இரு நிலைகளில் அமைந்துள. அவை,

1) பரத்தையொழுக்கம் மேற்கொண்ட தலைவனை நினைத்த தலைவியின் துயர்.

2) பரத்தைமையொழுக்கத்தால் தலைவியிடம் தலைவன் கொண்ட ஈடுபாடின்மையால் ஏற்பட்ட அதிர்ச்சி

என்பனவாகும்.

பரத்தையொழுக்கம் மேற்கொண்ட தலைவனை நினைத்த தலைவியின் துயர், மேலும் பின்வருமாறு பகுக்கப் பெறுகிறது. அவை.

1) பரத்தை கைவிட்டதால் அவளது ஊடல், புலவியைத் தீர்க்க இயலாத தலைவன் தலைவியிடம் வந்ததாக உணர்ந்தமை.

2) பரத்தையுடன் தலைவன் கொண்ட உறவு தலைவியின் மனதில் நின்று வருத்தம் செய்தமை

3) தலைவன் தலைவியிடம் காமமிகைக் காரணமாக வாயில்களைத் தூதுவிட்ட நிலை என்பனவாகும்.

இவையாவும் உள்ளுறையின் வாயிலாகவும் நேரிடையாகவும் தலைவியால் மொழியப் பெறுகின்றன.

பரத்தை புலந்ததாலும் அவளது ஊடல், புலவியைத் தீர்க்க இயலாத தலைவன் தலைவியிடம் வந்ததைக் கொக்கினால் உதிர்ந்த மாம்பழம் ஆம்பற் பொய்கையிலே துடும் என விழுந்தது போல பரத்தையால் கைவிடப்பட்ட தலைவன் தலைவியுள்ள இல்லத்தில் துடும் என வந்தான் என்பதை,

**'கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம் கொக்கின்**
**கூம்பு நிலை அன்ன முகைய ஆம்பற்**

***தூங்கு நீர்க் குட்டத்து, துடுமென வீழும்***

***தண் துறை ஊரன்'*** (நற்: 280: 1-4)

என்றும் 'பரத்தையர் கேண்மை இடையறவுபட்டதாக அதன் பொருட்டு அவரைக் காணச் சென்ற தலைவன் அவர் ஊடலைப் பொறாமல் வருந்திக் கூறிய சொற்கள் என் பாங்காயினர் வாயிலாக என் செவிக்கு எட்டின"[56] என்றும்,

'வெள்ளாங் குருகின் பிள்ளை இறந்தமை காணச் சென்ற மடநாரை நொந்து மேலும் நோய்மிகும் போலத் தலைவன் பரத்தையின் ஊடல் நீக்கி, அவளைத் தழுவ வழியில்லாமல் இங்கு வந்தான்"[57] எனவும், 'பரத்தை அன்பு மாறுபட்டு வாயின் மறுத்தலாலே தூதாகச் சென்ற வாயில்கள் வாயின் நேர்விக்க மாட்டாது தலைவன் பால் வந்து நம் கையறவு கூறி நிற்கத் தலைவன்',

***'. . . . . .   . . . . . . கானலம் புலம்பந்***

***துறைவன் . . . . . . . . . . . . . . . . .***

***அறவன் போலும் அருளுமார் அதுவே'*** (ஐங்: 152: 3-5)

என இங்கு நம்மை நினைத்து வந்தான் எனவும் கூறுவள்.

'காவிரி ஆற்றின்கண் பெருகிவரும் புதுநீர் வெண்மை போன்ற தலைவன் மார்பினைப் பொருத மறுத்தது மிகவும் வன்மையாகப் பரத்தை விலக்கத் தொடங்கினாள்"[58] எனக் கூறித் தோழியிடம் தலைவி வாயில் மறுக்கின்றாள்.

பரத்தையுடன் தலைவன் கொண்ட உறவு தலைவியின் மனத்தில் நின்று வருத்தம் செய்தமை, தலைவி தோழியிடம் கூறியும் தலைவனிடம் கூறியும் வாயில் மறுக்கப்படுகின்றது.

தலைவி தோழியிடம் கூறி, வாயில் மறுக்கும் போது 'மகளிர் தன் வளையகத்தே வாழும் நண்டினை அலைத்துப் பின்னும் பல்வேறு மலர்களைப் பறித்து வருவதனை,

**'முள்ளிவேர் அளைக் களவன் ஆட்டி**

**பூக்குற்று எய்திய புனல் அணி ஊரன்'** (ஐங்: 23: 1-2)

எனும் தன்மையுடையன் எனக் கூறி மேலும், தலைவன் இல்லின்கண் வதியும் என்னையும் வருத்திப் பல்வேறு பரத்தையரையும் நுகர்ந்து வருகின்றான்."[59] அதனொடு அமையாமல் பரத்தையருள் நல்லோரை நாடாது புல்லியோரை நாடுவது 'நாணுதற்கு ஏதுவாக அமைகின்றது."[60] இச்செயல் 'காக்கை நன்மீன் இருக்கக் கெடிற்று மீனை உண்பது போல இம்மைக்கும் மறுமைக்கும் ஆக்கம் தர நான் இருக்க இம்மையிற் பழியும் மறுமையில் நிரயமும் தரும் பரத்தையரைத் தேடித்திரிவது போல் ஆயிற்று."[61] இதனால் தலைவன், 'இழி குலத்தில் தோன்றிய பரத்தையரைக் குல மகளிர் போல எண்ணுகின்றான்."[62] இவ் எண்ணத்தோடு அமையாமல் பரத்தையர் சேரிக்குச் செல்லும் தலைவன் நெய்தல் நிலத்துக் குருகு இருங்கழியில் மீனுண்டு நெய்தல் மண்மிசைத் தங்கும் நிலை போலாயினன் என்பதை,

**'வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**

**காணிய சென்ற மடநடை நாரை**

**கானற் சேக்கும்'** (ஐங்: 154: 1-3)

என்னும் அடிகளில் உரைப்பள். அதை விடுத்து 'நந்தவனத்தில் சென்று தங்குதல் போன்று பரத்தையர் சேரியிலேயே உறைந்து விடுகின்றான். அதனுடன் புதிதாகப் பருவமடைகின்ற சேரிப் பரத்தையர் மகளிரை நாடி மனைதோறும் சென்றுறைகின்றான்."[63]

அவ்வகையில் செல்லும் தலைவன் 'பரத்தை மகளிர்களை நயந்து நயந்து பின்னர் நயந்தாரைக் கைவிட்டு அவர் நலத்தை என் நலம் கெடுமாறு கெடும்படிச் செய்கிறான்."[64]

இதனால் 'தலைவனின் செயலை நினைந்து நினைந்து என்னுடைய கையில் வளையல் நெகிழ்ந்து கழன்று நிற்கின்றது"[65] எனத் தோழியிடம் தலைவனின் பரத்தமையொழுக்கத்தைக் கடிந்து வாயில் மறுக்கின்றாள்.

***தலைவி தலைவனுக்கு வாயில் மறுத்தல்***

தலைவனிடத்துத் தலைவி வாயில் மறுக்கும் போது 'பரத்தையரின் தலைமாலை களைந்து விட்டநின் அழகிய மார்பிலே பாடழிந்து தோன்றும் சந்தனம் உன்னைக் காட்டிக் கொடுத்து விடுவதாலும்,"[66] 'புதல்வனுடைய செவ்வாய் நீர் அதனை நனைத்து களைதலால் அடையாளம் வைத்து அனுப்பியவள் வாடுவாள்."[67] மேலும் 'தொடிகழலும் இளையவரான பரத்தையரின் முலைகளிடையே இதழ்கள் எல்லாம் உதிர்ந்தது போக தன் இதழ் வனப்புக் கெட்டுத் தோன்றும், உன் கண்ணி உன்னைக் காட்டிக் கொடுப்பதோடு 'புதல்வன் பற்றி இழுப்பதால் நினக்கு அடையாளமிட்டு அனுப்பியவள் நின் அணிகளைந்த நிலையை நோக்கி ஊடுவாள்."[68] என்பது நோக்கத்தக்கது.

'நின் தலையில் இருக்கும் பூங்கொத்துகள் உன்னை அடையாளம் காணும் பொருட்டு உன்னவள் வைத்ததை நான் அறிவேன். ஆதலின் புதல்வன் பிடித்து இழுத்து அதனைச் சேதம் செய்தால் அவள் கோபிப்பாள்."[69] அத்துடன் 'பரத்தையோடு நீ ஆடிய துணங்கைக் கூத்தினால் கரை கிழிந்து போன உன் ஆடை உன்னைக் காட்டிக் கொடுத்து விடுகிறது."[70] அதனால், நான் சொல்வதனைக் கேள்! உன்னைப் பெறாத பரத்தையர் வருந்துவர்; உன் பொய்மைக்கு மயங்கி எப்பொழுதும் உனக்குத் தோற்று இசைந்து விடக் கூடியவள் நான். என்பதை,

**'தண்டாப் பரத்தை தலைக் கொள்ள நாளும்**

**புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி மற்றும் யாம் எனின்**

**தோலாமோ நின் பொய் மருண்டு'** (கலி: 73: 20-23)

என்பள். ஆதலின் நீ அவள் பால் செல்க! எனக் கூறி தலைவனுக்கு வாயில் மறுக்கின்றாள்.

தலைவன் மேற்கொண்ட பரத்தைமை ஒழுக்கம், தலைவியினிடையே ஈடுபாடின்மையை ஏற்படுத்தித் தலைவிக்கு அதிர்ச்சியைத் தோற்றுவிப்பதனை,

அ. தலைவன் மெய்யான அன்பு கொண்டு மனம் திருந்தி வாராது உலகியல் குறித்து, அலர் அஞ்சி வருவதாகத் தலைவி அறிந்தமை.

ஆ. தலைவனின் மாறுபட்ட அன்பு

இ. தலைவன் பிரியேன் என்ற சூள் பொய்த்தமை.

எனப் பகுத்துப் பார்க்கலாம்.

அ. அலர் அஞ்சி வந்த தலைவனை வாயில் மறுத்தல்

தலைவன் மெய்யான அன்பு கொண்டு மனம் திருந்தி வாராது உலகியல் குறித்து பறவைகள் மன்னரின் தண்ணுமைக்கு அஞ்சி மருத மரக்கிளையில்' போய்த் தங்கி பூங்கொத்துகளை உதிர்ப்பது போல் வருகின்றான் என்பதை,

'வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ
பழனப் பல் புள்இரீய கழனி
வாங்கு சினை மருதத் தூங்கு துணர் உதிரும்
தேர்வண் விரா அன் இருப்பை' (நற்: 350: 1-4)

எனத் தலைவன், 'அன்பு இன்றி ஏதிலார் கூறும் பழிமொழிக்கு அஞ்சி, தலைவியிடம் வருதலால் அவள் நலன் தொலையினும் தொலையட்டும் என்று அவனைச் சாரவிடாமல்"[71] வாயில் மறுக்கின்றாள்.

அ. தலைவனின் மாறுபட்ட அன்பு

'தலைவன் வேழம் போன்று காமக்களியாட்டம் ஆடுகின்ற பரத்தையர்க்குப் புணர்துணையாகின்றான்."[72] ஆதலின் 'தலைவன் நம்மூரின்கண் வாழ்ந்தாலும் நாம் இருக்கும் தெருவிற்கு வாரான்; வந்தாலும் நம் இல்லத்துள் வந்து தழுவிக் கொள்ளான்."[73] இதனால் 'தலைவன் ஊரில் இல்லாதவன் போன்றே நம் திறத்தில் ஒழுகும் தன்மையுடையவன்."[74] 'கடவுளை எய்தும் துறவியர் போன்று நம்மைப் புறக்கணித்து ஒழுகுகின்றான்."[75] இதனால் 'நாணத்தைக் கொன்று நல்லறிவினை இழப்பித்த காமம் சேட் சென்று தொலைந்தது' என்பதனை,

'கடவுள் நண்ணிய பாலோர் போல

ஒரீஇனன் ஒழுகும் என்னைக்குப்

பரியலென்மன் யான் பண்டு ஒரு காலே' (குறுந்: 203: 4-6)

என மொழிந்து இருந்தாலும், பரத்தை என்னைப் போல் தலைவனுக்கு உரியள் ஆயினள் என்பதனை,

'கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல் விளிப்பின்

புலி எதிர் வழங்கும் வளி வழங்கு' (நற்: 174: 3-4)

என்னும் அடிகளில் கூறுவள். 'இல்லகத்திற்குக் கணவனை விரும்பி ஏற்பின் அயலில் பரத்தை ஆரவாரத்தோடு தலைவனை அழைப்பள்."[76] அதன் பிறகு, 'தலைவனிடத்து ஏற்படும் தழுவலில் எத்தன்மையும் இருக்காது."[77] அத்துடன் 'என் பெண்மை நலம் கெடவும், உடல் மெலியவும் பசலை பாயவும் இனிய உயிரானது நீங்குமாயின் அவர்பால் பரிவு கூர்ந்த சொற்களைச் சொல்லுதல் வேண்டாம்"[78] என்ற உணர்வு தோன்றுகிறது. 'அன்பு இல்லாதவிடத்து ஊடல் கொண்டு என்ன பயன்"[79] என்று என் நெஞ்சம் மிக வருந்துகின்றது. மற்றும் 'முல்லை நிலத்தில் மலரும் நெருஞ்சியானது கண்ணுக்கு இனிமை தரும் புதிய மலர், பின்னர் இன்னாமையைத் தருவது போல தலைவன் இப்பொழுது இன்னாதனவற்றைச் செய்து ஒழுகுகின்றான்.' இதனை,

'புன் புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்

கட்கு இன் புதுமலர் முட்பயந்தா அங்கு

இனிய செய்த நம் காதலர்

இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே' (குறுந்: 202: 2-5)

எனத் தலைவ்னின் மாறுபட்ட அன்பினைக் கூறி தலைவி வாயில் மறுக்கின்றாள்.

**இ. தலைவன் சூள் பொய்த்தமை கூறி வாயில் மறுத்தல்**

குல மகளிரைப் போலத் தருக்கித் திரிகின்ற இழிந்த பரத்தையரின் பால் தலைவன் மயங்கி நிற்பதனை,

**'இருஞ்சாய் அன்ன செருந்தியொடு வேழங்**

**கரும்பின் அலமரும் கழனி யூரன்'** (ஐங்: 18: 1-2)

என உள்ளுறையில் கூறி, தலைவன் அவளை மணம் செய்து கொள்ள இருந்த நிலையில் தலைவியின் இல்லத்தெரு வழியில் வந்த போது புதல்வனைக் கண்டு அணைத்து இல்லில் புகுந்த வேளையில் பரத்தையின் இல்லில் இசை எழுந்ததைக் கேட்டு,"[80] தலைவன் முன்பு தலைவிக்கு 'களவுப் பொழுதிற் தெளிவகப்படுத்த செய்த சூள் தப்பினான்' என்பதனை,

**'துறைவன் சொல்லிய சொல் என்**

**இறைஏர் எல்வளை கொண்டு நின்றதுவே'** (ஐங்: 165: 3-4)

எனக் கூறுவள்.

'சூள் தப்பியோரைத் தெய்வம் ஒறுக்கும் என்பதனால் அவன் ஏதம் உறுவான் என்று அஞ்சித் தலைவி உடல் மெலிந்து, வளை கழன்றது'. இச்செயலுக்கே இப்படியென்றால் 'தலைவன் பரத்தையருள் நல்லாரை நாடாது புல்லியோரை நாடி இனிச் சேரேன் என்று கூறிய உறுதிமொழியும்"[81] பிழைபட்டது என்று கூறி வாயில் மறுக்கின்றாள்.

### வாயில் நேர்தல்

தலைவி வாயில் நேர்தலாக 'இருபத்தொன்று"[82] செய்யுட்கள் அமைந்துள. தலைவனது பரத்தைமை மனத்தை அறிந்தும் அவனுக்கு வாயில் நேரும் மனநிலையைத் தலைவி பெறுவதற்குத் தலைவனின் பின்வரும் நிலையே காரணம். இத்துறை,

1. தன் மாட்டுக் குறைவற்ற அன்புடையவன் எனத் தலைவி உணர்ந்தமை
2. வாயில் வேண்டி நின்ற நிலையில் அவன்பால் தன் நெஞ்சு நெகிழ்ந்து செல்வதை நிறுத்தமாட்டாமை
3. ஆற்றாமையே வாயிலாகப் புகும் மனநிலை
4. புதல்வன், விருந்து காரணமாக வாயில் நேர்தல்

எனும் பகுப்பில் அமைகிறது.

**தலைவன் குறைவற்ற அன்புடையவன் எனத் தலைவி உணர்ந்தமை**

பரத்தையிடம், தலைவன் நீடித்து இருக்காமல் தலைவியை நாடி வந்த தலைவனின் அன்பினை, முள்ளிச் செடி புறத்தே முட்களை உடையதாயினும் அதன் மலர்களும் அம்மலர்களில் மணம் உடைய பூந்தாதும் குறைவறப் பெற்றிருத்தலைப் போலத் தலைவன் புறத்தொழுக்கம் உடையவனாயினும் தன் மாட்டு அன்புடையனாகவே இருக்கின்றான். இந்நிலையினை,

**'அணிற்பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து**
**மணிக் கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப**
**இம்மை மாறி மறுமை ஆயினும்**

**நீ ஆகியர் எம் கணவனை**

**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே'** (குறுந்: 49)

என்றும்,

**'தீதுஇல் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்**

**வந்தன்று வாழி தோழி நாமும்**

**நெய்பெய் தீயின் எதிர்கொண்டு**

**தான் மணந்தனையம் என விடுகம் தூதே'** (குறுந்: 106: 3-7)

எனக் கூறியும் வாயில் நேர்கின்றாள். இச்செய்தியினையே குறுந்: 288ஆம் செய்யுளும் மொழியும் என்பது இவண் நினையத்தகும்.

**தலைவியின் நெஞ்சு நெகிழ்ந்து செல்வதை உணர்த்தல்**

பரத்தையர் மாட்டுப் பிரிந்து தலைவன் வாயில் வேண்டிப் புகுந்த வழியும் தலைவியின் உடன்பாட்டை வேண்டி நின்றவிடத்தும் அவள் அவன்பால் ஊடல் உடையவளாயினும் தன்னெஞ்சம் அவனிடத்துச் செல்வதை 'உண்டென்று சொல்வதற்குத் தகுதியற்ற என் உயிர் நின் பெண்டு எனப் பிறர் கூறுகின்ற பழிச் சொற்களைக் கேட்பின் இறந்து போகும் என உணர்ந்து அது மாறப் பெறுவதும், உன்னால் வருத்தம் உற்றவர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடம் வந்து உளம் நொந்து உரையாது இருந்தமையும், பாணன் நோயோடு சேர்ந்த இசையை முழக்கிக் கொண்டு தன்னுடைய சிறப்பால் அன்பும் செல்வமும் முதிர்ந்த தலைவனைக் கவர்ந்து கொள்ளும் பரத்தையர் வீட்டைக் கேட்டும் வாராது இருத்தலும்"[83] எனக்குப் போதுமானது.

அதை விடுத்து 'சுணங்கு படர்ந்து விட்ட என் அழகினையும், ஒளி இழந்த என் கண்கள் துயில் பெறுதலையும், கருங்கூந்தலில் மலர்களைச் சூடி வண்டு மொய்க்கும் என் அழகையும் பெற நான் விரும்பவில்லை. இருப்பின் உன்னைக் கண்டால் என்னை உன்னிடத்தே தள்ளி விட்டுத் தானும் உன்னிடம் வந்து தங்கிவிடும் நெஞ்சு."[84] 'பரத்தையர் கோதையால் பற்களால் செய்த புண்வடுக்களையும் முலைகளிடையே கிடந்து கலைந்த கேசத்துடனும் வருபவனிடம் ஊட வேண்டுமென்று இருப்பேன் இலன். ஆனால் கொள்கையற்ற நெஞ்சு அவ்னைக் கண்டதும் கூடுவேன் என்கிறது."[85] ஆதலின் தம்மோடு,

***'கடவுப கைத்தங்கா நெஞ்சு என்னும் தம்மொடு***

***உடன் வாழ் பகை உடையார்க்கு'*** (கலி: 77: 23-24)

என உடையவள் நான் ஆகையின் என் ஊடல் உறுதியற்றதாய் விடுகிறது எனக்கூறித் தலைவி வாயில் நேர்கிறாள்.

### ஆற்றாமையே வாயிலாகப் புகும் மனநிலை

தலைவன் தோழியை வாயில் வேண்டி அவளால் தான் வாயில் பெறாது, ஆற்றாமை காரணமாகத் தலைவியைக் கூடிய நிலையில், தோழி கேட்கத் தலைவி, 'தலைவனைப் புலத்தல் கூடுமோ? அவர் எம் கொங்கைகளில் மயங்கி,"[86] 'நின் நுதல் வளைவும் ஒளியும் உடையதாயின் தேய்வதில்லை. ஆதலின் மதியுமன்று; நின் தோள்கள் மூங்கில் போல்வன. எனினும் மலையும் அன்று நின் கண்கள் நீல மலர் போல்வன ஆதலின் ஒரு சுனையும் அன்று; நின் சாயல் மெல்லென அசைவதே எனினும் மயிலுமன்று; நின் சொற்கள் சொல்லுக்குச் சொல் தளரும்; எனினும் கிளியும்

அன்று"[87] எனப் பாராட்டிய பருவத்தில், நான் 'சோர்ந்திருக்கும் நிலையை உணர்ந்து வேடன் போல் என்னை அகப்படுத்த எண்ணினான்',

**'வலைவர் போலச் சோர்பதன் ஒற்றி என்**

**புலையர் போலப் புன்கண் நோக்கி'** (கலி: 55: 17-18)

எனக் கலங்கும் என் கண்களைக் கண்டு கழிந்தவன் போல் தொழவும் செய்தான். என்னைத் தொட்டும் விட்டான். ஆயின் இப்பொழுது மார்பில் பால்படும் என அஞ்சி என்னைத் தழுவிக் கொள்ளான் தலைவனின் இப்பாங்கினை,

**'. . . . . . . . . . . . . . . . . . . . இனியே**

**புதல்வற் தடுத்த பாலொடு தடைஇ'** (அகம்: 26: 11-12)

என்பள். மேலும், அதைக் கண்டு யான் பரத்தையர் மாலை சூடி மகிழ இன்புறவும், நீர் விளையாடவும், துணங்கையாடவும் இருப்பதால் நீ அவர்க்குப் பொருத்தமானவர்."[88] யான் இம்மகனுக்குத் தாயாவதற்குப் பொருந்துவோம் என்றேன். அதைக் கேட்ட அவன் யாமும் அவனிடம் அன்புடையோம் எனச் சொல்லிப் பின்பக்கமாக வந்து தழுவிக் கொண்டமையாலும்,"[89] தோழி ஊடல் நீக்க வேண்டும் என்றமையாலும்"[90] ஊடல் தீர்ந்த தலைவி ஆட்டனத்தியை இழந்த ஆதிமந்தி எங்கும் அவளைத் தேடித் திரிந்ததைப் போல அல்லாமல் நான் தப்பினேன். இதனை,

**'. . . . . . . . . . காதலற் கெடுத்த**

**ஆதி மந்தி போல**

**ஏதம் சொல்லி பேதுபெரிது உறவே'** (அகம்: 236: 19-21)

என்று வாயில் நேர்கின்றாள்.

### தலைவி வாயில் நேர்வதற்குப் புதல்வன், விருந்து ஆகியன காரணமாக அமைதல்

தலைவி தன் மகனிடம் தந்தையின் நல்ல குணங்களான 'பகை வெல்லுதல், நீதி வழுவாத ஆட்சி, கொடைத் தன்மை ஆகியவற்றையும், அல்ல குணங்களான தோள் மெலியப் பரத்தமை மேற்கொண்டு நோய் பெறுதல் செய்யாமையை எடுத்துணர்த்தி"[91] செவிலியர் பயிற்றுவித்த சொற்களைக் கூறுக, தந்தையின் பிரிவிற்கு மருந்தாக; என் கையில் மகன் அத்தா அத்தா எனக் கூறி அழைப்பதனை,

***'ஓவாது அடுத்து அடுத்து அத்தா அத்தா என்பான்'*** (கலி: 81: 19)

என்ற நிலையில் தலைவன் மறைவாக வந்து தன் தந்தையின் பெயருடைய மகனைத் தருமாறு கேட்டு அவனை அணைத்துப் பொய் துயில் கொள்ளவும் செய்தான்."[92] இதனால் சினமெல்லாம் அழிந்து ஊடல் தளர்ந்து வாயில் நேர்தலாயிற்று என்பள். மற்றும், 'இரவெல்லாம் பரத்தையர் வீட்டிற்குச் சென்று விட்டு விடிந்த பின்னர் வருகின்றாயே எனக் கேட்கும் நேரத்தில், குதிரை பூட்டிய தேரோடு வந்த விருந்தினரை எதிர்சென்று வரவேற்கும் நிலையில்"[93] ஊடல் தீர்ந்து வாயில் நேர்தல் ஆயிற்று என்பள் தலைவி.

### அறம் கருதித் தலைவனை நேர்தல்

இல்லற நெறிக்கண் அடங்கி நின்று மனைக் கண் இல்லோடிருந்து ஒழுக வேண்டிய தலைவன் கட்டுக் காவலுங் கடந்து சென்று அறநெறி நில்லாப் புன் பரத்தையரைத் தோய்வான் என அவன் கொடுமையை

வெளிப்படத் தலைவி கூறின் தலைவனுக்குப் பழி உண்டாகும். அப்பழிக்குத் தலைவன் நாணுவானாயின், அதனை மறைக்கும் பொருட்டு நல்லன் என்பதை,

**'துறைகேழ் ஊரன் கொடுமை நாணி**

**நல்லன் என்றும் யாமே**

**அல்லன் என்னும் தடமென் தோளே'** (ஐங்: 11: 2-4)

எனக் கூறி 'தலைவி உடன்பட்டுக் கொடுத்த நலத்தை மீண்டு கேட்டலின் உயிரிழத்தல் நன்று ஆகையின் தலைவனைக் கடியாமல்,"(94) 'அவனைத் தெளிந்து மணந்த ஒரு நாள் செயல், பலநாள் நினைந்து வருந்துவதற்கு ஏதுவாயிற்று இல்லற அறங்கருதி"(95) தலைவனுக்கு வாயில் நேர்தல் கடமையாம் என வாயில் நேர்கின்றாள்.

***பொய்ச் சூளின் காரணமாக நேர்தல்***

தலைவனுடன் தலைவி ஊடல் கொண்டும் மாறுபட்டுப் பேசியும் ஒழுகி, அவனது பொய்ச் சூளுக்கு அஞ்சித் தலைவனிடம் 'நெஞ்சம் பொய் நிறைந்திருக்கவும், வாயால் உண்மையானவை போல் ஏதும் நீ சொல்ல வேண்டாம். உன் மாயப் பேச்சுகளைக் கேட்டு மயங்குபவர் எவரேனும் இருப்பாரானால் அவரிடம் போய்ச் சொல்லிக் கொள்."(96) ஏனெனில் 'இவனைப் பொய்ச் சூள் உரைக்கவிடுவோம் என்று கருதி அவன்பால் நெருங்கினால் நான் இன்று தப்பினேன்' என்று அடியிற்கூட வீழ்ந்து விடுவதனை,

**'பொய்ப்ப விடேஎம் என நெருங்கின் தப்பினேன்**

**என்று அடி சேர்தலும் உண்டு'** (கலி: 89: 14-15)

என்னும் அடிகளில் உணர்த்துவள். ஆதலின் 'மாட்சியையுடைய வாழ்வை மறந்தும் நினையாத இவ்வெட்கங் கெட்டவனோடு இந்த ஊடற் போரில் தோற்று,"[97] தலைவி வாயில் நேர்தலுக்குக் காரணம் தலைவனின் பொய்ச்சூளின் காரணமாக அணங்கு, தெய்வம் அவனை வருத்துமோ என்று அஞ்சி வாயில் நேர்கின்றாள்.

**தலைவி வாயில்கட்கு வாயில் மறுத்தல்**

தலைவனின் காம மிகை காரணமாகத் தலைவியிடம் தோழி வாயிலாகச் சென்றும், தலைவன் நேரிடையாகச் சென்றும் வாயில் மறுக்கப்பட்ட நிலையில், தலைவன் வாயில்களைத் தூது விடுகின்றான். இதனால் தலைவிக்கு மேலும் துயரம் எல்லை கடந்து நிற்கின்றது.

தலைவன் தலைவியிடம் வாயில்களைத் தூதுவிட்ட நிலையில் தலைவி வாயில் மறுப்பதனை,

1) பாணனுக்கு வாயில் மறுத்தல்

2) விறலிக்கு வாயில் மறுத்தல்

3) வாயில்கட்கு வாயில் மறுத்தல்

எனும் பகுப்பில் காணலாம்.

**பாணன், பாடினி, விறலி, பொருநன்**

மக்களின் அகவாழ்விலும் புற வாழ்விலும் பாணன், பாடினி, விறலி போன்ற கலைஞர்கள் ஈடுபட்டதை, (தொல். 1096, 1114, 1115, 1189)

தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. தலைவன் தலைவி கற்புவாழ்வில் ஊடல் நிகழுங்கால் ஊடல் தணிக்கும் வாயில்களுள் பாணன், கூத்தர் முதலியோர் இடம்பெற்றுள்ளனர்.

களவு வாழ்க்கையில் இவர்கள் இடம்பெறுதல் இல்லை. அது மரபும் ஆகாது. கற்பு வாழ்க்கையில் தலைவனைப் பரத்தைச் சேரிக்கு இட்டுச் சென்றதாக நூற்பாவில் குறிப்பு ஏதும் இல்லை. தலைவியும் தோழியும் பாணனைக் கடிந்துரைப்பதினின்று பரத்தையர் தொடர்பிற்கு இவர்கள் தொடர்பும் துணையாயினமை என காரணிகளால் அறியப்படுகிறது. 'வெகுண்டனள் என்ப பாண'(98) 'அம்ம வாழி பாண எவ்வைக்கு எவன்பிரி தளிக்கும் என்ப'(99) என்று பரத்தையிடத்துத் தலைவனைக் கொண்டு சேர்ப்பவன் என்று அறியப்படுகிறது.

**பாணன் - தலைவியின் தூதாகத் தலைவனிடம் வேண்டல்**

பாணன் தலைவியின் தூதாகவும் தலைவனிடம் கடிந்துரைப்பவனாகவும் காணப்படுகிறான். இதனை, தலைவன் பாசறையில் நெடிதுநாள் தங்கினான். தலைவியின் தூதாக வந்த பாணன் அதனைக் கண்டிக்கிறான்.

> **'நினக்கியாம் பாணரும் அல்லேம் எமக்கு**
> **நீயும் குரிசிலை அல்லை மாதோ**
> **நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி**
> **ஈரிதழ் உண்கண் உகுத்த**
> **பூசல் கேட்டும் அருளா தோயே'** (ஐங்.480)

பாசறையில் தங்கிய தலைவனிடம், நீ என் தலைவனும் இல்லை; நான் உன் பாணன் இல்லை என உரிமை பேசுகிறான். இருப்பினும் பரத்தையிடம் தங்கிய தலைவனிடம் இவ்வாறு கூறுவதாகப் பாடல்கள் இல்லை. தலைவியின் ஊடல் தீர்க்கும் கடமையினைச் செய்யும் பாணனைக் காணமுடிகிறது. நட்புக் காரணமாகத் தலைமகனது விருப்பத்தை நிறைவேற்றப் பாணன் பரத்தை இடத்துச் சென்றனன் என்பதும், இதையே தொழிலாகக் கொண்டவன் இல்லை என்பதும் பெறப்படுகிறது.

### பாணனுக்கு வாயில் மறுத்தல்

தலைவன் விட்ட தூதாக வந்த பாணனைத் தலைவி மூன்று நிலைகளில் வாயில் மறுக்கின்றாள். இது,

அ. பாணனுக்கு வாயில் மறுத்தலைத் தோழியிடம் கூறல்.

ஆ. தலைவனின் பரத்தமை காரணமாக வாயில் மறுத்தல்.

இ. தலைவனை ஏற்றுக் கொண்ட நிலையில் வாயில் மறுத்தல் எனும் நிலையில் அமைகின்றது.

### அ. பாணனுக்கு வாயில் மறுத்தலைத் தோழியிடம் கூறல்

எருமையினம் நீரில் இறங்கி, ஆம்பல் இலை கிழியப் பாய்ந்து, குவளையை உண்டு கரையில் ஏறி அங்கிருந்து காஞ்சி மரத்தின் தாது முதுகில் படியக் கொட்டிலில் போய்த் தங்கும் இயல்புடைய தலைவனைப் புதிய பரத்தையுடன் கூட்டும் பாணனின் தன்மையினை,

'நண்துறை ஊரன் திண்தார் அகலம்

வதுவை நாள் அணிப் புதுவோர்ப் புணரிய

பரிவொடு வரூஉம் பாணன்' (அகம்: 56: 8-10)

எனக் குறிப்பிடப் பெறுகிறது. ஈண்டு 'அவன் வந்த போது கன்றை ஈன்ற பசு அவன் மீது பாய்ந்தது; அவன் யாழைக் கீழே இட்டு நம் இல்லத்துள் புகுந்தான்; அவனை நோக்கி நான், உம் வீடு இதுவன்று; அதோ அங்குள்ளது என்று கூறி வாயில் மறுத்த"[100] செய்தியைத் தோழியிடம் கூறி நகைக்கின்றாள் தலைவி.

**ஆ. தலைவனின் பரத்தமை காரணமாக வாயில் மறுத்தல்**

அகமாந்தர் வரிசையில் பாணன் குறிக்கத்தக்கவன். 'பாணச் சாதியினர் மலைநாட்டில் உள்ளனர். அந்நாட்டு ஈழச்சாதிப் பெண்கள் பூப்பெய்திய சேதியை அவர் தலைவருக்கு அறிவிப்பதை இன்னுந் தங்குல வொழுக்கமாக உடையர்."[101] இதனால், தலைவன் பாணன் தொடர்பு தெள்ளிய செய்தியாகும்.

பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்ட தலைவன் சார்பாக வந்த பாணனிடம் தலைவி, 'பரதவர் தாம் செய்த வலையைக் கடலில் இட்டு மீன் பிடிக்க எண்ணி, அம்பியில் ஏற்றிக் கொண்டு செல்வர் போல, தலைவன் தான் கருதிய கருத்தை என் இல்லத்தில் நிறைவேற்ற எண்ணியும் என்னைக் கவர நினைத்தும் பாணனிடம் சொல்லி என்னிடம் விடுத்தான்."[102] அத்தகைய பாணன் என்னிடம் வந்து, 'தலைவன் நல்லன், அருளுடையவன், தீ நெறிச் செல்லாதவன், அவரைச் சினத்தலும் ஊடலும் நேர்மையன்று எனத் தலைவனைப் பாராட்டியும்,"[103] 'தலைவனின் தேர்

பரத்தையர் சேரிக்குச் சென்றதில்லை"[104] என்றான் வந்தவனிடம் 'தலைவனை தீ நெறியில் செல்லவிட்டு எம்பால் வந்து பொய் புகல்கின்றாய்."[105] மேலும், தலைவனோ பரத்தையின் தோளும், அல்குலும் கண்ணும் ஆகிய புறவுறுப்புகளின் பால் ஆசையுற்று அவளை நாடித் திரிவதனை,

**'. . . . . . . . . . பணைத் தோள்**

**ஐது அமைந்து அகன்ற அல்குல்**

**நெய்தலம் கண்ணியை நேர்தல் பெறின் நாம்'** (ஐங்: 135:)

என்பள். மற்றும் உம் தலைவனுக்கு யாம் அவள் போல் காட்சி நல்காமல்,"[106] அவன் பிரிவால் 'உடல் கவின் அழிந்து,"[107] 'மேனி பசலை பாய்ந்து,"[108] 'தோள்கள் மெலிந்து"[109] 'வளையல்கள் நெகிழும்படி"[110] இருப்பதனால் 'இவ்வூரின் கண் இப்பொழுது அவன் பழி எல்லா மக்கள் பாலும் அலராகின்றது."[111]

யான் இப்பொழுது தில்லை மரத்தின் நிழலில் இருப்போர் மெய்யும் கண்ணும் வெந்து துன்புறுமாறு போலத் தலைவன் அளியால் கட்டப்பட்ட யான் பெரிதும் வருந்தி நிற்கின்றேன். இதனை,

**'தில்லை வேலி இவ்வூர்க்**

**கல்லென் கௌவை யெழாஅக் காலே'** (ஐங்: 131: 2-3)

எனும் அடிகளின் வழி உணர்த்தினள். ஆதலின் 'நீயோ தலைவன் நன்மொழிகளை வீண் பிதற்றுகின்றாய்."[112] ஆதலின் இதனை விடுத்து என் நிலைமையினைத் தலைவன் பாற் சென்று உணர்த்தும் கடப்பாடு உடையவன். ஆதலால் விரைந்து போய் என் துன்ப நிலையைத் தலைவனுக்குக் கூறுக என்பதனை,

**'துறைகெழு கொண்கன் பிரிந்தென**

**இறைகேழ் எல்வளை நீங்கிய நிலையே'** (ஐங்: 140: 2-3)

என வாயில் மறுத்து மொழிகின்றாள். இங்ஙனம் தலைவி பாணனுக்குத் தலைவனுடைய இன்னாச் செயலைக் கூறி வாயில் மறுத்தலும் காணப் பெறுகிறது.

## இ. தலைவனை ஏற்றுக் கொண்ட நிலையில் வாயில் மறுத்தல்

பரத்தைமை மேற்கொண்டொழுகிய தலைவனைத் தனது சான்றாண்மை காரணமாக ஊடல் தீர்ந்து ஏற்றுக் கொண்ட பின்னரும், தலைவன் இல்லத்தை விட்டுப் புறம் போய பொழுதெல்லாம் அவன் ஒழுக்கத்தில் ஐயமுடையாளாய்த் தலைவி மனம் வருந்தியிருந்த நிலையில், ஆங்கு வந்த பாணன் தலைவியிடம் தலைவன் பிரிவின்றி இருக்கவும் நலங்குன்றி இருப்பது ஏன்? என வினவ, அதற்குத் தலைவி 'நான் உன்னை ஒன்று வினவுவேன்; நீ அதற்கு விடை கூறு; உன்னுடைய தலைவன் விரும்பிய மகளிரும் தம்முடைய அழகினை மீண்டும் பெறுவார்களா'? என நொந்த நிலையினை,

**'நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்**

**திண்தேர்க் கொண்கனை நயந்தோர்**

**பண்டைத் தந்நலம் பெறுபவோ மற்றே'** (ஐங்: 137)

எனக் கூறி, மேலும் 'எம் அழகினைச் சிதைத்துப் பின்னர் எம்பால் அமைந்துள்ள மாட்சிமைப் பட்ட அழகினைப் பாராட்டும் எம்மை மயக்குகின்ற தலைவனைக் காட்டிலும் நீ என் அழகினைச் சிதைக்கவல்லாய்"(113) எனக் கூறி வாயில் மறுக்கின்றாள்.

**விறலிக்கு வாயில் மறுத்தல்**

விறலி தலைவியிடம் வந்து தலைவன் தீதில்லாதவன் என்று கூறி அவனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என வாயில் வேண்டி நிற்க, தலைவி தோழியை நோக்கி, 'நம் தலைவன் பரத்தையை மணம் செய்து கொள்வதில் விருப்பமுடையவனாகலின் என் மென்தோள் நெகிழ்ந்த நிலைமை இவ்வாறாக இருக்க, இந்த விறலியின் கூற்று என்ன?' என்பதை,

**'என் எனப் படுங் கொல் தோழி**
**பேடிப் பெண்கொண்டு ஆடுகை கடுப்ப'** (அகம்: 206: 1-2)

எனத் தோழிக்குச் சொல்வதைப் போல் விறலிக்குத் தலைவி வாயில் மறுக்கின்றாள். வாயில் வேண்டிச் சென்ற விறலிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது என்னும் துறையில் அமைந்தது.

**வாயில்களுக்கு வாயில் மறுத்தல்**

வாயில்களுக்கு வாயில் மறுத்தல் எனும் துறைக் குறிப்பு 'தோழி முதலிய வாயில்கள்,' 'பாணன் முதலிய வாயில்கள்' என மொழியப்பட்டு இருப்பதானும் , தோழி, பாணன் முதலியோர்க்குச் சிறப்பு நிலையில் செய்யுட்கள் இருப்பினும் ஈண்டு வாயில்கள் எனப் பொது நிலையில் அமைத்துக் கொள்ளப் பெற்றது.

இவ்வாயில்களுக்குத் தலைவி, தலைவனின் பரத்தமை ஒழுக்கம் சுட்டியே வாயில் மறுக்கின்றாள். எவ்வாறெனின் சேணிடைப் பிரிந்து வந்த தலைவனைப் பரத்தையர் மடக்கிக் கொண்டு என்னுடைய நல் வாழ்க்கைக்குக் கேடு விளைக்கின்றனர்."[114] 'நம் தலைவன் ஒரே ஒரு

நாள் நம் இல்லத்திற்கு வந்து சென்றமைக்காக அவனுடைய பரத்தை மகளிர் தீயிலிட்ட மெழுகு போல் உருகுவராய் அன்று தொட்டு ஏழு நாள் வரை அழுவாராயினர்."[115]

தலைவனும் அவர்கள் வழி நின்று தாம் ஆடுந்துறையை அழகுபடுத்தி நிற்கின்றான்."[116] 'காமமிகை காரணமாக புதிய புதிய இளம் பரத்தை மகளிரைத் தேடித் திரியும் அவன் தாய்மைப் பருவம் அடைந்துவிட்ட என்னை மறந்தும் அழகிய தன் புதல்வனை மறுத்தும்"[117] முதலை போன்று அன்பில்லாதவனாய் இருப்பதனை,

**'தன் பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு**

**வெண்பூம் பொய்கைத் தன்னூரென்ப'** (ஐங்: 41: 1-2)

எனக் கூறி யானோ, பொய்கையில் மலரும் வெண்பூ போன்று வெள்ளை மனம் உடையவளாக இருக்கின்றேன்."[118] 'என் கண்களும் அவ்வாறு இருந்து பசலை நோய்க்குப் பற்றுக் கோடாகிச் சுருங்குதல் செய்தன."[119] 'என் கண்கள் துன்பக் கண்ணீரை வடிக்கின்றன."[120] 'அவன் மணந்த தோள் மெலிந்து வருந்துகிறது."[121] தலைவனோ 'பரத்தையர் மாயத்தை மெய்யென நம்பி அவர்பால் வதிய, பரத்தையர் துயிலாது தலைவனைக் காவல் செய்கின்றனர்'. இதனை,

**'தண்டுறை யூரன் பெண்டிர்**

**துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே'** (ஐங்: 13: 3-4)

என மொழிந்து, எனக்குப் பகற் பொழுதிலும் நினைவு மிகுதற்குக் காரணமான தலைவன் நிலையினை,

'கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ

நெடுங்கதிர் நெல்லின் நான்மேய லாரும்

புனல் முற்றூரன் பகலும்

படர்மலி யருநோய் செய்தனன் எமக்கே' (ஐங்: 95:)

என்பதனால், 'அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும் துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலும் பிறவுமாகிய இல்லறம் இனிது நடவாமை பற்றியும் கணவன் உவக்கும் வகை அறிந்து நான் சமைத்து வைத்துள்ள இன்சுவை அடிசிலை அவன் வந்து உண்டு மகிழாமை பற்றியும் துன்பங்கள் செய்கின்றான்"[122] எனக் கூறி, வாயில்களுக்குத் தலைவி வாயில் மறுக்கின்றாள்.

பாணனுக்கு வாயில் நேர்தல்

பாணன் வாயிலாக வந்தவிடத்து, தோழியை நோக்கித் தலைமகள் 'இப்பாணன் ஓர் இளமாணாக்கன் தனதல்லாத வேற்றூரிடத்தும் பெரிய தலைமைத் தன்மையுடையவனாகக் காணப்படுகின்றான். இவன் இவனுடைய ஊர் மன்றத்தில் எத்தகைய சிறப்புடையன். இரந்து பெறும் உணவினால் முழு வளர்ச்சியடையாத உடம்போடு உள்ள இவன் புதிதாக விருந்து பெறும் தலைமை உடையவன் ஆவதனை,

'அன்னாய் இவன் ஓர் இளமாணாக்கன்

தன் ஊர் மன்றத்து என்னன் கொல்லோ

இரந்தூண் நிரம்பா மேனியொடு

விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலனே' (குறுந்: 33)

எனத் தலைவி, தலைவனை ஏற்றுக் கொள்ள இருத்தலால் அவனுக்காகத் தூது வந்த பாணனுக்கு அன்றைய விருந்து பெறும் தலைமையைக் கொடுத்து வாயில் நேர்கின்றாள். மற்றும், தலைவனுடைய வரவை எதிர்பார்த்த தலைவி, பாணன் மொழியில் ஐயுற்று நீ கண்டனையோ? அல்லது கேட்டனையோ? என்று பலமுறை வினவுவதை,

**'நீ கண்டனையோ? கண்டார்க் கேட்டனையோ**

**ஒன்று தெளிய நசையினம் மொழிமோ'** (குறுந்: 75: 1-2)

எனக் கூறுவதன் வழித் தலைவனுக்கு வாயில் நேர்தல் அறியப்பெறுகிறது.

ஊடல் தணிக்கும் வாயில்களாகப் பாணன், கூத்தர், விறலி முதலியோர் விளங்கினர் எனத் தொல்காப்பியம் சுட்டினும் பாணனைத் தவிர ஏனையோர் ஊடல் தீர்க்கும் வாயில்களாக இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை. தோழி, தலைமகள் பாணனுக்கு வாயில் மறுத்ததாகத்தான் பாடல்கள் உள்ளன. பரத்தை, காமக்கிழத்தி கூற்றில் அமைந்த பாடல்களில் பாணர், கூத்தர், விறலி, பாடினி ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை.

**புதல்வன் - வாயில்**

தொல்காப்பியத்தில் புதல்வன் என்ற சொல்லாட்சி உண்டே தவிர, புதல்வி என்ற பெண்பாற் சொல்லாட்சி இல்லை. தலைவன் கூற்றுக்குரிய களன்களைச் சுட்டுங்கால்,

**'புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின்**

**நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி**

**ஐயரீ பாங்கினும் அமரர் சுட்டியும்**

**செய்பெருஞ் சிறப்போடு சேர்தற் கண்ணும்'** (தொல். 1092)

கூற்று நிகழும் என்று குறிப்பர் தொல்காப்பியர். இங்குப் புதல்வன் என்று சுட்டப்பட்டுள்ளதே தவிர புதல்வி என்றில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். தலைவன் கூற்றுக்குரிய களன்களைச் சுட்டுங்கால்,

**'தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை**

***மாயப் பரத்தை உள்ளிய வழியும்'*** (தொல். 1092)

என்று தலைவி கூற்று நிகழும் என்பர். பரத்தையும் புதல்வனை மதித்து எண்ணுகிறாளே தவிரப் புதல்வியை எண்ணவில்லை.

தலைவன் பரத்தையிற் பிரிந்தானகத் தலைவி ஊடல் கொண்டிருத்தல் இயல்பே. ஊடற்காலத்தே தலைவன் தன் வீட்டிற்கு வருவதற்கு மன்ங் கூசுவன். அச்சமயத்தில் தன் மகனை அழைத்துக் கொண்டு வீட்டினுள் நுழைவான். மகனொடு வரும் தலைவனைத் தலைவி ஏதும் கடிந்து கூற இயலாத நிலையில் தலைவியின் ஊடல் நீக்கும் வாயில்களுள் புதல்வனும் ஒருவனாகிறான்.

**'இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து**

**பின்னர் வந்த வாயிற் கண்ணும்'** (தொல். 1097)

**'மின்னிழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும்'** (தொல். 1118)

என்று புதல்வன் வாயில்களுள் ஒன்றாக இடம் பெறுதலைத் தொல்காப்பியர் சுட்டுவர்.

வாயில்களாகத் தலைவனுடன் வருவோர் முன்னிலையில் தலைவி தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைக் கடிந்து பண்பாட்டுக் குறைவுடன்

நடந்து கொள்ளமாட்டாள். பிறர் முன்னிலையில் தலைவனிடத்துச் சிறப்பாக நடந்து கொள்வாள். அதே நிலைதான் மகன் முன்னர்த் தலைவி நடந்து கொள்ளும் பாங்கும் அமையும். 'தலைவனின் குறைபாடுகளை மகன் அறிந்தால் இருவருக்கும் குறைபாடாக ஆகிவிடும்; குடும்பக் குறைபாடாகி விடும். குடும்பக் குறைபாடாகி விடும் என்ற நினைப்பால் கடிந்து கூறா தொழிவள். ஈண்டும் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் புதல்வன் சுட்டப் பெறுதல் நோக்கத்தக்கதாகும்."(123) என்பர்.

கலித்தொகைத் தலைவி ஒருத்தி தலைவனுடன் ஊடல் கொண்டனள். மகன் வாயிலாக ஊடல் தீர்ந்து தலைவனுடன் கூடுகின்றாள். தன் மகன் தந்தையிடம் செல்லக்கூடாது என்ற கடிந்தும் கூறுகின்றாள். மகன் அவற்றையெல்லாம் கேளானாகிச் சென்றதனால் தலைவனுக்கு இசையில் நேர்ந்தது என்று கூறினாள் தலைவி. இதனை,

**'மகனல்லான் பெற்றமகன்**
**கன்றி யதனைக் கடியவும் கைநீவித்**
**தந்தைவியன் மார்பிற் பாய்ந்தான் அறனில்லா**
**அன்பிலி பெற்ற மகன்'** (கலி:86: 26-34)

என்ற கலித்தொகைப் பாடலடிகள் சுட்டுகின்றன.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டும் தோழி அவன் பொருட்டு வாயிலாக வந்தாள். தலைவி வாயில் நேர்ந்த கருத்துடன் முன்பு ஒருமுறை தலைவன் செய்த ஒரு செயலை ஒரு கதை போல எடுத்துக் கூறுகிறாள்.

தோழி! மலர் மாலையை அணிந்த மார்பனாகிய நம் தலைவன் நேற்று ஒருத்தியை மணம் செய்து கொள்ள விரும்பினான். புதிதாகச் செய்த மணக்கோலத்துடன் இத்தெருவினையும் கடந்து சென்றான். அப்போது அவனது தேர்க் குதிரையின் மணி ஒலித்தது. அவ்வோசையைக் கேட்ட என் புதல்வன் தளிர்நடையிட்டுத் தலை வாயிலுக்குச் சென்றான். மலர் போன்ற கண்களை உடைய அப்புதல்வனைக் கண்டான் தலைவன்; தேரை நிறுத்தச் சொல்லித் தேரினின்றும் இறங்கினான். காலந்தாழ்த்தாது மகனின் பவளம் போன்ற சிவந்த வாய், தன் மார்பைப் பொருந்தத் தழுவினான். பெரும! இனி நீ வீட்டிற்குச் செல்வாயாக! என விடுத்தான். புதல்வன் அதற்கு உடன்படாது அழுதான். அங்ஙனம் அழுது தடுத்த மகனோடு இவன் குபேரனும் ஆவான் எனக் கூறி வீட்டுக்குள் வந்தான்.

இச்செயலை நான்தான் செய்தேன் எனத் தலைவனும் மற்றவரும் எண்ணுவதற்கு இடமாதலை நினைத்தேன்; நாணினேன். இக்கொடியவன் இந்த புது மணமகன் செயலை இடையூறு செய்து கலக்கிவிட்டான் போலும்! என்று கடிந்து கூறி, அம்மகனை அடிப்பதற்குக் கோலுடன் அணுகினேன். அப்போது தலைவன் மகனைத் தன்பால் அணைத்துக் கொண்டான்.

மணம் நிகழும் அப்பெண்டிரின் மனையின்கண் முழவின் இனிய ஓசை ஒலித்தது. அவ்வோசை அத்தலைவனை அழைப்பதைப் போல முழங்கிற்று. முன்பொருநாள் நாம் கழங்கு ஆடும் தோழியர் கூட்டத்தினின்று நீங்கி அவனை முதன்முதலாகக் கண்ட போது, நம்மைத்

தேற்றி அருள் செய்தற்காகக் கூறிய சூளுரை தன் மனத்தில் தோன்றிச் சுட்டதால், அவன் தான் விரும்பிய மணத்தையும் மேற்கொள்ளாமல் கைவிட்டான் அல்லனோ? எனத் தலைவி தோழியிடம் எடுத்துரைக்கின்றாள்.

புதல்வன் மீது தலைவன் கொண்ட அன்பு அவன் புறப்பெண்டிரை மணப்பதைத் தடை செய்தது. தலைவியுடன் ஒன்று கூட்டுவித்த செய்தியை,

**'நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு**
**வதுவை அயர்தல் வேண்டி, புதுவதின்**
**இயன்ற அணியன், இத்தெரு இறப்போன்**
**மாண்தொழில் மாமணி கறங்க, கடைகழிந்து**
............. ............. ............. .................
**பழங்கண் ணோட்டமும் ஒலிய**
**அழுங்கினன் அல்லனோ, அயர்ந்ததன் மணனே'** (அகம்.66)

என்ற அடிகளின் மூலம் அறியப்படுகிறது.

பரத்தமை காரணமாகத் தலைவன் தலைவியருக்கிடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கத் தாய், தோழி, பார்ப்பன், பாங்கன் போன்ற பன்னிரு வாயில்களைத் (கற்பியல் நூ.52) தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். எனினும் அவ்வூடலைத் தீர்க்கும் வாயிலாக - கருவியாக - புதல்வனும் அமைவதைப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. தொல்காப்பியர் காலத்தினின்றும் ஏற்பட்ட வளர்ச்சி நிலையாக இதனைக் கொள்ளலாம்.

எனினும் புதல்வன் காரணமாக ஊடல் தீர்வது இயல்பானதாகவும் இன்பம். அளிப்பதாகவும் உள்ளது.

***சங்க இலக்கியத்தில் பரத்தையர்***

தலைவன் தலைவிக்கிடையே நிகழும் அன்புப் பூசல் அல்லது ஊடல் பரத்தைமையின் காரணமாக அமைகின்றது. பரத்தையர் என்போர் ஒரு குழுவாக அமைந்து ஆடவரை தன்பால் ஈர்க்கும் தன்மையினராக இருக்கவில்லை. பரத்தையர் பற்றி விளக்கம் கூறும் இளம்பூரணர், "ஆடலும் பாடலும் வல்லாராகி, அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி, ஒருவர்மாட்டும் தங்காதவர்"(124) என்பர். குறுந்தொகையில் 8, 80, 164, 364, 370 ஆகிய ஐந்து பாடல்கள் பரத்தையர் கூற்றுகளாக அமைந்தவையாகும். குறுந்.354, 359, 384 ஆகிய பாடல்கள் பரத்தையிற் பிரிவு என்ற நிலையில் பிறருடைய கூற்றுக்களாக அமைந்தவை எனத் துறைக்குறிப்புகள் காட்டுகின்றன.

பரத்தையர்கள் ஆடல் பாடல்களில் வல்லவராக இருந்ததை,

**"மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்**
**தண்டுறை ஊரனெம் சேரி வந்தென"** (அகநா.76: 1-2)

என்றும், விழாக்காலங்களில் தங்களை ஒப்பனை செய்து கொண்டு நகர் நடுவே ஆடியதை,

**"ஆடியியல் விழவு"** (நற்.4:10)

**"முழவுமுகப் புலர்ந்து முறையின் ஆடிய விழவு"** (நற்4:120)

என்றும் பாடல்கள் கூறுகின்றன.

**தலைவிக்கும் பரத்தைக்கும் உள்ள உறவு நிலை**

சங்க மருதப் பாடல்களின்வழி தலைவிக்கும் பரத்தைக்கும் இடையேயுள்ள உறவு நிலைகளை அறியலாம்.

> **"தேர் வழங்கு தெருவில், தமியோற் கண்டே**
>
> **............... .............. ................. ................**
>
> **மாசுஇல் குறுமகள்! எவன்பே துற்றனை?**
>
> **நீயும் தாயை இவற்கு? என**
>
> **............ .............. .............. .............**
>
> **அணங்கு அருங்கடவுள் அன்னோள் நின்**
>
> **மகன் தாய் ஆதல் புரைவது - ஆங்கு எனவே"** (அகநா.16)

என அகநானூறு, தேர் வழங்கு தெருவில் கண்ட புதல்வனைப் பரத்தை விரும்பிச் சென்று 'வருக என்னுயிரே' என்று தழுவி நின்றதையும் அதனைக் கண்ட தலைவி 'குறுமகளே, நீ ஏன் பேதுற்றனை, நீயும் இவனுக்குத் தாய் ஆவாய்"(125) என்று கூறித் தழுவியதையும் 'அணங்கரும் கடவுள் அன்னோள்"(126) எனச் சுட்டுகின்றன. இதிலிருந்து இவர்களின் உறவு நிலை அறிந்தாலும், தலைவி, இவள் தனக்குப் போட்டியாக வந்தவள் என்ற எண்ணத்துடன் உள்ளத்துக்குள்ளே ஊடல் கொள்கிறாள்.

மற்றுமொரு பாடலில், பரத்தையும் தலைவியைத் தமக்கை முறைகொண்டு அழைப்பதாக அமைந்துள்ளது. பரத்தை தலைவியிடம் மெல்ல வந்து நல்ல கூறி 'மடவோய் யானும் நின்சேரியேனே அயலிலாட்டியேன் நுங்கை ஆகுவன் நினக்கு' எனக் கூறித் தலைவியின் நுதலையும் கூந்தலையும் நீவி விடுவதாகச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

பரத்தையர் தலைவிக்குத் தங்கையாகவும் புதல்வனுக்குத் தாயாகவும் கடவுள் தன்மை உடையவளாகவும் காணப்படுகிறாள். சங்கப் பரத்தையர் தலைவனோடு கொண்ட உறவு வதுவை அல்லது திருமண வழிக் கொண்ட உறவாக அமைந்துள்ளமை அறியப் பெறுகிறது.

**“நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையோடு**
**வதுவை அயர்ந்தனை என்ப”** (அகநா.36)
**“............ .............. .............. நாழிருங் கூந்தல்**
**பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து**
**வதுவை அயர்ந்தனன் என்ப”** (அகநா.46)
**“முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்**
**வதுவை மேவல னாகலின்”** (அகநா.206)
**“தலைப்புணைத் தழீஇ வதுவை ஈரணிப் பொலிந்து**
**ஆடியோர்”** (அகநா.166)
**“ஆயிழை மகளிர் முலை ஆகத்துத் தாரிடை**
**குழைய வதுவை மேவலன்”** (அகம்.206)
**“நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியோடு**
**வதுவை அயர்தல் வேண்டி,”** (அகம்.66)

மேற்குறித்த சான்றுகள் தலைவன் பரத்தையரை வதுவை வழிக் கூடினான் என்பதை தெளிவு செய்கின்றன. பரத்தையைத் தலைவனுக்கு அளித்தலை ‘மகட்கொடை நேர்தல்”[127] என்ற சொல்லால் அகப்பாடல் குறிக்கின்றது என்பது நோக்கற்பாலது.

சங்க இலக்கியங்களில் சேரிப்பரத்தை, நயப்புப்பரத்தை, இற்பரத்தை, இல்லிடப் பரத்தை, காதற் பரத்தை என்ற பெயர்களால் பரத்தையர் குறிக்கப் பெறுகின்றனர். இப்பெயர்கள் யாவும் உரையாசிரியர்களால் குறிக்கப்படுகின்றன. "சங்க அக இலக்கியங்கள் பரத்தையர்களில் பல பெயர்களாக இல்லிடைப் பரத்தை (அகநா.186), நயப்புப்பரத்தை (அகநா.336), காதற்பரத்தை (அகநா.396), இற்பரத்தை (குறுந்.364) என்போரைச் சுட்டுகின்றன"[128]என்பர் சே.செந்தமிழ்பாவை. இதனை, "காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை, நயப்புப் பரத்தை, இற்பரத்தை, இல்லிடப் பரத்தை முதலான பரத்தையர் குறித்த பல்வேறு பெயர்கள் சங்க அகப் பாடல்களின் அடிக்குறிப்பில் அதாவது திணைதுறைக் குறிப்புகளில் காணப் பெறுகின்றன. இப்பெயர்களுள் ஒன்றேனும் மூலப் பாடல்களில் காணப்பெற்றிலது என்பது குறிப்பிடத்தக்கது. திணைக் குறிப்புகள் பாடல்கள் தோன்றிய காலத்தில். எழுதப் பெற்றவையா என்பது ஐயத்திற்குரியது. பாடல்கள் எழுதப் பெற்றுருக்குமாயின் இக்குறிப்புகளில் இடம் பெற்ற பெயர்களுள் ஒன்றேனும் பாடல்களில் இடம்பெறாதது வியப்பிற்குரியது"[129] என்பர். ஆக, காதற்பரத்தை, சேரிப்பரத்தை, நயப்புப் பரத்தை, இற்பரத்தை, இல்லிடப் பரத்தை முதலான பரத்தையர் குறித்த பல்வேறு பெயர்கள் சங்கச் செய்யுட்களில் இடம்பெறவில்லை என்பது பெறப்படுகிறது.

### பரத்தையின் நன்மனம்

இன்னோர்தாம் ஆண்டின் முதியராயின், தலைவன் தலைவிக்குள் நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கவும் முன்வந்து, தலைவிக்கு

நன்மதி கூறி, அவளைத் தலைமகனோடு கூட்டி வைத்து மகிழ்வதும் உண்டு. 'காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற்' என்ற கற்பியல் சூத்திரப் பகுதியால் உணரலாம். காதற் சோர்வின் என்பது தானுங் காதல் பரத்தை இளையளாங் காலத்துத் தலைவியை நெருங்கி அறிவுரை கூறலும் என்பதாகும்.

தலைவியை நினைக்காத தலைவனை ஒரு பரத்தை இடித்துரைக்கிறாள். 'ஊரறிய மணந்த நல்லாளைக் கைவிடும் நீ என் போன்றவரைக் கைவிடாதிருப்பாயோ? இந்தத் தவற்றினை நன்கு உணர்ந்து கொள். தலைவியாகிய மலரைக் கருகவிடாதே'''[130] என்று தலைவனை இல்லற நெறிப்படுத்துகிறாள். இதனை,

***"விழுமிதிற் கொண்ட கேண்மை நோவிதின்***
***தவறுநற் கறியாய் ஆயின் எம்போல்***
***ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்***
***மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே"*** (நற்.315)

என்ற நற்றிணைப் பாடலால் அறியப்பெறுகிறது. இத்தகைய நிகழ்வுகளினால் தலைவிக்கும் பரத்தைக்கும் உள்ள உறவு நிலை விளங்கினாலும், அவர்களுக்கிடையே நிகழ்ந்த சகக்கிழத்திச் (சக்களத்தி) சண்டையாகச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

இலக்கியங்களில் பரத்தையர்கள் விலைமகளிராகக் காட்டப்படவில்லை. "இப்பெண்டிர்களைப் பொருட் பெண்டிர்களாக, விலைமாதர்களாகத் தொல்காப்பியமும் சங்கப் பனுவல்களும் புனையவில்லை. இப்பரத்தையர்க்கு அமைந்த நற்பெயர் காமக்கிழத்தி

(தொல் 1096) என்பது. கிழத்தி என்ற சொல்லாட்சியால், இந்நங்கையர்தம் ஒருபால் உயர்வு பெறப்படும். பரத்தையர்கள் பொருளையெல்லாம் வவ்வினார்கள் என்றோ, அது காரணமாக ஆடவர்கள் வறுமை யெய்தினார்கள், குடித்தார்கள் என்றோ, அதுபற்றித் தலைவியர் பிணங்கினர் என்றோ மருதப் பாடல்கள் சிறிதும் மொழிந்தில. தலைவனது சிறுவனைத் தெருவிடைக் கண்ட போது பரத்தையர்கள் அவனுக்குத் தொடியும் மோதிரமும் அணிந்து விடுத்தார்கள் என அப்பாடல்கள் (கலித். 82, 84) நுவலுகின்றன. இதனால் இம்மங்கையர் பொருட் பெண்டிரல்லர் என்பது தெளிவு"[131] என்பர்.

தமிழ்ப்பெண்களின் கற்பினைக் காட்டுவதற்காகப் பரத்தைமை நிகழவில்லை. வாயில் மறுத்தலும் வாயில் நேர்தலும் எதனால் ஏற்படுகிறது என்பதை உற்று நோக்குங்கால், வாயில் மறுத்தலால் பரத்தைமை தவறு என்பதும், வாயில் நேர்தலால் தவறு சரி செய்யப்படுவதும் நிகழ்கின்றன.

**பரத்தை காரணமின்றியும் பிற காரணங்களாலும் தலைவிக்கு ஊடல் நிகழ்தல்**

திருமண வாழ்க்கையில் இன்பம் பெருகுவதற்கு ஊடல் கருவியாக அமைகிறது. "கற்பிற்குரிய கூற்றுகட்கு ஊடல் ஒரு பெருங்களனாக அமைந்திருக்கின்றது. ஊடலுக்குக் காரணமாக அமைவது தலைவனின் பரத்தமை ஒழுக்கமாகும்"[132] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை. தலைவிக்குத் தலைவனின் பரத்தைமை தொடர்பால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை. பிற காரணங்களாலும் ஊடல் உண்டாகும்.

மலரினும் மெலியது காமம் என்பதனை உணர்ந்தவன் தலைவன். வினை முடித்து, மீண்டும் வந்த அவன், தன் காம இச்சையைத் தீர்த்துக் கொள்ளத் தலைவியை வலியப் புணரவில்லை. மாறாக, அவள் தன்பால் கொள்ளும் ஊடலை விரும்பிச் சுவைக்கிறான். காதல் வாழ்விற்குச் சுவை கூட்டும் உப்பாக உள்ள ஊடல் தேவையே என்று நினைக்கிறான். தான் வினை முடித்து வந்தவுடன் வேட்கை மிகுதியால் தலைவியை நெருங்குகிறான். அவளோ ஊடுகிறாள்.

பொருள்வயிற் பிரிந்த தலைவன் வினை முடித்து வந்து சேர்கிறான். தலைவி அவனை இன்முகத்தோடு வரவேற்கவில்லை. பிரிவு நீட்டித்த தலைவனை நோக்கி, என்னை கலங்க விட்டுப் பிரிந்து சென்ற நீ, ஆற்றிடை (கடமையைச் செய்யும் போது) எம்மை நினைக்கவில்லை என்று புலத்தலை மேற்கொள்கிறாள். அதற்குத் தலைவன் சிறந்த உன் பெண்மை நலன்களை மறந்துவிடுதலும் முடியுமோ? பொருளுக்காக என் கடமையைச் செய்கின்ற பொழுது உன்னை நினைக்கவில்லை என்று ஊடல் கொள்கிறாய். ஆற்றிடை நிகழ்ந்ததொன்றினை கூறுகிறேன். அதனைக் கேட்டால் நீ என்னுடன் ஊடல் கொள்ளமாட்டாய் என்று கூறிப் பின்வருமாறு நிகழ்ச்சியைக் கூறினான்.

மூங்கில் மரங்கள் நெருங்கிப் பின்னிக்கொண்டிருக்கின்ற உயர்ந்த காடு. அக்காட்டகத்து ஊகம் புற்கள் எல்லாம் முனிந்து கிடக்கின்றன. தழைகளெல்லாம் காய்ந்து சருகுபட்டு உதிர்ந்து கிடக்கின்றன. மூங்கில் மரங்கள் ஒன்றோடொன்று உரசியதால் தீப்பொறி உண்டாயிற்று. அப்பொறி கீழே முளிந்தும் காய்ந்தும் கிடந்த புல், சருகு முதலியவற்றிடையே

வீழ்ந்தது. அப்பொறி சிறிது சிறிதாகக் கனிந்து சருகுகளும் புற்களும் பற்றி எரியத் தொடங்கின. சுழற் காற்று விசையுடன் அடித்து நெருப்பிற்குத் துணை செய்தது. சிறுகச் சிறுகப் பற்றிய தீ, காற்றின் துணையால் காடு முழுவதும் பரந்து கவர்ந்து கொண்டது. அத்தீயைக் கண்டு அஞ்சி வழியறியாது தடுமாறிய வாணிகக் கூட்டத்தார் ஒரு பக்கம் ஓடுகின்றனர். தீயினைக் கண்ட புலிகளெல்லாம் முழையினைவிட்டு வெளிப்போந்து ஓடத் தொடங்கின. அவற்றைக் கண்ட யானைக் கூட்டங்கள் அச்சமுற்றனவாகி யாவும் ஒரு சேரக் கூடின. இதற்குள் பொழுதும் போய்விட்டது. காட்டுத் தீ ஒருபக்கம், தனது வழி கெட்டுக் கலங்கி இருளைக் கண்ட ஏக்கம் ஒரு பக்கமாக மிகப் பேரல்லலுக்காளாகி அக்காட்டிடையே நின்றேன்.

அந்நேரம் யான் கண்ட தொன்றுண்டு. பரந்து கிடந்த பாயல் ஒன்றன்மேல் ஞெரேரென ஓர் இளமான் தோன்றியது போலும் நீ தோன்றினாய். தோன்றிய நீ, கழன்றுவிடும் வளைகளைத் தள்ளிக் கொண்டு, தாழ்ந்த நோக்கத்தோடு நிலங்கிளைத்துப் புலந்து நின்றனை, அது கண்ட யான், இனிய நகையினை யுடையாய்! யாம் இத்துணைப் பேரல்லலுற்று நிற்கவும் எம்மிடத்து ஊடல் வந்தது எவ்வாறு எனக் கூறி, நின் புருவங்களையும் நெற்றியையும் தடவிக் கூந்தலைக் கோதினேன். ஞெரேரென நின் தோற்றம் மறையவே கனவுபோலப் பொய்யாகத் தோன்றியதை ,எண்ணி யான் ஏக்கற்று வருந்தினேன். உன்னை நினைத்ததை இதனால் உணர்வாயாக என்றான். இதனை பாலைக்கலியில் பெருங்கடுங்கோ,

**"ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்பட்டோர்**

............ ............ .............. ............ ............

............ ............ .............. ............ ............

**நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்**

**ஊடல் யாங்குவந் தன்றென யாழநின்**

**கோடேந்து புருவமொடு குவவுநுதல் நீவி**

**நறுங்கதுப் புளரிய நன்னர் அமையத்து**

**வறுங்கை காட்டிய வாயல் கனவின்**

**ஏற்றேக் கற்ற உலமரல்**

**போற்றா யாகலின் புலத்தியால் எம்மே"** (பாலைக்கலி 39)

என்ற பாடலடிகளின் மூலம் விளக்குகிறார்.

**மராவினது மணம் உயிரினங்களின் செயல் கண்டு தலைவன் மீளாது தலைவி ஆற்றாது கூறல்**

இவ்வகையில் தலைவி ஆற்றாது கூறுவதாக "ஆறு பாடல்கள்"(133) உள. தலைவன் பிரிந்து போகுமிடத்துக் குறிஞ்சி நிலத்து மகளிர் நறுமணமிக்க மராவினது மலரை விரும்பிச் சூடும் இயல்பினர் ஆகலின் அம் மணமே பெரிதும் கமழும் அவர்தம் கூந்தலாகிய பாயலில் வைகி, அவரைத் தழுவி இன்பம் நுகர்ந்த தலைவன்மார்க்கு மராமலர் கமழ்ந்த இடமெல்லாம் தம் ஆருயிர்க் காதலிமார் நினைவு மீக்கூர்ந்து மயங்குவர். ஆயின் தலைவன் மயங்காது சென்றதனை,

**'கருங்கால் மராஅத்து வைகுசினை வான்பூ**

**அருஞ்சுரஞ் செல்லுநர் ஒழிந்தோர் உள்ள**

**இனிய கமழும் வெற்பின்**

**இன்னாது என்ப அவர் சென்ற ஆறே'** (ஐங்: 331: 2-5)

என்பள் தலைவி. இருப்பின் அவர் உறையுமிடத்து 'புறா பெடையை விளித்துப் புணரும் இயல்பினையும்,"(134) 'மான் முதலிய விலங்கினங்கள் ஒன்றை ஒன்று காதலித்து மகிழ்ந்திருத்தலையும்,"(135) 'தொழுவத்தில் ஆனேறு பசுக்களை நாடிச் செல்லுதலையும்,"(136) கண்டு அவற்றின் பாற்படும் அன்புதானுமின்றி 'வன்நெஞ்சனாய்,"(137) 'கொடியன்"(138) உறைகின்றான் எனத் தலைவி ஆற்றாது உரைப்பள்.

பொருள்வயிற் பிரிந்த தலைவனை 'புலந்து மறுப்பேன்' என்கிறாள் தலைவி. 'தலைவன் பிரிந்து தனித்து உரையுமிடத்து உயிரினங்கள் துணையோடு மகிழ்ந்திருப்பதை அறிந்தும் இவளைப் பிரியின் இவள் நிலை என்னவாகும் என்று கருதாது, தலைவன் பிரிந்தான். பிரிந்தவன் மீண்டும் வந்தால் அலங்கரித்த எம் கூந்தலை விடுக, எம்மைத் தொடுதல் ஒழிக என்பேன்' என்கிறாள் தலைவி. இதனை,

**"பொம்மல் ஓதியும் புனைல்**

**எம்மும் தொடாஅல் என்கு வெம்மன்னே"** (குறுந்.191:6-7)

என்று புலந்து கூறி மறுப்பேன் என மொழிவள். தலைவன் பொருள்வயிற் பிரிந்த வழியும்' தலைவிக்கு ஊடல் உண்டாகும் என்பதும், தலைவிக்குப் பரத்தையர் பிரிவால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை என்பதும் பெறப்படுகிறது. சிறுபான்மையாக ஊடல் பிற நிலங்களிலும் உண்டாகும் என்பதும் மேற்குறித்தப் பாடல்களின் வழி அறியலாகிறது.

ஐவகை நிலத்தினும் புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் இரங்கலும் நிகழ்ந்து வருகின்றன. இவையெல்லாம் மக்கள் உணரும் உணர்ச்சிகள் அடிப்படையில் தோன்றுவனவாகும். தொல்காப்பியர் காலத்தில் மட்டுமல்லாது இன்றும் நிகழ்ந்து வருவதினால் தான் தொல்காப்பியரும் பொதுப்பட உரைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தொல்காப்பியர் காலத்தே பரத்தையர் ஒழுக்கம் நடைமுறையில் இருந்து வந்துள்ளது. தொல்காப்பியர் பரத்தை, காமக்கிழத்தி ஆகிய இருவர் பற்றியும் சுட்டியுள்ளார்.

**“தாயர்கண்ணிய நல்லணிப் புதல்வனை**
**மாயப் பரத்தை உள்ளிய வழியும்”** (தொல்.1093)

என்று பரத்தைக்கு அடைமொழி கொடுத்து மொழிகுவர்.

**“தாய்போல் தழீஇக் கழறியும் மனைவியைக்**
**காய்வின்றி அவன்வயின் பொருத்தற் கண்ணும்”** (தொல்.1097)

**“மனையோள் ஒத்தலின்”** (தொல்.1097)

என்று காமக்கிழத்திக்கு அடைகொடுத்துச் சுட்டுவர். மனைவிக்கு ஒத்த நிலை காமக்கிழத்திக்கு இருந்தது புலனாகும். “இல்லக்கிழத்தியும் பரத்தையும் ஓரூரில் இருந்தாலும் ஒருவரை ஒருவர் சந்தித்ததாகவோ அடிக்கடி கூற்றுக்கள் நிகழ்த்தியதாகவோ தொல்காப்பியர் கூறினாரிலர். இருவரும் சந்தித்தல் இல்லற மரபுக்கும் ஏற்றதாகாது”[(139)] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை. “பரத்தையர் பிரிவு பெரும்பாலும் பகைவயின் பிரியும் போது அயல் நாட்டில் நிகழ்ந்தது. பகை நாட்டில் இருந்து பிடித்து

வந்த மகளிர் சமூகமே பிற்காலத்தில் பரத்தையர் சமூகமாகக் கால் கொண்டது. உரோமிலும், தமிழகத்திலும் இது போன்ற ஒத்த நிலை இருந்தது"[140] என்பர் க.ப.அறவாணன்.

சங்கப்பாக்களில் தலைவியும் பரத்தையும் ஒருவரை ஒருவர் சந்தித்த நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. சான்றாக, பரத்தை தலைவியிடம் மெல்ல வந்து நல்ல கூறி 'மடவோய் யானும் நின்சேரியேனே அயலிலாட்டியேன் நுங்கை ஆகுவன் நினக்கு' எனக் கூறித் தலைவியின் நுதலையும் கூந்தலையும் நீவி விடுவதாகச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**"மையீர் ஓதி மடவோய் யானுநின்**
**சேரி யேனே அயலி லாட்டியேன்**
**நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்**
**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர**
**நுதலும் கூந்தலும் நீவி"** (அகம்.386)

என்ற அகநானூற்றுப் பாடலடிகளின் மூலம் அறியப்படுகிறது. தேர் வழங்கு தெருவில் கண்ட புதல்வனைப் பரத்தை விரும்பிச் சென்று 'வருக என்னுயிரே' என்று தழுவி நின்றதையும் அதனைக் கண்ட தலைவி 'குறுமகளே, நீ ஏன் பேதுற்றனை, நீயும் இவனுக்குத் தாய் ஆவாய்' என்று கூறியதையும் நோக்கும் போது இவர்களின் சந்திப்பு நிகழ்ந்ததாகவே கருத இடமளிக்கிறது.

**பரத்தையின் வஞ்சினம்**

பரத்தையின் ஆடல் பாடலில் மயங்கினான் தலைவன் எனக் கேட்ட தலைவி அப்பரத்தையைப் பழித்து தலைவனோடு ஊடினாள். தன்னைப்

பழித்தமையைக் கேள்வியுற்ற பரத்தை, அவன் கூத்துக் காண வந்த அளவிற்கே என்னைத் தூற்றினாளோ? இனி, அவள், அவனை என்பால் முற்றிலும் இழந்து கதறியழ அவனை நான் கைக் கொள்வேன் என சூளுரைத்து சினந்து கூறுகிறாள். இதனை,

**"மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்க**

**தன்துறை ஊரன் எம்சேரி வந்தென"** (அகநா.76: 1-2)

........... ........... ........... ...............

**ஆதிமந்தி பேதுற்று இனைய,**

**சிறை பறைந்து உறைஇச் செங்குணங்கு ஒழுகும்,**

**அம்தண் காவிரி போல,**

**கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின், யானே"**(அகநா.76: 10-13)

என்று பரணர் பாடுகிறார். இது 'தலைமகனை நயப்பித்துக் கொண்டாள்' என்று கழறக் கேட்ட பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது என்ற துறையில் அமைந்தது. பிரிதொரு பாடலில்,

"**எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து**

........... ............. ............ ...........

**ஒளிறுவாட் தானைக் கொற்றச் செழியன்**

**வெளிறுஇல் கற்பின் மண்டு அமர் அடுதொறும்**

**களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்**

**தண்ணுமைக் கண்ணின் அலைஇயர், தன்வயிறே"** (அகநா.106)

என்ற ஆலங்குடி வங்கனாரின் பாடலடிகள், தலைமகள் தன்னைப் புறங் கூறினாளாகக் கேட்ட பரத்தை, அவட்குப் பாங்காயினார் கேட்ப சொல்லியது.

தலைவன் பரத்தைமை பூண்டு ஒழுகினான்; அச்செய்தியைக் கேள்வியுற்ற தலைவி, தன் கணவனுடன் பரத்தையைத் தொடர்புபடுத்தி (ஏசினாள்) வைதாள்; அது கேட்டுப் பொறாத பரத்தை, தலைவியின் தோழியர் கேட்குமாறு தலைவியை இகழ்ந்து கூறுகிறாள்.

தன் கணவனைப் பரத்தையோடு இணைத்துப் பேசும் தலைவிக்குப் பரத்தை, நாம் அதற்குக் காரணமான யாதொன்றும் செய்ய மாட்டோம். ஆயினும், அவள் கூறும் பழியினின்றும் நீங்கப் பெற்றிலேம். ஆதலின் வெற்றி பொருந்திய பாண்டியன், விளங்கும் வாட்படையினையும், குற்றமற்ற படைக்கலப் பயிற்சியையும் கொண்டு, மிக்குச் செல்லுகின்ற கொல்லும் போரினை வெல்லுந்தோறும் களிறாகிய (பரிசில்) உணவினைப் பெறும் பாணன், தான் அடிக்கும் மத்தளத்தின் கண்போலும் தன் வயிற்றிலே அவள் அறைந்து கொள்ளுமாறு, செறிந்த வளையல்கள் ஒலிக்க, கைகளை வீசிச் சிறிது பொழுது அவள் வாழும் மனையிடத்தே நின்று உலவி வருவோம்! வருவாயாக! எனப் பரத்தைத் தன் தோழியிடம் கூறுகிறாள். இவ்வாறு தலைவி பரத்தைமை இல்லாத காலத்திலும், வெற்றுச் சூளுரைத்தும், கலைகளைக் காணச் செல்லும் தலைவனைப் பிறள்மனை நாடுவதற்குத் தலைவியும் ஒரு காரணமாகிறாள் என்பது பெறப்படுகிறது.

'சுடரொடு திரிதரும் நெருஞ்சி போலத் தலைவனை என்னோடு திரியச் செய்யனாயின் என் வளை உடைவதாக"(141) என்ற பாடலடிகளும், 'தலைவனது தாரும் மாலையும் பற்றிக் கூந்தலால் பிணித்து அவன் மார்பைக் காவல் கொள்ளேனாயின் யாய் ஓம்பிய என் நலம் அழிவதாக"(142) என்ற பாடலடிகளும் பரத்தையின் வஞ்சினத்தைக் குறிப்பிடுகின்றன.

## பரத்தையின் பிரிவுத் துயரம்

தலைவிக்கு இணையான பிரிவுத் துயரைப் பரத்தையர் வெளிப்படுத்தினர் என்பதற்குப் பின் வருவன சான்றுகளாகும். 'நம்முறு துயரம் களையார் ஆயினும் இன்னாதன்றே அவரில் ஊரே"[143] எனவும் 'எம்வயின் பசந்தது நுதலே, குட்டுவன் மாந்தையன்ன என் நலம் தந்து சென்மே"[144] எனவும் 'தொண்டியன்ன என் நலத்தைத் தந்து நினது சூண் மொழியைக் கொண்டு செல்வாயாக"[145] எனவும் 'அழுதனள் யெரும் அஞ்சிலோதி"[146] எனவும் வரும் பாடற் கருத்துகள் பரத்தை வருந்துதலைப் புலப்படுத்துகின்றன. ஊரன் தேர் சேரிக்கண் இயங்குவதை அறிந்த தலைமகள், 'எம்போல் மாயப் பரத்தன் வாய்மொழி நம்பிக் கண்ணீர் வடித்துப் பசந்து ஆயம் மருளத் தாய் காக்கும் ஆய் நலத்தை வேண்டாதோள் யார் கொல், அவள் அளியள்"[147] எனப் பரத்தை பற்றிக் கூறுவதும் பரத்தையர் தலைவிக்கு இணையாகத் தலைவனைப் பிரிந்து வருந்தியிருக்கின்றனர்.

## பரத்தையின் ஊடல்

பரத்தையின் தோழி கூற்றுப் பற்றித் தொல்காப்பியரால் சுட்டப்படவில்லை. பரத்தையின் தோழியைக் கேட்பவளாக வைத்துப் பரணர் 'ஒரு பாடல்"[148] பாடியுள்ளார். ஐங்குறுநூற்றில் பரத்தையின் தோழி கூற்றுப் பாடலாக 'ஒரு பாடல்"[149] அமைந்துள்ளது.

தலைவனோடு நீராடுவதற்குப் பரத்தை பெரிதும் விரும்பியிருக்க, தலைவன் அவளை விடுத்துத் தனியே சென்று நீராடினான். இதனை

அறிந்த பரத்தை அவன்மீது கோபம் கொண்டு தன் தோழியை அழைத்துச் சென்று அத்துறையின் ஒரு பக்கத்தில் நீராடினாள். அதுகண்ட தலைவன் அவள் ஊடலைத் தீர்த்து அவளோடு நீராடக் கருதி நீரினுள் மூழ்கி அவளருகில் சென்று அவள் கையைப்பற்றி, இவள் யார் மகள் என்று வினவ, அதுகண்ட தோழி,

**“புதுப்புன லாடி யமர்ந்த கண்ணள்**
**யார் மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந**
**யார் மக னாயினு மறியாய்**
**நீயார் மகனையெம் பற்றி யோயே”** (அகநா.79)

என்று வினவுகிறாள். ஓரம்போகியார் இப்பாடலை பரத்தையின் தோழி கூற்றாகப் பாடியுள்ளார்.

ஊடலை வரையறை செய்து, வரம்பிகா ஊடல் என்றும், வரம்பிகந்த ஊடல் என்றும் கொள்ளப்படுகிறது. “வரம்பிகா ஊடலே மருதத்திணைக்குரியது. வரம்பிகந்த புறத்தொழுக்கால் விளையும் ஊடல் பெருந்திணையே. தலைவிக்கு ஏற்படுவதே மருத ஊடல்; பரத்தையர்க்கு ஏற்படுவன மருத ஊடலாகா. அவரும் மகளிர்தானே, ஊடல் அம்மகளிர்க்கும் இயல்புதானே எனும் ஐயம். எழலாம். அவரும் மகளிர்தான் கூடி மகிழும் ஆற்றலர்தான். எனினும் அப்பொது மகளிரின் கூட்டத்தைக் குறிஞ்சி எனாமை நோக்குக. எனவே, பரத்தையர்க்கு ஊடல் ஏற்படுவது உண்டெனினும், அஃது அன்பின் ஐந்திணையுள் ஒன்றான மருதத்துப் பாடுபொருளுக்கு மரபாகாது என விடுத்தலே ஏற்புடைத்து. ‘எம்நலம் தந்து செல்க’ (அகநா.396:19)என்ற பரத்தை ஊடல்

கொள்வதாகவும் 'கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப் பாவைத் தலைவன்' என்று பரத்தை தலைவியின் பாங்காயினர் கேட்பத் தலைவனை இயற்பழிப்பதாகவும்(குறுந்.8) என் அழகாலும் ஒப்பனையாலும் தலைவனைக் கவர்ந்து புதுப்புனல் ஆடுகிறேன். இது பொறுக்கவில்லையெனில் தலைவி தன் சுற்றத்தாரோடு வந்து, முடிந்தால் அவனைத் தலைவனாக ஆக்கிக் கொள்க என்று அறைகூவல் விடுவது போன்றும் (குறுந்.80) அமைந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. தலைவனுக்குப் பரத்தையரிடம் மகன் பிறந்தான் என்பதும் அம்மகனும். ஊடல் தீர்க்கும் வாயிலானான் என்பதும் இக்காலச் சுவைமிகு புதினமாகலாமேயொழிய இவையாவும் திட்பநுட்பம் செறிந்த வரையறையுடைய ஐந்திணை மருதமாகாது என விடுக்க.

உடன்போக்கின்கண் காட்டு வழியில் விலங்குக் கோட்பட்ட தலைவன்-தலைவியரைப் பாடா அகத்திணை நெறியருமை எண்ணுக. அதுபோன்றே, பொதுமகளிர் கூட்டத்தால் பெற்ற இன்பத்தைக் குறிஞ்சி என்னாமை போல, காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை, ஆயமகளிர் ஆகியோர்தம் ஊடலால் ஏற்படும் உணர்வுகளை மருதஉரி என்னாமையே வரம்பிகவா நெறிகாத்த மாட்சியமையது"[150] என்பர் வெ.தெ.மாணிக்கம்.

மேற்குறித்த கருத்தின்படி பரத்தையர் ஊடல் மருத ஊடலாகாது என்றும், பெருந்திணையில் சேர்க்கவேண்டும் என்பாரும் உண்டு. சங்கச் செய்யுள்கள் சுமார் 700 ஆண்டுகால பரப்புடையது. பரத்தை என்பதற்கு 'அயலவர்' அதாவது தலைமகளின் வேறானவர் என்று பொருள்

கொள்வதாயின் அச்சொல் காமக்கிழத்தியரையும் குறிப்பதாகக் கொள்ளலாம். உரையாசிரியர்களும் பரத்தையரைக் காமக்கிழத்தியருள் ஒருவராகக் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கது. பரத்தையரை விலைமகள் என்ற பொருள்பட எந்த இடத்திலும் தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. இதுபோன்று பரத்தையர் ஆடவர் பலரோடு தொடர்பு கொண்ட செய்தியும் இடம்பெறவில்லை. மூலப்பாடல்களில் இல்லா ஒன்றை உரையாசிரியர்கள் தத்தமது காலத்தில் வழங்கிய சொல்லாட்சிகளைப் பயன்படுத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை, நயப்புப் பரத்தை, இற்பரத்தை, இல்லிடப் பரத்தை என்றனர்.

சங்கப் பரத்தையர் தலைவனோடு திருமண செய்து கொண்டு வாழ்ந்துள்ளனர். இதனை, அகம்.36,46, 66, 166, 206 போன்ற செய்யுட்களின் மூலம் அறியலாம். தலைவிக்கு நிகராக திருமண வாழ்க்கை வாழ்ந்தவர்கள் தங்கள் கணவனிடம் ஊடல் கொள்வது இயல்பே. சங்க மருதப்பாடல்கள் சக்களத்திச் சண்டையைப் பெரிதுபடுத்திக் காட்டவல்லன. தலைவன் ஒருத்திபால் சேர்ந்த வழி மற்றையர் அவளை இகழ்ந்துரைத்தல், ‘சுடரொடு திரிதரும் நெருஞ்சி போலத் தலைவனை என்னோடு திரியச் செய்யேனாயின் என் வளை உடைவதாக”[151] என்ற பாடலடிகளும் இரு பெண்களுக்கிடையே நடந்த போட்டிப் பொறாமைகளை விளக்குகின்றன. இருவரையும் சமநிலை வைத்துப் பாடிய புலவர்கள் தலைவிக்கு இணையான இடத்தைப் பரத்தையருக்கும் தந்துள்ளனர்.

சங்கப் பரத்தையர் ஒருவனையே மணந்து வாழ்ந்த நிலையில், 'நம்முறு துயரம் களையார் ஆயினும் இன்னாதன்றே அவரில் ஊரே"[152] எனவும் 'எம்வயின் பசந்தது நுதலே, குட்டுவன் மாந்தையன்ன என் நலம் தந்து சென்மே"[153] எனவும் 'தொண்டியன்ன என் நலத்தைத் தந்து நினது சூண் மொழியைக் கொண்டு செல்வாயாக"[154] எனவும் 'அழுதனள் யெரும் அஞ்சிலோதி"[155] எனவும் வரும் பாடற் கருத்துகள் பரத்தை வருந்துதலைப் புலப்படுத்துகின்றன. ஊரன் தேர் சேரிக்கண் இயங்குவதை அறிந்த தலைமகள், 'எம்போல் மாயப் பரத்தன் வாய்மொழி நம்பிக் கண்ணீர் வடித்துப் பசந்து ஆயம் மருளத் தாய் காக்கும் ஆய் நலத்தை வேண்டாதோள் யார் கொல், அவள் அளியள்"[156] எனப் பரத்தை பற்றிக் கூறுவதும் பரத்தையர் தலைவிக்கு இணையாகத் தலைவனைப் பிரிந்து வருந்தியிருக்கின்றனர்.

ஒரு பாடலில் காமக்கிழத்தி, 'பாண நின் ஊரன் எம்சேரி வந்து தாருங்கண்ணியும் காட்டி என் நெஞ்சு கவர்ந்தான். யானும் அவன் ஒருவனையே வரித்த ஒருமை நெஞ்சம் கொண்டவள் ஆயினேன்"[157] என்று ஒருவனிடம் மட்டுமே காதல் கொண்டது தெரிகிறது. ஆடவர் பலரோடு அப்பரத்தையர் உறவு கொண்டிருப்பின் அவரைத் தலைவி எங்கையர் என்று எவ்வாறு அழைத்தல் இயலும். செட்டிநாட்டில் இன்றும் இவ்வழக்காறு உண்டு. "செட்டியாருக்கு மனைவி முறையாகும் சிறுமியரை ஆச்சி, கிண்டலாக, வாடி எங்கச்சி என்று அழைக்கிறார்கள்"[158] என்பர். அ.விசுவநாதன். எங்கை என்று தலைவி அழைப்பதாலேயே அப்பரத்தையர் தலைவனோடு மட்டுமே உறவு கொண்டிருந்தனர் என்ற கருத்து வலுப்பெறுகின்றது.

பரத்தை தலைவனிடம் மட்டும் காதல் கொண்டவள், பிற ஆடவரோடு தொடர்பு கொண்டவளும் அல்ல. அதனால் சங்கப் பரத்தையர் ஊடல் தலைவிக்கு இணையாக நடைபெறுவதால் மருத ஊடல் எனலாம்.

***ஊரறிய ஊடல்***

சங்க இலக்கியத்தில் பரத்தையர் ஒழுக்கத்தை கடிந்துரைத்தோர் குறைவு. ஊடலும் ஊடல் நீங்கலும் இல்லத்தளவாக இருத்தல் அகத்திணை மரபாகும். ஊரறிய ஊடல் கொண்ட தலைவியைப் பரிபாடல் 'ஒன்று'[(159)] சுட்டுகிறது.

ஊடற் காலத்தில் தலைவனின் செயல்களாகத் தொல்காப்பியர்,

**"கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி**
**அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்**
**காதல் எங்கையர் காணின் நன்றென**
**மாதர் சான்ற வகையின் கண்ணும்".** (தொல்.பொருள்.1093)

என்று குறிப்பிடுகிறார். ஊடல் தணிப்பதற்காகத் தலைவன் தலைவியின் அடிகளில் வீழ்தலுண்டு. அவ்வாறு வீழ்தல் இல்லத்தின்னுள்ளே நிகழுமே தவிர புறத்தே நிகழாது. மையோடக் கோவனார் என்ற புலவர் பரிபாடலில் (பரி.7) ஓர் ஊடலைச் சித்திரிக்கின்றார். வையை நீராட்டில் தலைவி ஒருத்தி பரத்தை காரணமாகத் தலைவன் மேல் கோபம் கொண்டாள். தான் அணிந்திருந்த மாலையைப் பிய்த்தெறிந்தாள். இதனால் கண்கள் சிவந்தன. இந்நிலையில் அவளுடைய ஊடலைத் தணிப்பதற்காகத்

தலைவன் அவள் அடியில் விழுந்து வணங்கினான். அவளோ அவன் தலைமேல் உதைத்துப் பின்னும் வெகுளி அடங்காதவளாய் ஊடல் கொள்கிறாள். இதனை,

**"என்னை வருவ தெனக்கென் றினையா**
**நன்பெருமர் மார்ப னடுக்குற நண்ணிச்**
**சிகைகிடந்த வூடலிற் செங்கண்சேப் பூர**
**வகை தொடர்ந்த வாடலு னல்லவர் தம்முட்**
**பகை தொடர்ந்து கோதை பரிபூஉ நனிவெகுண்**
**டியாறாடு மேனி யணிகண்ட தன்னன்பன்**
**சேறாடு மேனி திருநிலத் துய்ப்பச் செம்புனல்**
**ஊருட னாடுங் கடை"** (பரி.7: 68-75)

என்ற அடிகள் விளக்குகின்றன.

ஊர் மக்கள் பலரும் நீராடும் இடத்தே தலைவன் தலைவியின் ஊடலைப் போக்க அடிமேல் வீழ்வதும், அவள் அவன் தலையை மிதிப்பதும் மிகையான செயல்களாகும். இல்லத்தின்னுள்ளே நிகழவில்லை. **'செம்புனல் ஊருடன் ஆடுங்கடை."**(160) என்று குறிப்பதிலிருந்து பலரறிய நிகழ்ந்த நிகழ்ச்சியாக அமைகிறது.

வையைப் புனல் வருகை, வையை வனப்பு ஆகியன வருணிக்கப்பட்டு ஓர் ஆணும் பெண்ணும் ஊடல் கொண்டிருக்கும் காட்சி காட்டப்படுகிறது. தலைமகன் தலைமகளோடு புனலாடினான் எனக்கேட்டு இன்புற்ற செவிலித்தாய், தோழியை நோக்கி, நீங்கள் ஆடிய புனலணி இன்பம் கூறுக என்றாள். அதுகேட்ட தோழி, அப்புனலணி இன்பமும்

பல்வேறு வகைப்பட்ட இன்பமும், தலைமகன் அன்பின்மையும் கூறி, என்றும் இந்நீரணி இன்பம் பெறுகயாம் என்று கூறினாள் என்று துறைக்குறிப்பு அமைந்துள்ளது. செவிலிக்குத் தோழி பதில் கூறுவதாக அமைந்துள்ளது.

பிறிதொரு பாடலில் (பரி.20) தலைவன் தன் மனைவியின் அணிகளை மற்றொரு கணிகைக்குக் கொடுத்துவிடுகிறான். கணிகை அணிந்த தன் அணியைக் கண்ட தலைவி அவளைப் பழிக்க, இருவரும். ஏசிக் கொள்கிறார்கள்.

**"ஆயத் தொருத்தி யவளை யமர்காம**

**மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை**

**பெண்மைப் பொதுமைப் பிணையிலி யைம்புலத்தைத்**

**துற்றுவ துற்றுந் துணையிதழ் வாயைத் தொட்டி**

**................ .............. ............... .....................**

**றந்து முழவின் வருவாய்நீ வாய்வாளா**

**எந்தை எனக்கீத்த இடுவளை ஆரப்பூண்**

**வந்தவழி நின்பான் மாயக் களவன்றேல்**

**தந்தானைத் தந்தே தருக்கு"** (பரி.20: 48-78)

என்று விலைக்கணிகையை மிகமிக இழிவாகப் பழித்துப் பேசுகிறாள் தலைவி. பிற சங்கப் பாடல்களில் இத்தகைய போக்கினைக் காணவில்லை. இறுதியாக ஊடல் தீர்ந்து ஒன்றுபடும் நிகழ்வைக் காட்டி இவ்வாறு ஊடலை ஏற்படுத்துவது தென்னவன் வையைச் சிறப்பு என்கிறது. இப்பாடலுக்குத் துறையாக பாணன் தூது சென்று தலைமகனுக்குக்

கார்பருவமும் வையை நீர் விழவணியும் கூறியது என்று கூறப்பட்டுள்ளது. துறைக்குறிப்பிற்கும் பாடலுக்கும் உள்ள தொடர்பின்மையை காணமுடிகிறது. ஊடல் சொற்பொருள் விளக்கத்திற்குச் சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் பரிபாடல்களை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

***காமக்கிழத்தி***

தொல்காப்பியர் காமக்கிழத்தியின் கூற்றுக்களை 'எட்டு"(161) என்பர். அவற்றுள் ஒன்று ஊடலைத் தணிக்கத் தலைவன் விடுத்த வாயில்களை மறுத்துக் கடிதலாகும். 'காமக்கிழத்தியர் என்போர் தலைவியை மணந்தபின் தலைவனால் வேட்கை காரணமாக மணந்து கொள்ளப்பட்டோர் என்றும், அவர் தலைவனின் ஒத்த குலத்தில். பிறந்தோர், அவனிற் தாழ்ந்த குலத்தில் பிறந்தோர், பரத்தையரில் மணந்து கொள்ளப்பட்டோர் என முத்திறப்படுவர் என்றும் இளம்பூரணர் கருத்துரைத்துள்ளார்"(162) என்ற மு.சண்முகம்பிள்ளையின் கருத்து ஒப்புநோக்கத்தக்கது. வாயிலாக வந்த பாணனைக் காமக்கிழத்தி கடிந்துரைத்து மறுப்பதாக ஒரு பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில் காமக்கிழத்தி, 'பாண நின் ஊரன் எம்சேரி வந்து தாருங்கண்ணியும் காட்டி என் நெஞ்சு கவர்ந்தான். யானும் அவன் ஒருவனையே வரித்த ஒருமை நெஞ்சம் கொண்டவள் ஆயினேன். அப்படிப்பட்ட என்னை அவன் கைவிடல் நீதியோ? என் அன்னையோ மூங்கிற்கோலைக் கையில் ஏந்தியவளாகச் சினத்துடன் உள்ளாள்"(163) என்று கூறி பாணனுக்கு வாயில் மறுக்கிறாள். தலைவன் ஒருவனையே

நினைத்து வாழ்பவளாகக் காணப்படுகிறாள். இதன்மூலம் பரத்தையரும் காமக்கிழத்தியரும் ஒருவர் என்பது புலனாகிறது.

**பரத்தையர் என்போர்**

மருதப் பாடல்கள் பெரும்பாலானவை பரத்தையர் பற்றிப் பேசுவன. இல்லற வாழ்க்கையில் ஒழுகும் தலைவன், பாலியல் வேட்கை மிகுதியால் பரத்தையருடன் வாழும் இயல்பினன் ஆயினன். சங்கப் பாடல்களில் பரத்தையர் காமக்கிழத்தியர் பற்றிப்பல உள்ளன. பரத்தையர் தொடர்பை அக்காலச் சமுதாயம் சூழல் கருதி ஏற்றுக் கொண்டது. பரத்தையற் பிரிந்த தலைவனும் சின்னாட் சென்று திரும்புவன். தன் செய்கைக்கு நாணி, தலைவியை அடைய வாயில்கள் மூலம் முற்படுவான். தோழியும் தலைவியும் வாயில் மறுத்து மொழிதலும் உண்டு. சில சமயங்களில் வாயில்களின் வேண்டுகோட்கு இணங்கித் தலைவி தலைவனுக்கு வாயில் நேர்வாள். தலைவனது ஆற்றாமை கண்டு மனம் இரங்கித் தலைவி தலைவனை ஏற்றுக் கொள்ளுதலும் உண்டு. தலைவன் திரும்பி வருவதற்கும், தலைவன் சார்பாக வாயில்கள் வேண்டற்கும், வாயில் மறுத்தற்கும், வாயில் நேர்தற்கும் பல பாடல்கள் உள்ளன.

தொல்காப்பியர் காமக்கிழத்தியர், பரத்தை, பரத்தையர் ஆகிய சொற்களைக் கையாண்டுள்ளார். காமக்கிழத்தி என்ற சொல் காமத்திற்கு உரிமையுடையவள் என்ற பொருளைத் தருகின்றது. "தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் என்ற களவியல் நூற்பாவிற்கு உரையெழுதும் இளம்பூரணர் பரத்தை என்பதற்கு 'அயன்மை' எனப்

பொருள் கொண்டமை நோக்கற்பாலது. பரத்தையர் என்பதற்கு அயலார் என்று பொருள் கொள்வது தவறாகாது. அயலாந்தன்மை எனப் பாட்டுந் தொகையும் பொருள் கொள்ளும் என்பர்"(164) சிலம்பு நா. செல்வராசு

பரத்தை / காமக்கிழத்தியர் தலைவனுடைய வாழ்க்கையில் தொடர்புடையவராக இருந்தாலும் பொருள் நாட்டம் காரணமாகத் தொடர்பு கொண்டதாகத் தெரியவில்லை. இதுபற்றி தொல்காப்பியத்திலும் குறிப்பு இல்லை. மூலப்பாடல்களிலும் செய்திகள் இல்லை. பொது மகளிர் என்ற சொல்லாட்சி கலித்தொகையில் மட்டும் ஒரு பாடலில் இடம்பெறுகின்றது.

**"நாறிருங் கூந்தற் பொதுமகளிர் எல்லாரும்**
**முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோடு**
**எல்லாம் புணர்குறிக் கொண்டு"** (கலித்.101)

பொதுமகளிர் என்ற சொல் பரத்தை அல்லது காமக்கிழத்தியைக் குறிக்கவில்லை. ஆயருடன் சென்றதால் இது ஊர் மகளிரைக் குறிப்பதாகும்.

**கொண்டி மகளிர்**

தொல்காப்பியத்தில் இடம்பெறாத, சங்கப்பாக்களில் இடம்பெறும் பாத்திரம். 'கொண்டி மகளிர்' என்பதாகும். 'பொருள் வாங்குதலையுடைய பரத்தையர்' என்பர் நச்சினார்க்கினியர்.

**"நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்"**(165)

என்று மதுரைக்காஞ்சி கொண்டி மகளிரின் இயல்பை விரிவாகச் சித்திரிக்கும்.

**"கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி"** (166)

எனப் பட்டினப்பாலைச் சுட்டும்.

**"வீழாக் கொள்கை வீழ்த்த, கொண்டி**

**மல்லல் மார்பு மடுத்தனள்**

**புல்லுமற் றெவனோ அன்பிலங் கடையே"** (நற்: 174)

என்ற நற்றிணைப் பாடலால் கொண்டி மகளிரை விரும்பியமையால் புல்லுதலை விரும்பேன் என்றனள் தலைவி. கொண்டி என்ற சொல் மிகுதி, கொள்ளை, கொள்ளப்பட்ட- பிடிக்கப் பெற்ற திறைப் பொருள் என்று பொருள் கொள்ளப்பெறுகிறது. "பரத்தையருள் மிகுதியாகப் பொருள் பெற்றவர் 'கொண்டி மகளிர்' என அழைக்கப் பெற்றனர். கட்டுப்பாடின்றித் திரியும் பெண்-அடங்கா மகளிர் என்ற பொருளில் இன்றும் இச்சொல் பேச்சு வழக்கில் 'கொண்டிச் செறுக்கி' என வழங்குகிறது. மேலும் பரத்தை வீட்டின் வாயிற்புறத்தே நின்று தன்னலங் காட்டிக் கவரும் இயல்பினராகவும் இருந்தனர்"(167) என்பர். இதனை,

**"நன்னகர் வாயிற் கதவுவெளில் சார்ந்து**

**தன்னலங் காட்டித் தகையினாற் கால்தட்டிவீழ்க்கும்"** (கலித்.:97)

என்று அவர்தம் இயல்புகளைக் கலித்தொகைச் சுட்டும். பொதுமகளிர் அணிகலன்களை அணிந்து மயக்கும் மாலைப் பொழுதில் வாயிற்புறத்தே நின்று வழிச் செல்வோர்களைக் கவரும் இயல்பினராக நின்று கொண்டிருப்பர் என்பதும், சங்க இலக்கியத்தில் பொருள் நாட்டம் உடைய சிலரும் இருந்துள்ளனர் என்பதும் மேற்குறித்த சான்றுகளின் வழி அறியமுடிகிறது. பரத்தை, காமக்கிழத்தி இத்தகைய பொருள்

நாட்டமுடைய பெண்டிராக இருந்தமைக்குச் சான்றுகளில்லை என்பது பெறப்படுகிறது.

**பரத்தையரும் திருமண உரிமையும்**

சங்க இலக்கியத்தில் ஆண் பலதார மணமுடையவனாக இருந்துள்ளான். காதற் பரத்தையர், சேரிப்பரத்தையர் போன்று பொதுமகள் ஆகாமல் ஒருவனுக்கே உரிமை பூண்டொழுகும் காமக்கிழத்தி என்க (3:540) என்று ஐங்குறுநூற்றில் பொ.வே.சோமசுந்தரனார் காதல் பரத்தைக்கு விளக்கம் கொடுத்திருப்பது நோக்கத்தக்கது.

இக்காதற் பரத்தையர் ஒரு ஆணை மட்டும் சார்ந்து வாழும் இயல்புடையவர்கள் என்பது புலப்படுகிறது. பரத்தையர் என்போர் பல ஆடவர்களோடு தொடர்பு கொண்டவர்களாகக் காட்டப்படவில்லை. 'யானும் அவன் ஒருவனையே வரித்த ஒருமை நெஞ்சம் கொண்டவள் ஆயினேன்"[168] என்பதிலிருந்து ஓர் ஆடவனோடு வாழ்ந்தாள் என்பது புலனாகிறது. யானும் ஒருவனையே என்றதை நோக்கும் பொழுது, தலைவியைப் போல் நானும் அவன் ஒருவனையே விரும்புவளாக உள்ளேன் என்கிறாள்.

ஓர் ஆணை மட்டும் சார்ந்து வாழ்வதால், இவர்கள் அவனையே திருமணம் செய்து கொள்வதும் நேரிடுகிறது.

**"நறும்பல் கூந்தற் குறுந்தொடி**
**மடந்தையொடு வதுவை அயர்ந்தன்ன யென்ப அலரே"**

(அகம்.36: 11-12)

என்று பாடலடிகளிலிருந்து காமக்கிழத்தியரைத் தலைவன் திருமணம் செய்து கொண்ட செய்தி அலராக எழுந்தது என்பது விளங்கும். தலைவிக்கு இணையாக அவள் கருதப்பட்டாலும், நிம்மதியாக வாழ முடியவில்லை என்பதை,

***"மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ"*** (அகம்.396: 15)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. உன் மனைவியாகிய தலைவி உன்னைப் பறித்துக் கொள்வாளோ என்று அவள் அஞ்சுவது புலப்படுகிறது.

***விருந்தெதிர் ஊடாமை***

பொருள் கொண்டு ஆற்றலாகும் அறங்களுள் விருந்தோம்பல் சிறந்த அறமாகும். விருந்தெதிர் கொள்ளல் இல்லறத்தின் அடிப்படைக் கடமையாகக் கருதப்பட்டது.

***"அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்***
***முல்லை சான்ற கற்பு"*** (நற்.142)

என்ற இடைக்காடனாரின் பாடலின் மூலம் வேளையற்ற வேளையில் வரும் விருந்து போற்றும் தன்மையினை உணரலாம். இளையான்குடி மாறநாயனார் புராணத்தின் வழியும் விருந்து போற்றியமைப் புலனாகும்.

தன் இல்லம் தேடி வரும் விருந்தினர்களைப் போற்றலால் தலைவிக்குத் தலைவனொடு ஊடல் கொள்ளவும் நேரமில்லை என்பதை,

"நன்மனை நனிவிருந்து அயரும்

கைதூவு இன்மையின் எய்தா மாறே" (நற்.280)

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம். விருந்தினரைப் போற்றுதல் தம் இல்லறக் கடமையாகக் கொண்டிருந்தமையால், ஊடல் கொண்ட தலைவன் தினந்தோறும் தம் இல்லம் தேடி விருந்தினர் வரமாட்டார்களா? அவ்வாறு வரும் விருந்தினரின் முன் தலைவி தன் ஊடலை வெளிக்காட்டமாட்டாள் என்ற ஏக்கத்தில், 'என்னோடு முனிவுற்றிருந்த அவள் விருந்து வந்ததும் இலையை அறுத்து ஒழுங்கு பண்ணினாள். சமையலறைக்குள் சென்று வேலையைத் தொடங்கினாள். நெற்றி முழுவதும் வியர்வை அரும்ப, அதையும் தன் முந்தானையில் துடைத்துக் கொண்டாள். நான் சென்று அங்கு உற்று நோக்கினேன். என்ன இளஞ்சிரிப்பு! இப்படி ஒரு விருந்து நாள்தோறும் வந்தால் நன்றாயிருக்கும். பிணக்கு என்பதே அங்குத் தோன்றாது. மனை நிறைந்த வாழ்வாகயிருக்கும்."(169) இதனை,

"எமக்கே, வருகநல் விருந்தே சிவப்பா னன்று

சிறிய முள்எயிறு தோன்ற

முறுவல் கொண்ட முகங்காண் கம்மே" (நற்.120: 10-12)

என்று தலைவன் கூற்றிலிருந்து விருந்தெதிர் ஊடாமைப் புலனாகிறது. தமிழர்கள் செல் விருந்தோம்பி வரு விருந்து காத்திருப்பர் என்பதையும் அறியமுடிகிறது.

**புதல்வனெதிர் ஊடாமை**

ஊடற் காலத்தில் தலைவன் தன் வீட்டிற்கு வருவதற்கு மனம் வெட்கி, சில நேரங்களில் மகனோடு வாயில் புகுவான். தலைவியின்

ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒன்றாக தொல்காப்பியர் சுட்டுவர்.

**"இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து**
**பின்னர் வந்த வாயிற் கண்ணும்"** (தொல்.நூ.1097)

**"மின்னிழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும்"**
(தொல்.நூ.1118)

என்ற தொல்காப்பிய நூற்பாக்களால் புதல்வன் ஊடல் தணிக்கும் வாயில்களில் ஒருவனாகக் காணப்படுகிறான். வாயில்களாகத் தலைவனுடன் வருவோர் முன்னிலையில் தலைவி தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்து பண்பாட்டுக் குறைவுடன் நடந்து கொள்ள மாட்டாள். பிறர் முன்னிலையில் தலைவனிடத்து கோபம் கொள்ள மாட்டாள். அதே நிலையில் மகன் முன்னரும் தலைவி குடும்பக் குறைபாடாகாமல் பார்த்துக்கொள்ளும் நிலையில் காணப்படுவாள். குடும்பச் சூழல் காரணமாக 'அன்பிலி பெற்ற மகன்"(170) என்றளவில் ஊடல் தணிந்து தலைவனுடன் கூடுவதைக் காணமுடிகிறது.

**பதிற்றுப்பத்தில் ஊடல்**

பதிற்றுப்பத்தைப் புலவர்கள் சேரமன்னர்களைப் பாடுவதாக அமைத்துள்ளனர். பதிற்றுப்பத்தின் ஆறாம் பத்து ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பாடுகையில்,

**"அமிழ்துபொதி துவர்வாய் அசைநடை விறலியர்**
**பாடல் சான்று நீடினை உறைதலின்**
**வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்மென**
**உள்ளுவர் கொல்லோநின் உணரா தோரே"** (பதி.51: 21-24)

அமிழ்தம் பொதிந்த வாயினையும் அசையும் நடையினையும் உடைய விறலியரின் பாடல்களை மிக விரும்பியவனாகத் தங்கி இருப்பதால், வேலேந்திய அண்ணலாகிய சேரலாதன் வெற்றி கொள்வதற்கு எளியன் போலும் என்று பகைவர் எண்ணுவர் என்பது இப்பாடலின் பொருளாகும். அரசனது மென்மை பகைவர்க்குத் தம் பகைமைக்குரிய சூழ்ச்சி செய்து வெல்வதற்கு வாயிலாம் என்பர் உரையாசிரியர். விறலியரோடு இருக்கும் சேரனின் வீழ்ச்சியை இப்புலவர் மறைமுகமாகக் கூறி இப்படிப்பட்டவன் அல்லன் சேரன் என்று கூறுவது கருத்தாகும்.

**“இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த**
**வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை**
**ஆன்ற அறிவின் தோன்றிய நல்லிசை**
**ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்**
**இரவலர் புன்கண் அஞ்சும்”** (பதி.57: 10-14)

இப்பாடல் உரிமை மகளிருக்கு அஞ்சும் தலைவனைக் குறிப்பிடுகின்றது. சேரமானின் காதல் மகளிர், புதல்வரான செல்வத்தைச் சேரமானுக்குப் பெற்றுத் தந்தவர்கள். அம்மகளிர் புலவியாற் சினமுற்ற காலத்தில் சேரமான் அஞ்சுவதைவிட இரவலரின் வறுமைக்கு அஞ்சுவான் என்பது இப்பாடலின் பொருள். இதில் சேரனுக்கு மனைவியர் பலர் இருந்தனர் என்பதும் அவர்களின் ஊடலுக்குச் சேரன் அஞ்சினான் என்பதும் பெறப்படுகிறது. குமட்டூர் கண்ணனார் இயற்றிய இரண்டாம் பத்தில்,

**“ஆறிய கற்பின் அடங்கிய சாயல்**
**ஊடினும் இனிய கூறும் இன் நகை”** (பதிற்.16: 10-11)

என்று ஊடலிலும் இனியவை கூறுதல் வேண்டும் என்கிறது.

**புறநானூற்று ஊடல்**

அகத்திணைகளில் காணப்படும் பரத்தமை புறத்திணையிலும் பாடப்பெற்றுள்ளது. பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து நல்லூர்ப் பரத்தை ஒருத்தியிடம் நெடிதொழுகினான். அந்நிலையில் கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் பேகனிடம் கண்ணகிக்காகப் பரிந்து பேசியதை புறநானூற்றில் காணலாம்.

**"இருத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**
**முலையகம் நனைப்ப விம்மிக்**
**குழலினை வதுபோல் அழுதனன் பெரிதே"** (புறம் 143)

எனக் கபிலர் கண்ணகியின் துன்பத்தைக் குறிப்பிடுகிறார். இப்பாடலில் கண்ணகியின் துன்பத்திற்குக் காரணமான பேகனின் பரத்தையொழுக்கம் குறிப்பிடப்படவில்லை. பரணர் தம் பாடலின் தொடக்கத்திலேயே பேகனின் செயல் கொடுமையானது என வெளிப்படையாக,

**"அருளாய் ஆகலோ கொடிதே"** (புறம் 144)

என்று குறிப்பிடுகிறார்.

**"இனைதல் ஆனா ளாக இளையோய்**
**கிளையை மன்னெம் கேள்வெய் யோற்கென**
**யாம் தன் தொழுதனம் வினவக் காந்தள்**
**முகைபுரை விரலில் கண்ணீர் துடையா**
**யாமவன் கிளைஞரேம் அல்லேம் கேளினி**
**எம்போல் ஒருத்தி நலன்நயந்து என்றும்**

**வருஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்**

**ஒல்லென ஒலிக்கும் தேரொடு**

**முல்லை வேலி நல்லூ ரான"** (புறம் 144)

கண்ணகியின் துன்பக் காரணம் வெளிப்படையாகக் காட்டப்பட்டுள்ளது. துன்புறும் கண்ணகிக்கு முறை செய்தலே தான் வேண்டும் பரிசிலெனப் பரணர் பாடுகிறார்.

**"அறம்செய் தீமோ அருள்வெய் யோயென**

**இதியாம் இரந்த பரிசிலஃது அருளின்**

**இனமணி நெடுந்தேர் ஏறி**

**இன்னா துறைவி அரும்படர் களைமே"** (புறம் 145)

பேகன் தன் மனைவி கண்ணகியிடம் மீளச் செல்லுதலையே அரிசில் கிழாரும் பெருகுன்றூர் கிழாரும் பரிசிலாக வேண்டுகின்றனர்.

**"பரிசில் நல்குவை யாயின் குரிசில் நீ"** (புறம் 146)

என்றும்,

**"அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை**

**நெய்யோடு துறந்த மையிருங் கூந்தல்"** (புறம் 147)

என்றும் பேகனின் பரத்தமை கடியப்பட்டு கண்ணகியோடு இல்லற வாழ்க்கையில் இணைவதே அவன தரும் பரிசு என்று வேண்டியுள்ளனர். "பரத்தமைப் பட்ட பிற தலைவன்மார் என் செய்வாரெனின், வீட்டிற்கு வருவதும் போவதும் செய்குவர். புலவி நீக்கி மனைவியரோடு இன்புறுவர். இந்நிலை பிரிவு என்று சொல்லப்பட்டும். பேகனோ ஏனையோர் போல மனைவியைப் பிரியவில்லை. அவளைத் துறந்தான் காண். அதனால் புலவர்தம் புறப்பாடல்களுக்குப் பொருளானான். அவனால் துறக்கப்பட்ட

கண்ணகியின் காரணமாகப் புலவர்கள் பாடினர் என்ற துறைக்குறிப்பில், துறக்கப்பட்ட என்ற வினைநிலையைக் காண்க. துறவாது, பிறர் போல வந்து போகும் பிரிநிலையளவில் பேகன் நடந்திருப்பானானாயின் புலவர்கள் பாடியிரார் அன்றோ? அவன் பரத்தமை இல்லற எல்லை கடந்து சென்றமையால், இடித்துவரை நிறுத்த வேண்டிய கடப்பாடு நட்புடைய புலவர் பாலதாயிற்று. இதனால் அளவுக்குட்பட்ட பரத்தமை புறப்பொருளாகாது அகப் பொருளாம் எனவும், சமுதாயம் அதனைச் சிந்தனை செய்யாது, கடியாது எனவும் அறிகின்றோம்"(171) என்பர் வ.சுப.மாணிக்கம்.

இதனை, பேகனைப் பற்றி பாடல்களும் தேவி ஆற்றாமை கூறி அவள்பாற் போக வேண்டும் என்று இரத்தலின் பரிசில்துறைப் பாடாண்பாட்டு என்று கூறுதலே தக்கதாகத் தோன்றுகிறது என்பர். பதிற்றுப்பத்தில் பிறிதோர் பாட்டில் சேரன் பரத்தையோடு திளைப்பதும் புகழ்ந்து பாடப் பெற்றுள்ளது. 52ம் பாட்டை விளக்கும் போது இதனாற் சொல்லியது. அவன் கை வண்மையோடும் வென்றியோடும் படுத்து அவன் காம இன்பச் சிறப்புக் கூறியவாறாயிற்று என்றும், இப்பாட்டு துணங்கையாடுதல் காரணமாகப் பிறந்த ஊடற் பொருட்டாகையால் 'குரவை நிலை' என்றவாறாயிற்று என்றும் கூறும்போது ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பரத்தையோடு கைகோர்த்துத் துணங்கையாடுதலையும் அவன் இன்பச் சிறப்பாகக் கொண்டு புகழ்ந்து பாடுவதையும் காணலாம் என்பர்.

பரத்தமை ஒழுக்கம் பற்றி இப்பாடல்கள் பேசுவதால் அது மருதத்திணையாகும். அவ்வொழுக்கத்தின் போது தலைவி அழுவதாகக்

கூறுவதும் பெருந்திணை என்பதற்குக் காரணமாகாது என்பதும் பெறப்படுகிறது.

**தொகுப்புரை**

சங்ககாலத்தில் கற்பு என்பது இல்வாழ்க்கை எனப் பொருள் கூறப் பெற்றுள்ளது.

சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையாக ஊடல் கற்பு வாழ்க்கையில் நடைபெறுகிறது. சிறுபான்மையாகக் களவிலும் தலைவனுக்கு அல்லக்குறிப்பட்ட போது ஊடல் நிகழ்கிறது. தன்பால் தவறின்மை என்று (உணர்ப்புவயின் வாரா ஊடல்) எடுத்துக்கூறியும் தலைவி ஊடல் நீங்காளாகத் தன் நெஞ்சை நோக்கிக் கூறுமிடத்தில் தலைவனுக்கு ஊடல் உண்டாகிறது.

சங்க இலக்கியத்தில் தலைவி ஊடுவதாகக் கற்பில் 40 செய்யுட்கள் காணப்படுகின்றன.

புதல்வனைப் பெற்றதினால் தான் முதியவளாகக் காணப்படுவதாக எண்ணியும், பரத்தைக்கு முன்னுரிமை தருவதாக நினைத்தும் தலைவி ஊடல் கொள்கிறாள்.

தலைவனின் பரத்தைமைக்குப் பாணன் என்போன் காரணமாக அமைகிறான் எனத் தலைவி எண்ணுகிறாள்.

தலைவி, தோழி, தலைவன், வாயில்கள் ஆகியோருக்கு வாயில் மறுத்த நிலையும், வாயில் நேர்ந்த நிலையும் தெளிவாக

விளக்கப்பெற்றுள்ளன. தலைவி தலைவனோடு ஊடுவதாக அமையும் பாடல்களும் ஆய்வில் கண்டறியப்பெற்று விளக்கப்பெற்றுள்ளன.

தலைவனின் பரத்தமை காரணமாகத் தலைவி ஊடல் கொள்கிறாள். தலைவன் தலைவியின் அன்பைப் பெறுவதற்காகப் பரத்தையிடமிருந்து திரும்பி வாயில் வேண்டி நிற்கும் போது, பரத்தை கைவிட்டதால் அவளது ஊடல், புலவியைத் தீர்க்க இயலாத தலைவன் தன்னிடம் வந்ததாகக எண்ணுகிறாள்.

பரத்தையுடன் தலைவன் கொண்ட உறவு தலைவியின் மனத்தில் நீங்காத வடு போல அமைந்துவிடுகிறது. அவன் காமமிகுதியால் தான் மீண்டும் தன்னிடம் வருகிறான் என நினைக்கிறாள்.

தலைவன் உண்மையான அன்பு கொண்டு மனம் திருந்தி வரவில்லை; அலர் அஞ்சி வருவதாக நினைக்கிறாள்.

வாயில் வேண்டி நிற்கும் தலைவனை அறங்கருதி, தன்மாட்டுக் குறைவற்ற அன்புடையவன் எனத் தலைவி உணர்ந்து தலைவனை ஏற்றுக் கொள்ளுதல் காணப்படுகிறது.

பொய் சூளின் காரணமாக அணங்கு, தெய்வம் முதலியன அவனை வருத்துமோ என்று அஞ்சி வாயில் நேர்கிறாள்.

தலைவன் தலைவியின் ஊடல் தீர்த்து உதவி புரிய வேண்டுமென்று தோழியை நோக்கி வேண்டுகிறான். அதற்குத் தோழி, தலைவியின் நலன்களை எடுத்துக் கூறி, தலைவி முன்பு வேப்பங்காய் தந்தாலும்

வெல்லக்கட்டியாக இனித்தது. இப்போது பறம்புமலைப் பாரியின் சுனை நீரைத் தந்தாலும் கசப்பாக இருக்கிறது என்றும், தலைவன் தான் பரத்தைமை உடையேனல்லன் என்று சூளுர, உன்னுடைய சூளினை நன்கறிவோம். எங்களிடம் கூறியதைப் போலவே பரத்தையிடமும் சூளுரைத்திருப்பாய் என்றும் தோழி தலைவனைக் கடிந்துரைத்து, வாயில் வேண்டி நிற்கும் தலைவனிடம் தலைவியின் ஊடலைத் தீர்க்கத் தன்னால் இயலாது என்றும் வாயில் மறுக்கிறாள்.

தலைவன் தலைவியரின் வாழ்க்கை என்னும் தேரின் அச்சாணியுடன் கூடிய சக்கரம் போன்றவள் தோழி. தலைவனுக்கு வாயில் மறுக்கும் தோழி, தலைவன் தலைவியின் துன்பத்தை அறிய வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதை அறியமுடிகிறது.

தோழி தலைவியைப் பார்த்து, மகன் பிறந்த மகிழ்ச்சியில் நள்ளிரவில் யாவரும் உறங்கும் நேரத்தில் கள்வனைப் போல் மெல்ல வந்திருக்கும் தலைவனின் ஆசையைப் பார்த்தாயா? என்றும்,

நான் விழாவிற்குச் சென்றேன். வழியில் சந்து திருப்பத்தில் அவரும் வந்திருந்தார். ஒருவரையொருவர் எதிர் கொண்டோம். உம்மைத் தட்டிக் கேட்பார் உண்டோ இல்லையோ, ஒழுங்காய்க் காலம் தள்ளுகிறது தானே என்றேன். இதோ பார், மேல் எல்லாம் சுணங்கு என்று காட்டிப் போய்விட்டார். அவர் பெருங் குணத்தைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை என்றும்,

தலைவி நீ எல்லாம் அறிந்தவள். அவரை எண்ணி வருந்துதல் தகாது. ஆடவர் யாவரும் வண்டு அனையர். இது தெரிந்து நீ மனங் கவல்தல் ஒழிப்பாய். அவர் விரும்புங்கால் நீ மிஞ்சுகின்றாய்; நீ விரும்பினால் அவர் மிஞ்சுகின்றார். நான் இறந்த நாளிலேதான் நீங்கள் சேர்ந்து மகிழ்ந்து வாழ்வீர்கள் நான்தான் உங்கள் பூசலுக்கெல்லாம் காரணம் என்றும் மனம் கலங்கும் தோழியைப் பார்க்க முடிகிறது.

தலைவனைப் பார்த்து, 'ஐய! உம் செல்வமும் பெருமைகளும் உமக்குச் சிறப்பாகா. உம்மை நம்பினோர்மீது நீர் காட்டும் கண்ணோட்டம் ஒன்றே செல்வம் என்று கூறத் தக்கதாகும். சான்றோர் ஒப்பும் செல்வம் அஃதே ஆதலின் தலைவியைக் கைவிடாது தழுவி வாழ்வீர் என்றும், தலைவிக்கு அறிவுரை கூறியும், தலைவனைப் புகழ்ந்தும், நொந்தும், உலகியலை எடுத்துரைத்தும், தலைவியின்பால் இரக்கம் கொண்டு இயம்புகிறாள் தோழி.

தலைவன் பரத்தையை நாடிச் செல்வதால், அவனுடன் ஊடல் கொள்வதில் ஏதும் பயனில்லை. இல்லறப் பெண்டிர் எதையும் தாங்குதல் வேண்டும் என்பது அக்கால வாழ்வியல் பார்வையாகும். ஊடல் நீட்டித்துத் தலைவி உரிமைக்குரல் எழுப்பினால் திருமகள் நீங்குவாள் என எச்சரிக்கப்படுகிறாள். பொருள் வலிமை தலைவனை ஒட்டியதாகலின் தலைவன் நீங்கப் பொருளும் நீங்கலாம். தனிமையும் வறுமையும் துன்புறுத்தும். எளிய உணவு உண்ண வேண்டும். இனிய புதல்வரும் துன்புறுவர். இதனை எல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டு தலைவி ஊடல் கொள்ள வேண்டும் என்பது தோழியின் அறிவுரையாகும்.

தலைவியின் வெறுமையான புலத்தல் பயனற்ற ஊடலே ஆகும் என்கிறாள் தோழி. ஊடல் கொண்ட பெண்களின் மனநிலையை தோழி கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது. சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்குப் பால் இன்றியும், சுற்றத்தார் யாருமின்றியும் தனித்து நின்று வருத்தப்படுவதைக் கண்கூடாக கண்டும், நீ தலைவனுடன் ஊடுவது சரியல்ல என்று தோழி, தலைவிக்குக் கூறுவதாக அமைந்த இப்பாடலில் பரத்தைமை மேற்கொண்ட தலைவனிடம் கோபம் கொண்டால் இழப்பு பெண்களுக்கு ஏற்படும் என்பதும் வலியுறுத்தப்படுகிறது.

தலைவன், தலைவி கற்பு வாழ்வில் ஊடல் தணிக்கும் வாயில்களுள் பாணன், கூத்தர் முதலியோர் காணப்படுகின்றனர். தலைவனைப் பரத்தையர் சேரிக்கு இட்டுச் சென்றதாக நூற்பாவில் ஏதும் குறிப்புகளில்லை. தலைவியும் தோழியும் பாணனைக் கடிந்துரைப்பதினின்று பரத்தையர் தொடர்பிற்குத் துணையாக இவர்கள் இருந்தனர் என்று அறியப்படுகிறது.

பாணனுக்கு வாயில் மறுக்கும் தலைவி, பின்னர் பாணனை அழைத்து விருந்து (குறுந்.33) படைத்துள்ளமை அறியப்படுகிறது. பாணன் தலைவியைப் பிரிந்த தலைவனை கடிந்துரைப்பதும், தலைவிக்காகத் தலைவனிடம்' தூது சென்றமையும் (ஐங்.480) ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

ஊடல் தணிக்கும் வாயில்களாகப் பாணன், கூத்தர், விறலி முதலியோர் விளங்கினர் எனத் தொல்காப்பியம் சுட்டினும் பாணனைத் தவிர ஏனையோர் ஊடல் தீர்க்கும் வாயில்களாக இருந்தமைக்குச்

சான்றுகள் கிடைக்கவில்லை. பரத்தை, காமக்கிழத்தி கூற்றில் பாணர், கூத்தர், விறலி, பாடினி ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை என்பதும் பெறப்படுகிறது.

வாயில்களாகத் தலைவனுடன் வருவோர் முன்னிலையில் தலைவி தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைக் கடிந்து பண்பாட்டுக் குறைவுடன் நடந்து கொள்ள மாட்டாள். பிறர் முன்னிலையில் தலைவனிடத்துச் சிறப்பாக நடந்து கொள்வாள். அதே நிலைதான் மகன் முன்னர்த் தலைவி நடந்து கொள்ளும் பாங்கும் அமைகிறது. தலைவனின் குறைபாடுகளை மகன் அறிந்தால் இருவருக்கும் குடும்பக் குறைபாடாகி விடும். இதனால் கடிந்து கூறாது ஊடல் தணிகிறாள். இதனால் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் புதல்வன் சுட்டப் பெறுதல் அறியப்பெறுகிறது.

தமிழ்ப்பெண்களின் கற்பினைக் காட்டுவதற்காகப் பரத்தைமை நிகழவில்லை. வாயில் மறுத்தலும் வாயில் நேர்தலும் எதனால் ஏற்படுகிறது என்பதை உற்று நோக்குங்கால், வாயில் மறுத்தலால் பரத்தைமை தவறு என்பதும், வாயில் நேர்தலால் தவறு சரி செய்யப்படுவதும் நிகழ்கின்றன என்பது பெறப்படுகிறது.

தலைவிக்குத் தலைவனின் பரத்தைமை காரணமாக மட்டும் ஊடல் நிகழவில்லை. பொருள்வயிற் பிரிந்த நிலையிலும் தலைவிக்கு ஊடல் உண்டாகும் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

ஊடல் பெரும்பான்மையாக மருதத்திணையில் குறிக்கப்படினும், பிற நிலங்களிலும் ஊடல் நிகழும் என்பது பெறப்படுகிறது. நால்வகை

நிலத்தினும் புணர்தலும், பிரிதலும், இருத்தலும், ஊடலும், இரங்கலும் நிகழ்ந்து வருகின்றன. மக்களின் உணர்ச்சிகளின் அடிப்படையில் இவை நிகழ்வதாகும். தொல்காப்பியர் காலத்தில் மட்டுமல்லாது இன்றும் நிகழ்ந்து வருவதினால் தொல்காப்பியர் பொதுப்பட உரைத்துள்ளார் என்பது உணரப்பெறுகிறது.

பரத்தையர் ஆடல், பாடல் முதலியவற்றில் வல்லமை உடையவராகக் காணப்படுகின்றனர். அவர்கள் அழகையும் இளமையையும் காட்டி, இன்பத்தையும் பொருளையும் பறித்துக் கொள்பவர்களாகக் காணப்படவில்லை.

ஒருவனின் பல மனைவியர் இடையே நிகழ்ந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் எனப்பட்டது. பலதார மணத்திற்கு எதிராக எழுப்பப்பட்ட முதல் குரல் ஊடலில் தொடங்குகிறது என்பது பெறப்படுகிறது.

சங்க இலக்கியப் பரத்தமை பற்றிய செய்திகளில் பொருட் பெண்டிராகவோ, ஒருவர்மாட்டும் தங்காதவராகவோ பரத்தையர் அறியப்படவில்லை. தலைவிக்குத் தங்கையாகவும், இணையாகவும் பரத்தைப் பேசப்படுகிறாள் என்பதும் அறியப்படுகிறது.

தலைவனின் பல மனைவியரிடையே தோன்றிய பூசல் ஊடலாகக் கொள்ளப்படுகிறது. தலைவன் பலதார மணமுடையவனாகக் காணப்படுகிறான்.

ஊடல் பொருண்மை உள்ள பாடல்களில் பெரும்பாலானவை தலைவன் தலைவி இடையே நிகழினும் அதற்குக் காரணமாக அமைவது வேறொரு பெண் என்பது பெறப்படுகிறது.

தலைவனையும் தலைவியையும் அவர்தம் புதல்வனையும் மதித்து ஒழுகும் தன்மையைக் கொண்டவளாகப் பரத்தை விளங்குகிறாள் என்பது அறியப்படுகிறது.

சங்க இலக்கியப் பாக்கள் சுமார் 700 ஆண்டு காலப் பரப்புடையதாகும். பரத்தையர் தலைமகளின் வேறானவர் என்பதினால் காமக்கிழத்தியருள் ஒருவராகக் கொள்ளலாம். சங்கப் பரத்தையர்கள் தலைவனோடு திருமண வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்பது சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

பரத்தை தலைவனிடம் மட்டும் காதல் கொண்டவள், பிற ஆடவரோடு தொடர்பு கொண்டவளும் அல்ல. அதனால், சங்கப் பரத்தையர் ஊடலும் மருத ஊடலாகும் என்பது அறியப்பெறுகிறது.

ஊடல் இல்லத்துள்ளேயே நடைபெறுதல் வேண்டும். பிறர் அறிய பொது இடங்களில் ஊடல் கொள்வது மரபாகாது. ஊரறிய ஊடல் கொண்ட தலைவியின் செய்கையினைப் பரிபாடல் ஒன்று சுட்டுகிறது. பரத்தை காரணமாகத் தலைவன் மேல் கோபம் கொள்ளும் தலைவி, தான் அணிந்திருந்த மாலையைப் பிய்த்தெறிந்து, கண்கள் சிவக்க சினம் கொள்கிறாள். அவளுடைய ஊடலைத் தணிப்பதற்காகத் தலைவன் அவள் அடியில் வீழ்ந்து வணங்கினான். அவளோ அவன் தலைமேல்

உதைத்துப் பின்னும் வெகுளி அடங்காதவளாய்க் காணப்படுவதை அறியமுடிகிறது. கலித்தொகை, பரிபாடல் சங்க செய்யுட்களின் பிற்சேர்க்கையாக இருப்பதை அறியமுடிகிறது.

கணிகை அணிந்த தன் அணியைக் கண்ட தலைவி அவளைப் பழிக்க, இருவரும் ஏசிக் கொள்கிறார்கள். தலைவி விலைக்கணிகையை இழிவாகப் பேசுகிறாள். பிற சங்கப் பாடல்களில் இத்தகைய போக்கினைக் காணமுடியவில்லை. பரிபாடல்களில் மட்டும் கீழ்நிலை மகளாகப் பரத்தைப் பேசப்படுகிறாள் என்பது பெறப்படுகிறது.

ஊடல் தணிக்கும் வாயிலாக விருந்து அமைகிறது. பொருள் கொண்டு ஆற்றலாகும் அறங்களுள் விருந்தோம்பல் சிறந்த அறமாகும். தலைவனோடு ஊடல் கொண்ட தலைவி, விருந்துவர சமையலறைக்குள் சென்று வேலையைத் தொடங்குகிறாள். நெற்றி முழுவதும் வியர்வை அரும்ப, தன் முந்தானையில் துடைத்துக் கொள்கிறாள். தலைவன் அவளுடைய அழகை எண்ணி மயங்கி, இப்படி ஒரு விருந்து நாள்தோறும் வந்தால் நன்றாயிருக்கும்; ஊடல் என்பதே அங்குத் தோன்றாது என்று கூறுகிறான். இதிலிருந்து விருந்தெதிர் ஊடாமை சங்ககாலத்தில் இருந்தமைப் புலனாகிறது. தமிழர்கள் செல் விருந்தோம்பி வரு விருந்து காத்திருப்பர் என்பதையும் அறியமுடிகிறது.

சேரமன்னர்களைப் பாடும் பதிற்றுப்பத்தில் ஊடல் செய்திகள் காணப்படுகின்றன. சேரமன்னன் காதல் மகளிரிடம் புலவியால் சினமுற்ற காலத்தில் அஞ்சியிருந்ததை அறியமுடிகிறது.

புறநானூற்றில் பேகன் கண்ணகியைத் துறந்து நல்லூர் பரத்தையிடம் சென்றதைக் கடிந்து கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் பாடியுள்ளனர். பேகன கண்ணகியைப் பிரிந்து செல்லவில்லை; மாறாக, துறந்து சென்றான். பரத்தமை இல்லற எல்லையைக் கடந்ததால் இடித்துரைத்தனர் புலவோர். அளவுக்குட்பட்ட பரத்தைமை புறப்பொருளாகது; அகப்பொருளாகும். இருப்பினும் பரத்தைமை காரணமாகப் பிரிவு ஏற்பட்டதால் இவை ஊடல் செய்திகளில் கொணரப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. சரளா இராசகோபாலன், குறுந்தொகை ஓவியங்கள், பக்.91-92.
2. குறுந்.121.
3. அகம்.126.
4. நற்: 20, 260, 340.

   குறுந்: 169.

   ஐங்: 12, 48, 49, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70, 71, 80, 82, 83, 85, 292, 369, 370.

   கலி: 80, 82, 83, 84, 85, 93, 95, 96, 97, 98.

   அகநா: 6, 16, 36, 196, 266.
5. மு.அருணகிரி, தமிழ் இலக்கியத்தில் அங்கதம், ப.39.
6. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை நூலாராய்ச்சி, ப.73.
7. கலி: 93: 2-7, ஐங்: 67.
8. கலி: 98.
9. கலி: 97: 11.
10. கலி: 96: 6.
11. கலி: 95: -6.
12. நற்: 20: 9-11.
13. ஐங்: 12: 1-2
14. அகநா: 16: -5, 11-19.
15. நற்: 260: 5,8-10.
16. அகநா: 196: -13.
17. ஐங்: 64: 1.
18. ஐங்: 80: 3-4.

19. ஐங்: 64: 3-4.

20. ஐங்: 71: 4-5.

21. ஐங்: 69.

22. ஐங்: 70.

23. ஐங்: 83: 3-4.

24. ஐங்: 369.

25. ஐங்: 61: 1-2.

26. அகநா: 266: -2.

27. அகநா: 266: -15-21.

28. நற்: 340: -3. அகநா: 36.

29. கலி: 83: 26-27.

30. கலி: 82: -21.

31. கலி: 84: -21.

32. கலி: 84: 36-41.

33. கலி: 80: -19.

34. கலி: 80: 16-17, 20-21.

35. கலி: 80: 24-26.

36. குறுந். 349.

37. குறுந். 384.

38. குறுந். 258.

39. குறுந். 9.

40. குறுந். 10.

41. குறுந். 45.

42. அகம்.47.

43. நற்.40.

44. நற்.50.

45. நற்.180, 290.

46. நற்.310.

47. நற்.60.

48. நற்.210.

49. நற்.80.

50. நற்.120.

51. நற்.250, 370.

52. ஐங்: 473, 474, 475, 476.

53. ஐங்: 475.

54. அ) தலைவி தோழிக்கு வாயில் மறுத்தல்

நற்: 174, 217, 280, 350.

குறுந்: 93, 202, 203, 231, 293.

ஐங்: 14, 15, 17, 20, 22, 23, 31, 32, 33, 34, 35, 150, 151, 152, 154, 155, 164, 165, 167, 169, 170, 184

அகநா: 56,66.

ஆ) தலைவி தலைவனுக்கு வாயில் மறுத்தல்

ஐங்: 42, 43, 47, 157, 160.

கலி: 73, 79.

இ) தலைவி வாயில்களுக்கு வாயில் மறுத்தல்.

நற்: 74.

குறுந்: 50.

ஐங்: 13, 18, 19, 36, 41, 95, 131, 132, 133, 134, 135, 136, 137, 138, 139, 140, 265.

அகநா: 146,206.

55. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.26.

56. ஐங்: 155, 159.

57. ஐங்: 160.

58. ஐங்: 42.

59. ஐங்: 23.

60. ஐங்: 164, 169.

61. ஐங்: 167, நற்: 217.

62. ஐங்: 17: 1-2, ஐங்: 154.

63. ஐங்: 169.

64. ஐங்: 170: 2.

65. ஐங்: 20: 5.

66. கலி 73: 11-12.

67. கலி 79: 7-9.

68. கலி 73: 8-9.

69. கலி 79: 12-14.

70. கலி 73: 16-17.

71. நற்: 350: 4-6, ஐங்: 22.

72. ஐங்: 15: 2-3.

73. குறுந்: 231: 1-2.

74. ஐங்: 15: -4.

75. குறுந்: 203: 4-5.

76. நற்: 174: 3-4, குறுந்: 293:

77. நற்: 174: 10-11.

78. குறுந்: 93: 1-2.

79. குறுந்: 93: 2-4.

80. அகநா: 66: 7-26.

81. ஐங்: 165: 3-4, 31, 43.

82. அ) தலைவி தோழிக்கு வாயில் நேர்தல்

குறுந்: 106, 271, 285, 349

கலி: 75, 57.

அகநா: 26, 236,

ஆ) தலைவி தலைவனுக்கு வாயில் நேர்தல்

குறுந்: 49, 91 ஐங்.118,

கலி: 66, 67, 77, 81, 86, 88, 89.

இ) தலைவி வாயில்களுக்கு வாயில் நேர்தல்

குறுந்: 33, 75.

ஐங்: 11.

83. கலி: 77: 10-11, 14-15, 18-19.

84. கலி: 77: 12-13, 16-17, 21-24, குறுந் 91.

85. கலி: 67: 6-7, 10-11, 8-9,

86. அகநா: 26: 4-5.

87. கலி: 55: 7-14.

88. கலி: 66: 11-12, 13-14, 17-18.

89. அகநா: 26: 18-23.

90. கலி: 87: -15.

91. கலி: 86: 13-14, 17-18, 21-25.

92. கலி: 75: 24-25.

93. கலி: 75: 14-17.

94. குறுந்: 349: 3-7.

95. குறுந்: 271: 3-5.

96. கலி: 88: 6-7, 18-21.

97. கலி: 89: 12-15.

98. ஐங்.82.

99. ஐங்.82, 43, 49, அகம்.56.

100. அகநா: 56 10-16.

101 மு.இராகவையங்கார், தொல் பொருளதிகார ஆராய்ச்சி, ப.90.

102. நற்: 74: 1-5.

103. ஐங்: 138.

104. அகநா: 146: 5-9.

105. ஐங்: 138.

106. ஐங்: 135.

107. ஐங்: 134: 3, 35.

108. நற்: 74: 7-8. ஐங்: 34.

109. ஐங்: 133: -3.

110. ஐங்: 136: -2.

111. ஐங்: 132.

112. ஐங்: 136: 3.

113. ஐங்: 136.

114. ஐங்: 19.

115. ஐங்: 32.

116. குறுந்: 50: 2-3, ஐங்: 33.

117. ஐங்: 265, 14.

118. ஐங்: 41: -2

119. ஐங்: 41: 3-4, 36: -5.

120. ஐங்: 19: 4-5.

121. குறுந்: 50: -5.

122. பொ.வே. சோமசுந்தரனார், ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.47.

123. அ.விசுவநாதன். சங்க இலக்கியச் சிந்தனைகள், ப.27.

124. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் பகுதி-2, ப.139.

125. அகம்.16: 11-12.

126. அகம்.16: 18.

127. நற்.313.

128. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், (முனைவர்பட்ட ஆய்வேடு) ப.86.

129. சிலம்பு நா.செல்வராசு, வள்ளுவப் பெண்ணியம், ப.98.

130. நற்.315.

131. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.290.

132. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், (முனைவர்பட்ட ஆய்வேடு). ப.93.

133. நற்: 314, குறுந்: 314, 190, ஐங்: 331, 332, 339.

134. நற்: 314: 11-12, குறுந்: 154.

135. ஐங்: 332: 3-4.

136. குறுந்: 190: 6-7.

137. ஐங்: 327: 3-4 (உள்ளுறை)

138. ஐங்: 332: 3.

139. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், (முனைவர்பட்ட ஆய்வேடு) ப.93.

140. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப. 356.

141. அகம்.336.

142. அகம்.276.

143. நற்.216.

144. அகம்.376.

145. குறுந். 238.

146. நற்.90.

147. அகம்.146.

148. நற்.100.

149. ஐங்.79.

150. வெ.தெ.மாணிக்கம், ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும், பக்.377-378.

151. அகம்.336.

152. நற்.216.

153. அகம்.376.

154. குறுந். 238.

155. நற். 90.

156. அகம். 146.

157. நற். 150.

158. அ.விசுவநாதன், சங்க இலக்கியச் சிந்தனைகள், ப.78.

159. பரி.7.

160. பரி.7: 75-76.

161. தொல். பொருள். நூ:1097.

162. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் பகுதி-2, ப.130.

163. நற்.150.

164. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப.167.

165. மதுரைக்.583.

166. பட்டினப் 246.

167. அ.விசுவநாதன், சங்க இலக்கியச் சிந்தனைகள், பக்.82-83.

168. நற்.150.

169. நற்.120.

170. கலி.86: 34.

171. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.286-287.

## இயல் - மூன்று

## பிற்கால இலக்கியங்களில் ஊடல்

தமிழ்ச் சங்க இலக்கியங்கள் அகம், புறம் என்ற திணைகளில் வைத்துப் பாடப் பெற்ற மரபுகளின் அடிப்படையில் அமைந்தன. காலம், இடம் என்ற பிரபஞ்சத்தில் மனித அலகுகள் முதற் பொருள் என்றும், இயற்கை, சமூகம், தொழில், கடவுள் போன்ற உடனடியான புற உலகச் சூழல்கள் கருப்பொருள் என்றும், இவற்றுக்கு மையமாக அமைந்த ஆண்-பெண் உறவு முறைகளைப் பாலியல் அடிப்படையில் விவரிப்பதை உரிப்பொருள் என்றும் பகுத்தனர்.

வாழ்க்கை முறை மாறி இயற்கையை ஒரு பார்வைப் பொருளாக, பயன்படு பொருளாகக் காணத் தொடங்கிய காலத்தில் இலக்கியங்களில் மாறுபாடுகள் தோன்றலாயின. பின் தோன்றிய இலக்கியங்கள் தத்தம் காலத்திற்கேற்ப மாறுபாடுகள் தோன்றிய போதும் சங்க இலக்கியத்தின் உணர்வுத் தளத்திலிருந்து வெளிப்பட முடியாமல் அதன் தாக்கத்தோடு காணப்படுகின்றன. மனித யதார்த்த உணர்வுகள் மாறாமல், உணர்வுகளை வெளிப்படுத்தும் முறையில் மட்டும் மாறுபாடுகளைக் கொண்டுள்ளன. அத்தகைய உணர்வின் அடிப்படையில் ஏற்படும் ஊடலானது பிற்கால இலக்கியங்களில் எங்ஙனம் பயின்று வந்துள்ளது என்பதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

*சிலப்பதிகாரத்தில் ஊடல்*

கொங்கச் செல்வி, குடமலையாட்டி, தென்தமிழ்ப்பாவையைத் தமிழுக்குத் தந்த இளங்கோவடிகளின் உன்னத காப்பியம் சிலப்பதிகாரம். பயத்திற்காகவும் பின் பணத்திற்காகவும் வழிபடுகின்ற கடவுளர்களை மட்டுமே பாடிக்கொண்டிருந்த காலத்தில், மனிதரைப்பற்றி, மனிதரின் வளர்ச்சி பற்றி, மனிதரின் முழுநிலைபற்றி, மனிதனின் வாழ்க்கையின் குறிக்கோள் பற்றிச் சிந்தித்த முதல் காப்பியம் சிலப்பதிகாரம்.

தமிழ் மரபையும், பண்பாட்டையும், வாழ்க்கை முறைகளையும், தமிழிசை, தமிழ் கூத்துப் போன்றவற்றையும் காப்பாற்றி என்றைக்கும் இம்மண்ணில் நிலைபெற்றிருக்குமாறு செய்து கொண்டிருப்பது சிலப்பதிகாரம். 'அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்று ஆவதூஉம், உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம்' என்று மூன்று கூறப் பெற்றாலும், அவை நடப்பதாகக் காப்பியத்தில் காட்டப் பெற்றாலும், அவை மட்டுமே அடிகளின் நோக்கமன்று. சிலம்பு முழுவதும் உள்ளுறைப் பொருள் மிகுந்துள்ளது.

கணிகையாகிய மாதவியைக் கோவலனுக்கு மணம் செய்து வைத்து. 'மணமனைபுக்கு மாதவி தன்னொடு' (3:172) என்று கூறுவார். மாதவி, கோவலன் ஒருவனுடன் வாழ்ந்தாள். அலர் உரைக்காமல் ஊரே ஆவலுடன் எதிர்பார்த்த அரும்பு வெளியீடாப் மணிமேகலையைப் பெற்றெடுத்தாள். கணிகையர் குலத்தை உயர்த்தி, பெண்டிர் இருவரை பெளத்தர்களாக மாற்றி கணிகையர் வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார். "மணம்,

புதுமணம், பிழைமணம், நன்மணம் என நான்கு வகையாகக் கூறுகிறார். பொதுநிலைத் திருமணத்தை மணம் என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். கண்ணகி கோவலன் திருமணத்தைக் குறிப்பிடலாம். புதுமணம் என்ற தொடர் கணிகையரோடு இணைவதை மட்டுமே குறிக்கிறது. பொற்றொடி மடந்தையர் புதுமணம் புணர்ந்து (14:131) என்பதைச் சான்றாக்கலாம். இது போன்று கோவலன் மாதவி இணைவைக் கூறவில்லை. உடல்மணம் பிழை மணமாகலாம். உயிர்இணைவு பிழை மணமாவதில்லை. நன்மணமாகின்றது. இதனைப் பெறுக நன்மணம் விடு பிழைமணம் எனவே (24:18:4) என்ற தொடரால் குறிப்பிடுகிறார். கோவலன், கண்ணகியரின் உடல் திருமணம் மங்கல வாழ்த்துப் பாடலில் நடைபெறுகிறது. குன்றக் குரவையில் இருவரும் தெய்வநிலையில் உயிர் இணைதலைக் குறிப்பிடுகிறார்."(1) எனபர். மருதநில மக்களின் வாழ்க்கையை இந்திர விழவு ஊர் எடுத்த காதையில் விளக்குகிறார்.

***விருந்தெதிர் ஊடாமை***

மன்மதனின் பெரும்படையாகிய இளம் மகளிர், இளைஞருடன் போர் செய்து, எதிர் நின்று தடுத்து, அவர் தம் மேல் எழுதியிருந்த தொய்யில் போன்ற கோலங்கள், ஆடவர் மெய் முழுவதும் உற்ற நிலையில் விருந்தினரையும் அழைத்துக் கொண்டு, தம் ஊடல் நிவர்த்திக்காக, வீட்டில் புகுந்த பெரிய தோளையுடைய கணவரொடு, தாம் உடன் உறைதலை மறுத்து, ஒழுக்கமோடு, வடமீன் போன்ற கற்பினையுடைய மகளிர் அழகும், ஒளியும் பொருந்திய முகத்தில் நீலமணி போலும் குவளைக் கண்கள் கடை சிவந்து, தம் ஊடலைத் தெரிவித்தனர். அவ்வூடலைப் போக்க

விருந்தைத் தவிர, வேறு மருந்து இந்த நிலவுலகத்தில் கிடைக்குமா? என நினைத்துச் செயலற்று நடுங்குகின்றதை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். மனைவியோடு ஏற்பட்ட ஊடலைக் களைவதற்கு ஆடவர்கள் விருந்தினரை ஊடல் போக்கும் மருந்து எனக் கொண்டமை புலனாகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் விருந்தெதிர் ஊடாமை சிலப்பதிகாரக் காலத்திலும் இருந்திருக்கின்றது என்பதை உணர முடிகின்றது. இதனை,

**'மாதர் வாள் முகத்து, மணித்தோட்டுக் குவளை**
**போது புறம் கொடுத்துப் போகிய செங்கடை**
**விருந்தின் தீர்ந்திலது ஆயின், யாவதும்**
**மருந்தும் தரும்கொல், இம்மாநில வரைப்பு எனக்**
**கையற்று நடுங்கும் நல்வினை நடுநாள்'**

(சிலம்பு இந்திரவிழா ஊர் எடுத்த காதை 230-234)

என்ற சிலப்பதிகார அடிகளின் மூலம் அறியலாம்.

பிறிதொருவிடத்தில், காதலரைப் பிரிந்து பெண்கள் தனிமையில் வாழும் நிலையினைக் குறிப்பிடும் இடத்தில் வசதியுடைய தம் கணவருடன் ஊடற்காலத்து, குமிழம்பூப் போன்ற மூக்கைச் சிந்தி, சிவந்த கடைக்கண்ணால் அவர்களை விரட்டி, அவர்களின் கலங்காத உள்ளங்களையும் கலங்கச் செய்த, நீண்ட கண்கள் தற்போது கண்ணீர் முத்துக்களைப் புலம்பி உதிர்க்கும் நிலையில் இருக்கின்றன என்றுரைக்கின்றார். இதனை,

'.............. ............ .............. துயில் பெறாது

உடைப் பெருங்கொழுநரோடு ஊடல் காலத்து

இடைக்குமிழ் எறிந்து கடைக் குழை ஒட்டிக்

கலங்கா உள்ளம் கலங்கக் கடை சிவந்து

விலங்கி நிமிர் நெடும் கண் புலம்பு முத்து உறைப்ப'

(சிலம்பு: அந்திமாலைச் சிறப்புச் செய் காதை: 67-71)

என்று இளங்கோவடிகளின் பெண்கள் ஊடற் காலத்தில் கணவனிடம் சினம் கொண்டு கலங்காத அவர்களின் உள்ளங்களைக் கலங்கடித்ததை விளக்குகிறார்.

**கோவலனின் ஊடல்**

'ஆடலும் கோலமும் அணியும் கடைக்கொள

ஊடல் கோலமோடு இருந்தோன் உவப்பப்

(சிலம்பு: கடல் ஆடு காதை: 74-75)

மாதவியின் ஆடலும் அதற்குரிய கோலங்களும் தன்னைக் கவர்ந்ததைப் போல், மாதவியின் ஆடலைப் பார்த்தவர்கள் அனைவரையும் கவர்ந்திருக்கும் என்ற எண்ணம் கோவலன் உள்ளத்தில் எழ, அதனால் ஊடல் கோலத்தில் இருந்தான். அவ்ஊடலை மாற்ற விரும்பிய மாதவி, அவன் மகிழும் நிலைக்குத் தகத் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள்.

'பத்துத் துவரினும் ஐந்து விரையினும்

முப்பத் திருவகை ஓமாலிகையினும்

.............. ................ ............... ..............

கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்து

பாடு அமை சேக்கைப் பள்ளியுள் இருந்தோள்'

(சிலம்பு: கடல் ஆடு காதை: 76-110)

என்று மாதவி, பலவித மணப்பொருட்களாலும், நேர்த்தியான அணிகலன்களாலும் தன்னை அழகுற ஒப்பனை செய்துகொள்கிறாள். அணிகலன்களை எல்லாம் அணிந்து கூடலையும் ஊடலையும் கோவலனுக்குக் கொடுத்து அவனின் ஊடலைத் தணித்ததனைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது. சினம் கொண்டு இருக்கும் தன் கணவனை அல்லது காதலனைப் பெண்கள் தங்களை அழகுபடுத்தி, இனிய மொழிகளால் பேசி இன்பப் புணர்விற்கு அழைத்தமைப் புலனாகிறது.

**கானல் வரியில் ஊடல்**

கானல் வரியா? இல்லை கண்ணீர் வரியா? என்றிலங்கும் கானல்வரிப் பாடல்களில், கோவலன் காவிரியை நோக்கிப் பாடிய ஆற்றுவரிப் பாடல்களில், திங்கள் மாலை வெண்குடையாகிய சோழன், கங்கையைப் புணர்ந்தாலும் காவிரி அது குறித்துப் புலத்தல் கூடாது எனவும், அவ்வாறு புலவாது இருத்தலே பெண்களின் பெருங்கற்பாகும் என்று (சிலம்பு 7:2,3) கூறுகின்றன. கணவன் மனைவியன்றி மற்றொருத்தியை எண்ணினாலும் மனைவி அது பற்றிப் புலத்தல் கொள்ளக் கூடாது என்பது புலனாகிறது.

மருதநிலச் சமுதாயத்தில் செல்வ வளமை காரணமாகப் பல மனைவியரை மணக்கும் சூழல் ஏற்பட்டுள்ளது. அதனால் மனைவியருள் போட்டியும் பொறாமையும் தோன்றுதல் தவிர்க்க இயலாதது ஆயிற்று. “உண்மையில் ஊடல்... என்ற உரிப்பொருள் உணர்த்துவது எதனை?

பெண்ணியல் அணுகுமுறையின்படி ஊடல் என்பது பண்டைச் சமுதாயத்தில் பெண்ணிடமிருந்து வெளிப்பட்ட, பலதார மணத்திற்கு எதிரான முதல் எதிர்ப்புக் குரலாகும். என்னையன்றி வேறொருத்தியிடம் நீ தொடர்பு கொள்ளக்கூடாது என்ற பெண்களின் மென்மையான எதிர்ப்புக் குரலையே ஊடல் என்ற உரிப்பொருள் உணர்த்துகின்றது. ஆயின், ஆளும் வர்க்கத்திற்கு எதிரான எந்த ஒன்றும் எடுபடாமல் போவது போல ஆண்வழித் தலைமைச் சமுதாயத்தில் பெண்களின் எதிர்ப்புக்குரல் எடுபடாமல் போயிருக்க வேண்டும். அவ்வெதிர்ப்புக் குரல், இலக்கிய இன்பமுலாம் பூசப்பெற்றுச் சக்களத்தியர் சண்டையாகத் திரிபுற்றது. 'கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய் மங்கைமாதர் பெருங்கற்பென்று அறிந்தேன் வாழி காவேரி' என்பன போன்ற பாடல்கள் (சிலம்பு 7-2) ஆடவர், பெண்டிர் பிறரை நாடினாலும் மனைவி புலவாது இருத்தலே கற்பாகும் என்று கூறித் தொடக்கத்திலேயே பெண்களின் எதிர்ப்புக் குரலை அடக்கிவிட்டன"(2) என்பர். ஆடவர் பல பெண்டிரை மணந்தாலும் பெண்கள் அடங்கியிருத்தல் கற்பிற்கு இலக்கணம் என்று ஆணாதிக்கச் சமுதாயம் தன் தலைகாட்டத் தொடங்கியதை மேற்குறித்த சான்றுகளின் வழி அறியலாகிறது.

***கண்ணகியின் ஊடல்***

இல்லற வாழ்க்கை மேற்கொண்ட தலைவிக்கு முக்கியமான கடமையாக இல்லற நெறி வகுப்பர் தொல்காப்பியர். ஆணிற்குப் புற உலகத் தொடர்பு எளிது. ஒருவனுக்கு அகம் நன்றாக இருந்தால்தான் புறமும் நன்றாக இருக்கும் என்பது உலகியல் இயற்கை. அதனால்தான்

இல்லறத்தில் தலைவி முதலிடம் வகிக்கிறாள். இல்லறத்தை நெறிப்படுத்தும் ஆற்றலும் கற்புநெறியும் பெண்ணிடம் இருப்பதால் கணவன் செயல்களில் அனைத்திற்கும் கைகொடுத்துத் தலைவனின் பணி நிற்றலே தலைவியின் முதற் பெருங்கடமையாகும்.

பரத்தையர்பால் சென்று வரும் தலைவனிடம் ஊடல் கொள்ளும் தலைவியைத் தொல்காப்பியர்,

**"கற்பு வழிப்பட்டவள் பரத்தைய ஏத்தினும்**

**உள்ளத்தூடலுண்டென மொழிப"[3]**

என்றவாறு தொல்காப்பியர் கற்பு நெறியைப் புலப்படுத்துவர். பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில்லை. இவற்றிற்குக் கற்புத் திண்மையே காரணமாகும். எவ்வளவுதான் கணவன் தவறிழைத்தப் போதும் அவனை மன்னிக்கும் ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும் இல்லத்தலைவி. இத்தகைய தலைவி பற்றிக் கூறும் நாலடியாரும்,

**"இடனறிந்து ஊடி இனிதின் உணரு**

**மடமொழி மாதராள் பெண்"[4]**

என நாலடியார் போற்றுகிறது. இவ்வாறு கற்புடைய மகளிர் தன்னுடைய ஊடலை வெளிக்காட்டுவதிலும் கணவனின் மனநிலையை அறிந்து செயல்பட்டார்கள் என்பதனை,

"சலம்புணர் கொள்கைச் சலதியொடு ஆடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைத்த
இலம்பாடு நாணுத்தரும் எனக்கு . . .'

(சிலம்பு.காதை வரி-9: 12-1)

என வருந்திய கோவலனிடம் கண்ணகி,

"நலங்கேழ் முறுவல் நகைமுகம்காட்டி
சிலம்புள கொண்ம்'

(சிலம்பு.காதை வரி-9: 12-1)

எனச் சொன்னது கோவலனைத் தவறான வழியில் மேலும் செல்லத்தூண்டியது போன்றல்லவா என்று கண்ணகியிடம் குறை காண்பர். கண்ணகி பூம்புகாரில் தன் ஊடலை வெளிக்காட்டவில்லை. இதனால் அவள் உள்ளத்தளவிலும் ஊடல் கொள்ளவில்லை என்று பொருளில்லை. பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டுள்ளனர். இவையே, தொல்காப்பியர் காலத்திலிருந்து உயர்ந்த குறிக்கோள் கொண்ட இல்லத்தரசிகளைக் காண முடிகின்றது.

**குன்றக்குரவை**

சிலப்பதிகார குன்றக்குரவைப் பகுதியில், தலைவி தோழியை நோக்கி, 'அவர் மலைமீதிருந்து இழிந்துவரும் இப்புதுப்புனல் மீது யான் வெறுப்புக் கொண்டு ஊடுவதற்கான தீய தன்மை எதனையும் காணேன். ஆயினும் பொன்னைப் போன்ற பூந்தாதுகளை அளைந்து வரும் இப்புதுப்புனலில் மற்றைப் பெண்கள் நீராடின் என் நெஞ்சம் நோகின்றதே அது ஏனடி தோழி'(5) என்று கூறுகிறாள். தலைவனுக்கு உரிமை உடைய மலையைத் தீண்டி வந்த புதுப்புனலில் கூட மற்றைப் பெண்கள் நீராடக் கூடாது எனக் கருதுகிறாள் தலைவி. தலைவனை வேறொரு பெண்ணுடன்

பங்கு போட்டுக் கொள்ள எந்தப் பெண்ணும் சம்மதிக்கமாட்டாள் என்பதைக் காட்டுகிறது.

**பாண்டிமாதேவியின் ஊடல்**

பாண்டியன் நெடுஞ்செழியன் நெஞ்சம் கூடல் மகளிர் ஆடல் தோற்றத்தில் ஆழ்ந்துவிடுகிறது. அவனோடு அமர்ந்திருந்த கோப்பெருந்தேவியையும் அவன் மறந்து விடுகிறான். ஆடல் மகளிர் அழகுத் தோற்றத்தில் தன் கணவன் மனம் ஆழ்ந்தது கண்டு பொறாதவளாய்க் கோப்பெருந்தேவி ஊடல் கொண்டு தலைநோய் (தலைவலி) வருத்தத்தைக் காரணமாய்க் காட்டி, ஆட்டம் முடிவதற்குள் இடையிலேயே எழுந்து போய் விடுகிறாள். அவ்வாறு ஊடிச் சென்ற கோப்பெருந்தேவியைச் சந்தித்து ஆறுதல் கூறி, கூட விழைந்து அந்தப்புரம் நோக்கி விரைந்து செல்லும் பாண்டியனுக்கு இடையே பொற்கொல்லன் குறுக்கிட்டு சிலம்பைக் கோவலன் கொண்டதாகக் குறிப்பிடுகிறான். உடனே 'கொன்றச் சிலம்பு கொணர்க' என ஏவி, தேவி நோக்கிப் பாண்டியன் போய்விடுகிறான்.

> **'கூடல் மகளிர் ஆடல் தோற்றமும்**
> **பாடல் பகுதியும் பண்ணின் பயங்களும்**
> **காவலன் உள்ளம் கவர்ந்தன என்று தன்**
> **ஊடல் உள்ளம் உள் கரந்து ஒளித்துத்**
> **தலைநோய் வருத்தம் தன்மேல் இட்டுக்'**

(சிலம்பு: கொலைக்களக் காதை: 131-135)

என்று கோப்பெருந்தேவி ஊடல் கொண்டு சென்றதை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். நீதிநெறி தவறாமல் ஆட்சி செய்து கொண்டிருந்தவனின் மனம் மனைவியின் ஊடலால் தன்னிலை தடுமாறி கொலைப் பழிக்கு ஆளாகிவிட்டதை அறியமுடிகிறது. கோவலனின் ஊடல் மாதவியைப் பிரித்தது; பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரையே பறித்தது எனலாம்.

**மணிமேகலையில் ஊடல்**

ஒழுக்கநெறியும், அரசநெறியும், பசிபோக்கும் அறமாண்பும், சிறைச்சாலைகளை அறச்சாலைகளாக மாற்றிய சமுதாயப் புரட்சிப்பூவாக விளங்கிய மணிமேலையில் சீத்தலைச்சாத்தனார் ஊடல் காட்சிகளை அரங்கேற்றியுள்ளார்.

சுதமதியிடம் மணிமேகலா தெய்வம் உருமாற்றி மணிமேகலையை மணிபல்லவத் தீவிற்கு அழைத்துச் சென்றதைக் கூறியுடன், சுதமதி புகார் தெருக்களில் நள்ளிரவில் நடந்து வரும் போது காணுகின்ற காட்சியில், ஓர் இல்லில், பண்பற்ற காதலனது பரத்தமைத் தன்மையைப் பொறுக்கமாட்டாமல், மையுண்ணும் கண்கள் சிவப்படைய அசைந்தாடும் பூங்கொடி போன்று தளர்வுற்று, மீண்டு வந்த காதலன் தெளிவிக்கவும் தெளிவு கொள்ளாது, ஊடலுள்ளத்துடனேயே துயில்கின்ற மனைவி, மணம் பொருந்திய படுக்கையிடத்தே, தான் விரும்பும் தன் துணைவனைத் தானாகவே பின்னர் தழுவிக் கொள்ளலாயினாள் என்பதை மணிமேகலை,

**'பண்பில் காதலன் பரத்தமை நோனாது**

**உண்கண் சிவந்தாங்கு, ஒல்குகொடி போன்று**

**தெருட்டவும் தெருளாது ஊடலொடு துயில்வோர்,"[6]**

என்று கூறுகிறது.

உணர்த்த உணரா ஊடலைக் கொண்டிருந்த மனைவி, கணவன் மேல் கொண்டிருந்த அன்பின் காரணமாக அவன் பரத்தைமையைப் பெருந்தன்மையுடன் விலக்கி ஏற்றுக் கொள்கிறாள்.

***சீவகசிந்தாமணி***

எட்டுத் திருமணங்கள் பற்றிக் கூறும் மணநூல் இது. இதில் பல பெண்களின் ஊடல் இடம்பெற்றுள்ளது.

**'தோடணி மகளிர் போன்ற துணர்மலர்க் கொம்பர் கொம்பின்**

**ஆடவர் போல வண்டு மடைந்தன அளியிற் கொல்கி**

**ஊடிய மகளிர் போல வொசிந்தன வூடறீர்க்கும்**

**சேடநிற் சென்று புல்லிச் சிறுபுறந் தழீஇய தும்பி"[7]**

குணமாலையார் இலம்பகத்தில், ஆடவரோடு ஊடி ஒதுங்குகின்ற பெண்களைப் போல மலர்க்கொம்புகளும், வந்து நிறைந்த வண்டுகளின் சுமை தாங்காது கீழே தாழ்ந்தன. ஊடல் கொண்டு பிணங்கிய தலைவியைத் தலைவனோடு ஒன்று சேர்க்க, அவள் ஊடல் தீர்த்து வைக்கும் பெரியோர்களைப் போலச் சில. வண்டுகள் பறந்து சென்று பாரம் தாங்காது தாழ்ந்த பூங்கொத்தைச் சரிப்படுத்திச் சமனாக்கிட இளவேனில் பருவம் இனிது வந்தது என்று கூறுகிறது.

தலைவி ஊடல் கொள்வதும், தலைவியைத் தலைவனோடு சேர்த்து வைக்க பெரியோர்கள் வாயிலாக வந்து ஊடல் தீர்ப்பதும் போன்ற செய்திகள் கிடைக்கின்றன.

**'பாவைநீ புலவியி னீடல் பாவியேற்கு**

**ஆவியொன் றிரண்டுடம் பல்ல தூற்றுநீர்க்**

**கூவல்வாய் வெண்மணல் குறுகச் செல்லுமே**

**மேவிப்பூங் கங்கையுள் விழைந்த வன்னமே'[8]**

**'புலந்தவள் கொடியென நடுங்கிப் பொன்னரிச்**

**சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னிமேல்''[9]**

**'துனிப்புறு கிளவியாற் றுணைவி யேகலும்**

**இனிப்பிறர்க் கிடமில்லை யெழுவ லீங்கெனாக்''[10]**

தத்தையின் கோபத்தைத் தணிக்கக் கருதிய சீவகன், அன்புடைய பாவையே, நீ ஊடலை வளர்க்காதே; நம்மிருவருக்கும் உடம்பு இரண்டே அல்லாமல் உயிர் ஒன்றுதான். அல்லாமலும் பூ நிறைந்து மலர்ந்த கங்கை ஆற்றை விரும்பிச் சென்ற அன்னம், வெள்ளிய மணல் நிறைந்து ஊறும் ஊற்று நீருடைய கிணற்றை நாடிச் செல்லுமோ எனக் கூறினான். தன்னையல்லாமல் வேறு ஒரு பெண்ணின் பெயரைச் சொன்னாலும், பொறுக்க மாட்டாது கோபிக்கின்ற தத்தை, ஓவியத்தில் வரைந்துள்ள திருமகளைப் போன்ற குணமாலையின் உருவை நேருக்கு நேராகப் பார்த்ததும், நெய்யை விடுவதால் மேலும் பற்றி எரிகின்ற எரி நெருப்புப் போல ஆர்வம்-விருப்பம் மிகுந்த சீவகனுக்கு அமுதம் போல் இன்பம் அளிப்பவளாகிய அவளுக்கும் ஊடல் மிகுந்தது. ஊடல் மிக இவ்வாறு பிணங்கியவள் மலர்க்கொடி போல் நடுங்கி, பொற்சிலம்பும் மேகலையும்,

மெல்லென ஒலி செய்ய, அவன் முடித்தலைச் சூடிய மாலையின் மேல் தன் தாளாகிய மலரைக் சூட்டி, குண்டலம். ஒளிவிட அசைந்து நடந்து தான் சூடிய மாலையில் இருந்து மலர்கள் சிந்திச் சிதற அவ்விடம் விட்டகன்றாள். ஊடல் மிகப் பிணங்கி, வெறுப்போடு அவ்விடம் விட்டுத் தத்தை சென்றாள்.

தன் காதலனிடம் பிற பெண்டிரின் ஓவியம் இருப்பதைக் கண்டதும் ஊடல் கொள்கிற தலைவி, தனக்குப் போட்டியாக வந்தவளை நேருக்கு நேராகக் காணும் போது அவ்வூடலானது இன்னும் அதிகமாகிறது என்பதை உணர்த்துகிறது.

**குறளில் ஊடல் குரல்**

காமத்துப்பாலின் நிறைவாக அமைக்கப்பட்டுள்ள புணர்ச்சி விதும்பல், நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை ஆகிய ஐந்து அதிகாரங்கள் ஊடல் பொருண்மையை மையமிட்டு ஆக்கப்பெற்றுள்ளன. ஊடல் பொருண்மை உடைய பாடல்களில் பெரும்பாலானவை தலைவன் தலைவி இடையே நிகழினும் அதற்குக் காரணமாக அமைவது வேறொரு பெண் அல்லது பரத்தை ஆவர்.

வினை முடித்து வரும் தலைவனோடு வள்ளுவத் தலைவி ஊடல் கொள்கிறாள். அவள் கண்களோ அவள் உள்ளத்தைக் குறிப்பாக அறிவிக்கின்றன.(1271)

> **'மணியில் திகழ்தரு நூல்போல், மடந்தை**
> **அணியில் திகழ்வதொன் றுண்டு'**(11)

**'முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை**

**நகை மொக்குள் உள்ளதொன் றுண்டு'[12]**

என்று உணர்கிறான். செறிதொடி செய்த கள்ளத்தால் அவன் உறுதுயர் தீர்க்கும் மருந்து ஒன்றுடைத்து என எதிர்பார்க்கிறான்.(1275) தம்முடன் புலந்து நிற்கும் தலைவியின் ஊடலைத் தீர்த்த பிறகே கூட விரும்புகிறான்.(1303) தன்னோடு ஊடியவரை ஊடல் தீர்க்காமல் வருத்துவது, முன்பே வாடிய கொடியை வேர் முதலோடும் அரிந்தாற் போன்றது என நினைக்கிறான் தலைவன்.(1304) துனியும் புலவியும் இல்லையென்றால் கனியும் கருக்காயும் போன்றது என்கிறான். (1306) உணவிற்கு உப்பு அதிகமாகி விடக்கூடாது என்பது போன்று புலவி நீட்டிக்கக் கூடாது என்று உணர்கிறான் தலைவன். அதனால்,

**'ஊடி யுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்**

**கூடுவோம் என்ப தவா'[13]**

என்று நினைக்கிறான். ஆயினும் தலைவன்,

**'ஊடலில் தோற்றவர் வென்றார் அது மன்னும்**

**கூடலில் காணப் படும்'[14]**

**'உணலினும் உண்ட தறலினிது காமம்**

**புணர்தலின் ஊடல் இனிது'[15]**

என்னும் உண்மைகளை அறிந்தவனாகக் காணப்படுகிறான். தலைவியின் ஊடல் முடித்து கூடிய தலைவன், ஊடுதல் காமத்திற்கு இன்பம், அதற்கின்பம் கூடி முயங்குதல்(1330) என்று சொல்லி இன்புறுகிறான்.

ஊடல் மலர்களுக்குப் புற இதழ்களைப் போலவும், உடம்பிற்கு ஆடை போலவும், கூடலுக்கு ஒரு திரையாகவும் நின்று இன்பத்தின்

ஆர்வத்தைப் பெருக்குகின்றது. "ஊடல் வந்ததால் பிரிவு வந்ததா? பிரிவு வந்ததால் ஊடல் வந்ததா? கொடியசைந்ததும் காற்று வந்ததா? காற்று வந்ததும் கொடியசைந்ததா? என்பதைப் போல் பிரித்துப் பார்க்க இயலாது"(16) என்று வ.சுப.மா குறிப்பிட்டுள்ளதையும் கருத்தில் கொள்ள வேண்டும். மீண்டும் மீண்டும் தான் வேண்டி நிற்பதைப் பொருட்படுத்தாமல் தலைவி பெரும் பிடிவாதம் கொண்டு நிற்பதால் தலைவன் மனம் வெம்புகின்றது. தலைவனிடம் பரத்தமை உண்டென்று எண்ணி அதை ஒழிப்பதற்காகவும், அவன் மேல் வைத்த அன்பின் மிகுதியால் மடமை வளர; அவனுடைய செய்கைகள் தனக்கு ஒவ்வாதனவாய்த் தோன்றுமிடங்களில் தலைவிக்கு ஊடல் வருகிறது.

"**அன்பிலை கொடியை என்றலும் உரியர்**" (தொல்.கற்பியல்.15)

என்பர் தொல்காப்பியர்.

வள்ளுவரும் இல்வாழ்க்கை முறையைத்தான் விரும்புகின்றார். பிரம்மச்சரியம் வழிப்பட்ட துறவுவாழ்க்கை தமிழர்க்கு உரியது அன்று; வள்ளுவரும் அதை விரும்பவில்லை. ஊடல் கொண்ட பெண்ணின் நிலையாக வள்ளுவப் பெருந்தகையும், தலைவன் கோட்டுப்பூச் சூடிச் சென்றான். அதைக் கண்ட தலைவியோ ஒருத்தியைக் காட்டியே சூடினீர் என்று புலக்கிறாள்.

"**கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியர்**
**காட்டி சூடினீர் என்று**" (குறள்: 1313)

என்று புலக்கிறாள். மற்றொரு இடத்தில் கணவன் மனைவியிடம் எல்லோரையும் விட நாம் அன்பு நிறைந்தவர்களாய் இருக்கிறோம்

என்பதை 'யாரினும் காதலம்' என்கிறான். அதற்குத் தலைவி 'நீ பல மகளிரைக் காதலிப்பதால் மற்றவரைவிட என ஒப்பிடுகிறாய்' என புலந்து யாரினும் யாரினும் என்று ஊடுகிறாள்.

**"யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்**

**யாரினும் யாரினும் என்று"** (குறள்: 1314)

என்று குற்றம் செய்யாத போது கணவனுக்கு மனைவி மனக்கசப்பை ஏற்படுத்துகிறாள்.

மனைவியின் மேல் கொண்ட காதலால் அவளிடம், நான் பிரிந்து சென்ற போது உன்னை அடிக்கடி நினைத்தேன் என்கிறான். அதற்கு அவள், பிரிந்தவுடன் என்னை மறந்துவிட்டீரோ? மறந்ததால் தான் மீண்டும் என்னை நினைத்தீர் என்று கணவனைச் சாடுகிறாள். அதனை,

**"உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்**

**புல்லாள் புலத்தக் கனள்"** (குறள்: 1316)

என்று மனைவி ஊடுகிறாள்.

இருமலையும், தும்மலையும் அடக்க முடியாது. இங்கு ஒரு கணவன் தும்முகிறான். யாராவது நினைத்தால்தான் ஒருவர்க்குத் தும்மல் வரும் என்று நாட்டுப்புறத்தில் நம்பிக்கையுண்டு. அதையே காரணமாகக் கொண்டு, நான் இங்கிருக்க இவர் வேறு யாரையோ நினைத்துத் தும்முகிறாரே, அப்படியென்றால் யாரோ ஒருத்தி இவருக்குக் காதலியாக இருக்க வேண்டும். அவள் நினைத்ததால் தான் இவருக்குத் தும்மல் வந்தது என்றெண்ணிக் கணவனை நோக்கி, யார் நினைக்கத் தும்மல் வந்தது? என்று வம்பிழுக்கிறாள். இதைக்கேட்ட கணவன் அடுத்தத் தும்மலை அடக்க முயல்கிறான். அதையறிந்த மனைவி, உன் காதலி

நினைக்கிறாள் என்பது எனக்குத் தெரிந்துவிடும் என்றுதானே தும்மலை மறைக்க முயல்கிறாய் என்று அழுகிறாள்.

“வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுவாள்
யாருள்ளித் தும்மினீர் என்று” (குறள்: 1317)

“தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்தீரோ என்று” (குறள்: 1318)

என்று கணவனின் ஒவ்வொரு செய்கைக்கும் குற்றம் கண்டுபிடித்து ஊடுகிறாள். தன்மேல் காதல் கொண்டவரைத் துன்புறத்தும் சாடிசம் என்னும் வருத்தும் மோகத்தின் இயல்பும் காதல் விசித்திரங்கள் என்று பிராய்ட் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

வள்ளுவர் பொருள் விழைவோர், பொருட் பெண்டிர், பண்பில் மகளிர், பொய்ம்மை முயக்கத்தார், பொது நலத்தார், மாய மகளிர், வரைவிலா மகளிர், இருமனப் பெண்டிர் என பெண்களை வகைப்படுத்துகிறார். இவர்களோடு சேர்த்து பிறன்மனை நோக்கும் ஆடவனையும் கடிந்துரைக்கிறார். கற்பை இருவருக்கும் பொதுவில் வைத்துப் பேசும் தமிழர் நாகரிகத்தில் ஒரு பெண் கற்பிழந்தாள் என்றால் ஓர் ஆடவனும் கற்பிழந்ததாகத்தானே கொள்ள முடியும். வள்ளுவக்காலப் பரத்தையர் ஒரு குழுவினராக இருந்து ஆடவரைக் கவர்ந்தனர் என்று கூறமுடியாது. அவர் காலத்தில் எல்லா நிலங்களிலும், எல்லா இடங்களிலும் பரத்தைமை நிகழ்ந்திருக்க வேண்டும். அதனால் தான் இருவரையும் கடிந்துரைக்கிறார். பிறன்மனை நோக்கும் ஆடவனை மட்டும் கருத்தில் கொள்ளாமல் அதற்கு உடன்படும் பெண்டிரையும் கருத்தில் கொண்டே வள்ளுவர் பிறன்மனை நோக்கா பேராண்மையை என்றுரைத்திருக்கிறார்.

'அறக்கழிவு உடையன பொருட் பயம் படவரின்

வழக்கு என வழங்கலும் பழித்தது என்றென்ப'(17)

என்ற தொல்காப்பிய நூற்பா, அறக்கழிவுடைய பொருள்கள் பயன் தருபவையாயினும் அவற்றைப் பாடுதல் ஆகாது எனக் கொண்டதால், வள்ளுவரும் விலைமகளிர் பற்றிப் பாடாதொழிந்தார் எனலாம்.

பொருட் பெண்டிர், பொய்மை முயக்கம் பற்றிப் பலவாறு எடுத்தோதும் வள்ளுவர் கற்பியலின் இறுதியில் ஊடல் பற்றிய பாடல்களைப் படைத்துள்ளார். சங்க இலக்கியங்களில் காணப்படும் பரத்தையர் விலைமகளிர் இல்லை. ஒருவர் மாட்டும் தங்காதவராகவும், பல ஆடவர்களோடு தொடர்பு கொண்டவர்களாகவும் சங்க இலக்கியத்தில் படைக்கவில்லை. 'நண்ணேன் பரத்த நின் மார்பு' (1311) என்று பரத்தைமை பற்றி வள்ளுவர் பேசுகிறார். "சங்கச் சமுதாயத்தை அடுத்து வந்த அறநெறிக் காலத்தில் பிறன்மனை நயத்தல் போன்றன வலுவாக மறுக்கப் பெற்றன. எனவே சங்ககாலத்து இறுதியில் பரத்தைமையும் பிறன்மனை நயத்தலும் தோன்றியிருக்க வேண்டும்"(18) என்பர். "திருவள்ளுவர் காமத்துப்பாலைப் புதுமையாகப் புரையின்றிப் பாடியுள்ளார். ஐந்திணைக் காதல் வாழ்வில் ஆடவனது பரத்தைச் செயலுக்கு இடமளிக்கவில்லை. வரைவின் மகளிரது முயக்கம் கூடாது என்று பொருட்பாலில் நெறியுரைத்த ஆசிரியர் காமத்துப்பாலில் பரத்தையரை வரவிடுவாரா? பரத்தயரை ஒதுக்கி ஊடல் அதிகாரங்களை நுணுக்கமாக யாத்த புதுப்பெருமையுடையவர் வள்ளுவர். எனினும் பரத்தமைக் குறிப்பை அவர் ஒதுக்கவில்லை. ஆடவர நிறையாளன் எனினும் அந்நிறைவு குறைவாகவே பெண்ணுள்ளத்திற் தப் படும்போலும். 'இந்த இப்பிறவிக்கு

இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்ற வரத்தைப் பெருமகன் இராமனிடங்கூடச் சீதை பெற்றாள் என்பர் கம்பர். எல்லார் தம் நெஞ்சத்தின் எடை கண்ட அறப்பேராசான் பெண்ணினத்தின் உள்ளோட்டத்தைப் புலவி நுணுக்கத்திற்குப் பயன்படுத்துவர்”(19) என்பர் வ.சுப.மாணிக்கம். சங்கப் பாக்கள் பரத்தைமையை மையப்படுத்தியதைப் போல வள்ளுவர் ஊடலுக்குக் காரணமாக பரத்தமையைக் குறிக்கவில்லை. ஆடவனின் பலதார மணத்தால் நிகழ்ந்த உச்சகட்ட நிலையினை வள்ளுவரின் ஊடல் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**பக்தி இலக்கியங்களில் ஊடல்**

தமிழ் 'பக்தியின் மொழி' என தனிநாயக அடிகள் சிறப்பித்துக் கூறியுள்ளார். சங்க இலக்கியத்தின் தாக்கம் பக்தி இலக்கியத்தில் காணப்படுகிறது. பெயர் குறிப்பிடப்படாத கற்பனை மாந்தரின் காதல், தெய்வக் காதலாக வளர்ந்தது. கற்றவர்களுக்கு உரியனவாகப் பாடப்பட்ட சங்க இலக்கியம் ஆழ்வார், நாயன்மார்களின் பக்திப் பாடலாய் அனைவரும் பாடுவதற்கு ஏற்றதாய் எளிய தமிழில் அமைந்தது.

இறைவனிடம் உறவும் உரிமையும் கொண்டாடுவது இறையடியார்களின் தனிச்சிறப்பாகும். உறவு வளர வளர உரிமை பெருகுதல் இயற்கை. சைவ, வைணவ இலக்கியங்களில் இறைவனிடத்து உறவும் உரிமையும் கொண்டாடும் நிலையைப் பல பாடல்கள் உணர்த்தவல்லனவாகத் தென்படுகின்றன.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனை நெருக்கமான உறவினனாகக் கருதினர். ‘அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ”[20] என்றும், ‘அம்மையே அப்பா ஒப்பிலா மணியே’ என்றும் நினைத்தனர். இறைவனுக்கும் நாவுக்கரசருக்கும் உள்ள உறவை ஆண்டான் - அடிமை நெறி என்றும், இறைவனுக்கும் சம்பந்தருக்கும் உள்ள உறவை தந்தை - மகன் நெறி என்றும், இறைவனுக்கும் சுந்தரருக்கும் உள்ள உறவைத் தோழமை நெறி என்றும் கூறுவர். மாணிக்கவாசகர் இன்னும் நெருக்கமான நிலையில், இறைவனை நாயகனாவும் தம்மை நாயகியாகவும் நினைத்தவர். சங்கத் தமிழரின் மானுடக் காதல், பக்தி இயக்கக் காலத்தில் தெய்வீகக் காதலாக மலர்ந்தது. ‘முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்’(6:25:7) என்ற நாவுக்கரசரின் அகப்பாடலாலும், ‘சிறையாரும் மடக்கிளியே இங்கேவா’ (1:60:10) என காதல் கொண்ட தலைவி கிளியிடம் கூறுவதாக அமைந்த சம்பந்தரின் பாடலாலும் அறியமுடிகிறது. இவ்வாறு உறவுமுறைகளின் வழி பாடல்கள் புனையப் பெற்றமை இறைவன் கற்பனையானவன் அல்ல; நம்மோடு இருப்பவன் என்கிற நம்பிக்கையை மக்களிடம் நிலைபெறச் செய்தது. மக்கள் இறைவனோடு ஒன்றுவதற்காகத் தான் மனித உறவு நிலைகளை வைத்துப் பாடல் புனைந்துள்ளனர்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் திணைகளை மையமாக வைத்து பக்தி இலக்கியங்கள் படைக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர் ‘உள்ளது உவத்தல், இல்லது காய்தல்’ என்ற இரண்டு மெய்ப்பாடுகளை ஊடலில் கொள்வார். சில காரணங்களுக்காகத் தலைவி, தலைவன் மீது சினம் கொள்வாள். இதனை,

'வேப்பநனை அன்ன நெடுங்கண் ஈர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது
ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்
திதலையின் வரிப்பஒடி விரைந்து தன்
நீர்மலி மண்அளைச் செறியும் ஊர' (அகம்.176: 8-12)

அவனுடைய நடத்தை காரணமாக அயலாரின் ஏச்சிற்குப் பொருளாக ஆன தலைவனைத் தலைவி குற்றஞ்சாட்டுகிறாள். இல்லது காய்தலில் தலைவனைப் பற்றிக் கற்பனை செய்து அவனிடம் சினம் கொள்ளுகிறாள்.

தான் கோயிலிருந்து திரும்புவதாகத் தலைவன் உண்மையைக் கூறினாலும் அவனுடைய வஞ்சக ஒழுக்கத்தைப் பற்றி ஐயுறுகிறாள் தலைவி. பரத்தையர் யாரையும் யான் அறியேன் எனக் கூறும் தலைவனிடத்துத் தலைவி, நீ வேறு எங்கு சென்று வந்தாய்? எனக் கேட்க அதற்குத் தலைவன் 'கோவிலுக்குச் சென்றேன்,"(21) 'புனலாடி வருகின்றேன்,"(22) 'யானை ஏறி வந்தேன்,"(33) 'குதிரை ஏறி வந்தேன்,"(24) 'குறும்பூழ்ப் போர் காணச் சென்றேன்"(25) என உரைக்கத் தலைவி பரத்தையை மேற்கூறிய செயல்களோடு ஒப்பிட்டுத் தலைவனைக் கடிந்து பேசுகிறாள். இத்தமிழ் மரபை பின்பற்றித் திருவாய்மொழியிலும் இறைவனிடம் தலைவி ஊடிக் கொள்வதாகப் பாசுரங்கள் உள்ளன. கடவுளர்களை மனிதத் தன்மைக்கு ஆக்குவதுடன் அவனுடன் ஊடி, சண்டையிடுவது என்பது பக்தி இலக்கியத்தில் ஓர் உத்தியாகும். பிற பெண்களுடன் சரசஞ் செய்வதன் மூலம் என் காதலனாக இருக்கும் இறைவன் தவறிவிட்டான். அதனால் எனக்கு வருத்தம் ஏற்படுகிறது என்கிறாள் தலைவி. இதனை,

'மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்

முன்புநா னதவஞ்சுவன்

மன்னுடை இலங்கையரண் காய்ந்த மாயவனே

உன்னுடைய சுண்டாயம் நானறிவன்; இனி

யதுகொண்டு செய்வதென்

என்னுடை பந்தும் கழலும் தந்து போகு நம்பீ!

'உன்னுடைய அழகிய முறுவலையும், குழலிசையையும் அனுபவிப்பதற்கு வேறு பெண்கள் இருப்பதால் போகு நம்பீ; உன்னுடைய பொய்களை நான் அறிவேன். உன்னுடைய கண்கள் அழகாக உள்ளது என்பது உண்மை. ஆனால் அதைக்கண்டு மயங்க மாட்டோம். ஆனிரை மேய்ப்பவனென்று நீ கூறினாலும், வேல் போன்ற கண்களையுடைய பெண்கள் கூட்டத்திலே நீ இருப்பாய். உலகை உண்டு உமிழ்ந்தாய் என்னும் உன் மாயங்களை நான் அறிவேன். உன் சங்கும், சக்கரமும் காட்டாதே. உன்னைத்தேடும் பெண்களிடம் செய்; என்னுடைய பூவையும் கிளியையும் கொடுத்துவிட்டு நட. என்னுடைய சகோதர்கள் கண்டால் உன்னைத் தண்டிப்பர். உன்னுடைய கண்களால் வலைப்படுத்தாதே. நான் வலுவுடன் நிற்கிறேன்; மயங்க மாட்டேன். ஆயர்குலம் வீடுய்யத் தோன்றிய கண்ணனே, நீ என்னிடம் நன்றி இன்றி இருப்பதால் இங்கிருந்து சென்றுவிடு' என்று ஊடலின் காரணமாகத் தலைவி, இறைவனின் அனைத்துச் செயல்களையும் விரித்துரைக்கிறாள். நீ மனிதனாக, என் காதலனாக, கிருஷ்ணனாக இருக்கிறாய். இந்த மனித உறவு உன்னிடம் சினம் கொள்வதற்கு வாய்ப்பைத் தருகிறது. கடவுட் கோட்பாட்டிற்கு அழகு பூர்வமான அணுகுமுறையை இது தருகிறது"[26] என்பர்.

**சுந்தரர் சங்கிலியை மணந்து கொள்ள பரவையார் புலவி கொள்ளுதல்**

சுந்தரர் திருவாரூரில் கணிகையர் குலத்தில் பிறந்த பரவையாரை சிவபெருமான் உதவியாலே மணந்தார். அதன்பின் திருவொற்றியூருக்குச் சென்ற போது சங்கிலியாரைச் சிவபெருமானே தனக்கு மனைவியாக்கி வைத்தார் என்று பாடுகிறார்.

**'சங்கிலியோடு எனைப் புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்**

**எங்கு உலக்கப் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே'**

என்று சங்கிலியோடு தன்னைச் சேர்த்து வைத்த உண்மையானவன், எனது ஆருயிர் இறைவன்தான் என திருவாரூர்ப் பதிகத்தில் குறிப்பிடுகிறார்.

சுந்தரர் ஒரு மனைவிக்குப் பதிலாக இரு மங்கையரை மணந்தார். இன்பந் துய்த்தார். ஊடியிருந்த தமது மனைவி பரவையாரிடம் சான்றோர்களையும் சிவபெருமானையும் தூதாகப் போகச் சொல்கிறார்.

பரவையாரையும் மணந்து பின் திருவொற்றியூரிலுள்ள சங்கிலியாரையும் மணந்த செய்தியை அறிந்த பரவையார் ஊடல் கொண்டு இனி இங்கு வரவேண்டாம் என்கிறார். அவ்வாறு வந்தால் 'நான் உயிரையும் விட்டுவிடுவேன்' என்கிறார். இதனை,

**'மென்பூஞ் சயனத்திடை துயிலும்**

**மேவார் விழித்தும் இனிது அமரார்**

**பொன் பூந்தவிசின் மிசையின் இரார்**

**நில்லார் செல்லார் புறம்பு ஒழியார்**

**மன்பூ வாளி மழைகழியார்**

மறவார் நினையார் வாய்விள்ளார்

என்பு ஊடு உருக்கும் புலவியோ

பிரிவோ இரண்டின் இடைப்பட்டாள்'

மென்மையான மலர்கள் விரித்த படுக்கையில் உறங்குதல் கொள்ளாதும், விழித்திருத்தலும் விரும்பாதவராய், அழகிய பொன்னால் அமைந்த இருக்கையிலும் அமராதவராக, நிற்கவும் நடக்கவும் இயலாதவராகிய பரவையார், மன்மதன் எய்யும் மலரம்புகள் மழை போல் விழ, அவற்றையும் விலக்கும் திறனின்றி நம்பியாரூரை மறவாதவராயும், நினைக்க மாட்டாமையும் கொண்டு வாய் திறந்து எதுவும் மொழியாதவராய் என்பினை உள்ளிருந்து உருக்கும் அன்பின் வயப்பட்டவராயப் புலவியோ அல்லது பிரிவோ எனவும் அறியாது, அவ்விரண்டின் இடைப்பட்டவராய் வருந்தினார்"[27] என்பர்.

**சான்றோர் சிலரைப் பரவையார்பால் தூது அனுப்புதல்**

"நம்பியாரூரர் தம் அன்பினால் சென்றவர்களும் பரவையார் மாளிகையினை அடைந்து பண்பின் மிக்க பாங்கொடும் பெரிதும் ஊடல் கொண்டவராய் நிலவும் பரவையார் முன்னே எய்தி, எம் பிராட்டிக்கு இது தகுமோ?, என்றவாறு எடுத்துரைப்பாயிராயினர்"[28] என்பர். இது பரவையார் தூதாக வந்தவர்களுக்கு வாயில் மறுத்தலாகும்.

**சுந்தரர் சிவபிரானைத் துதித்துப் பரவையார் தம் புலவி தீர்க்குமாறு வேண்டுமாறு வேண்டுதல்**

பரவையாரைப் பிரிந்து வாழும் சுந்தரர் பரவையாரிடம் தம்மைக்

கூட்டுவிக்குமாறு சிவபெருமானை வேண்டி அவளின் ஊடலைத் தணிக்குமாறு வேண்டுகிறார். இதனை,

**'அடியேன் அங்குஅத் திருவொற்றி**

**யூரில் நீரே அருள் செய்ய**

**வடிவேல் ஒண்கண் சங்கிலியை**

**மணம் செய்து அணைந்த திறம் எல்லாம்**

**கொடிஏர் இடையாள் பரவைதான்**

**அறிந்து தன்பால் யான்குறுகில்**

**முடிவேன் என்று துணிந்திருந்தாள்**

**என்நான் செய்வது என மொழிந்து'**

திருவொற்றியூரில் தேவரீரே அருள் செய்ய வடிக்கப் பெற்ற வேல் போன்று ஒளிரும் கண்ணுடைய சங்கிலியை அடியேன் மணம் செய்து இருந்த திறத்தினைக் கொடி போன்ற மெலிந்த இடையுடைய பரவை அறிந்து, அவள்பால் யான் அடைந்தால் உயிரை விடுவதாகத் துணிந்தனள். இனி நான் என்ன செய்வது? என்று நம்பியாரூரர் மொழிந்தார்"(29) என்பர்.

**சிவபெருமான் பரவையாரிடம் ஊடல் தணிக்கும் வாயிலாகச் செல்லுதல்**

சுந்தரர் இரண்டாவது திருமணம் செய்து கொண்ட தன்மையினால் பரவை நாச்சியார் பிணக்குற்றார். இப்பிணக்கினைத் தீர்த்து வைக்கும் வண்ணம் இறைவன் அந்தணர் கோலந்தாங்கி இருமுறை பரவையார் இல்லத்திற்குத் தூது சென்று அவரது பிணக்கைத் தீர்த்து இருவரையும்

ஒருங்கிணைத்தார். ஊடல் தணிக்கும் வாயிலாகச் சென்ற இறைவனை பரவையார் வாயில் மறுக்கிறார். இதனை,

**'வெம்மைதான் சொல்லி நாமே**

**வேண்டவும் மறுத்தாள் என்றார்'**

பரவையின் இல்லம் சென்று, திரட்சியான தன்ங்களையுடைய அவள்பால் உன்னுடைய தன்மையைக் கூறியும் ஏற்காதவளாகக் கொடுமையான வார்த்தைகளைச் சொல்லி நாம் வேண்டிக் கொண்டும் அவள் மறுத்தனள் என்கிறார்."[30]

***திருநீலகண்ட நாயனார்***

திருநீலகண்டர் பரத்தை வீட்டுக்குச் சென்று வந்ததால் ஊடல் கொண்ட மனைவி (அருந்ததிக் கற்பின் மிக்கார்), 'தீண்டுவராயின் எம்மைத் திருநீலகண்டம்' என்று ஆணையிடுகிறார்."[31]

திருநீலகண்ட நாயனார் பரத்தையிடம் அணுகி வந்ததைக் கண்ட அவர் மனைவி மானத்தால் வந்த மன வருத்தத்தை ஆற்றமாட்டாளாகி ஊடல் கொள்கிறாள். எனினும் மன வாழ்க்கையில் ஆற்ற வேண்டுவனவாகிய அனைத்துக் கடமைகளையும் விதிப்படி செய்து முடித்து மெய்யுறு புணர்ச்சிக்கு மட்டும் இசையாதிருக்கின்றாள்"[32] என்பர்.

கணவன் தனக்கு மட்டுமே உரியவனாக இருக்க வேண்டிய நிலையில் பரத்தையிடம் சென்று வந்தமை தவறு என்பதையும், ஆடவர் கற்புக்கு இழுக்கு என்பதையும் அவர் மனைவி நன்கு உணர்ந்திருக்கின்றார். தவற்றைத் தட்டிக் கேட்கும் உரிமை

இல்லாமையால் தன்னால் இயன்ற அளவுக்கு மெய்யுறு புணர்ச்சியை மட்டும் தடை செய்கிறாள். சங்க இலக்கியத்திலும் காணப்படாத புதுமையான அறப்போராட்டமாகக் காணப்படுகிறது. இது காலங்காலத்திற்கும் பரத்தையர்பால் சென்றமைக்கு அவள் கொடுத்த தண்டனையாகக் கொள்ளலாம்.

**பதினொராம் திருமுறையில் அகத்திணை**

**சேரமான் பெருமாள் பாடும் அகப்பாடல்கள்**

தலைவன் பரத்தையர்பால் பிரிந்த போது பேசியதாக ஐந்து துறைகள் வரும். ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மாற்றம் செய்து கூற்றுக்களைக் காட்டுகிறார். தலைவன் அருள் செய்யவில்லை. தலைவிக்கு உள்ளக் கொதிப்பு ஏற்படுகிறது. பெண் மனம் ஊடல் கொள்ளின் என்னாகும்? என்று பேசுவதை,

**'கடிமலர்க் கொன்றை தரிரும்புல்**
**லேன்; கலைசார ஓட்டேன்;**
**முடிமலர் தீண்டின், முனிவன்**
**முலைதொடு மேற்கெடுவன்;**
**அடிமலர் வானவர் ஏத்தநின்**
**றாய்க்கழு கல்ல என்பன்**
**தொடிமலரித் தோள்தொடு மேல்திரு**
**வாணை தொடங்குவனே'** (பொன்வண்ணந்தாதி: 63)

என்றும், பரத்தையிற் பிரிந்த தலைவனுக்குப் பாணன் வாயிலாக வருகிறான். அது கண்டு தோழி வெகுண்டு மொழிகிறாள். 'பாண!

கருவுற்ற தன்பெடை, கருவுயிர்க்கும் காலம் கருதிச் சேவல் அதற்கான இடத்தை வகுக்க விரும்பி, அன்பால் பெடையைப் பல்கால் தழுவி, அரிதிற் பிரிந்து, கரும்பின் நுண்டோடுகளைக் கவர்ந்து வரும் நீர் நாடன் நம் தலைவன். அவர்க்கு நீயோ, பார்வை விலங்காகவும் பரத்தையரைப் பிடிக்கும் வலையாகவும் விளங்குகிறாய். வஞ்சகம் பேசி, கள்ளனைப் போல விழித்து என்னைக் கைதொழுது என் வாயிலில் நிற்கிறாய். தலைவனோ கண்ணாடி முன் பாவை போல, தன்னியல்பின்றி பரத்தையர் கருத்துவழி ஒழுகுகிறான். ஆகவே நின் பொய்மொழிகளை ஏற்கமாட்டேன் என்றாள். இதனை,

**'மனைஉறை குருவி வளைவாய்ச் சேவல்**

**சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி**

.............. .............. ................ ...................

**பெருவளந்தழீஇய பீடுகால் கிடக்கை**

**வருபுன லூரன் பார்வையாகி'**(33)

என்று தலைவி வாயில் மறுக்கிறாள்.

இறைவனை உலகிலுள்ள அனைத்து உறவுகளுக்குமாய்க் காணும் நிலையையும் அப்பாடல்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. இறைவனிடத்துத் தாம் வளர்த்துக் கொள்ளும் உறவின் நெருக்கத்தால் சில நேரங்களில் உரிமைகள் எல்லை மீறிப் போகின்ற நிலையினையும் பக்தி இலக்கிய பாடல்களில் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

'சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள்' ஆண்டாள் தன்னைத் திருமாலாம் தலைவனுக்கே ஆட்படுத்தி இப்பிறவியில் மட்டுமல்ல ஏழேழ்

பிறவியிலும் அவனோடு உறவும் அவனுக்கே ஆட்படும் உரிமையும் வேண்டும்''[34] என வேண்டுவதாகத் தெரிய வருகின்றது.

கிறித்துவ இலக்கியமான கிருஷ்ணபிள்ளையின் இரட்சணிய மனோகரம் இறைவனிடத்துக் கொண்டுள்ள பல உறவுகளைக் காட்டுவனவாயுள்ளன.''[35]

**பக்தி இலக்கியத்தில் பரத்தை**

பிறன்மனை நயவாமை, பரத்தையர் உறவு கொள்ளாமை, இழிகாம உணர்வு கொள்ளாமை போன்றவைகளைப் பக்தி இலக்கியங்கள் இயம்புகின்றன. 'தலைவனைப் பிரிந்த தலைவி புலம்புவதாக அமையும் பாடல் ஒன்றில் 'பெண் பிறந்தார் எய்தும் பெருந்துயர் காணேன் என்று ஒண்சுடரோன் வாராதொழிந்தான்' என வருந்துவதாகத் தற்குறிப்பேற்றம்பட வருணிக்கப் பெறுகின்றது.'[36]

'பெண் பிறப்பு துன்பப் பிறப்பு' என்ற எண்ணம் வெளிப்படுத்தப்படுகிறது. பெண்ணினத்துள் பரத்தையர் என்ற பிரிவைச் சமுதாயம் படைத்ததைப் பெண்ணினத்தின் இழிநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். செல்வ வளமிக்க ஆடவர்கள் தம் உடல் உணர்ச்சிகளைப் போக்கிக் கொள்ளும் வடிகால்களாக இப்பரத்தையர் மதிக்கப் பெற்றனர். இப்பரத்தையரின் உள நிலைகளும், செயல்களும் பல்வேறு நிலைகளில் இகழ்ந்துரைக்கப் பெறுகின்றன. காளையர்களைத் தங்கள்பால் ஈர்த்து, ஏய்த்து, உண்பவர்கள் என்றும்'(5:2:44: திருக்குறுந்தொகை 1:1-2) இழிந்தவர்களாயினும் உயர்ந்தவர்களாயினும் வேற்றுமை பாராட்டாது

எண்ணெய் ஆட்டுவோர் தாம் பெற்ற எள்ளிற்கேற்ப எண்ணெய் கொடுப்பது போலத் தாம் பெறும் பொருளுக்கேற்ப உடனுறையும் இன்பத்தை விலையாகக் கொடுத்து இரக்கம் சிறிதும் இல்லாதவர்களாய் விளங்குபவர்கள் என்றும் (11:28:11-20), தந்தை யாரெனத் தெரியாது, நாட்டுக்கும், வீட்டுக்கும் பயன்படாதவராய் வாழ்பவர்கள் என்றும்[37] இழித்துரைக்கப் பெறுகின்றனர்.

***பக்தி இலக்கியத்தில் பாணர்***

அடியார் வரலாறுகளைப் பார்க்கும் போது, பாணர் என்ற பிரிவினரும் சமுதாயத் தரப்பிரிவில் தாழ்நிலையுற்று வாழ்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரின் வரலாறு பாணர்களின் சமுதாய வாழ்க்கை நிலையைக் காட்டுகிறது. "சாதிமுறையின் காரணிகளுள் ஒன்றாகிய கொல்லாமை என்ற அறநெறியின் செல்வாக்கினால்; விலங்குகளின் தோலைப் பயன்படுத்திச் செய்யப் பெற்ற யாழைக் கொண்டிருந்தமையால் இழிந்த சாதியினராகக் கருதப் பெற்றிருக்கலாம் எனத் தோன்றுகிறது. முதன்முதலில் சமுதாயத்தில் சமமாகக் கருதப் பெற்றிருந்த பாணர்கள் சாதிமுறையின் தோற்றக் காலத்தில் புலையர் அல்லது இழிசினர் என மாறிவிட்டனர்"[38] என்பர். "திருஞானசம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அந்தணர் - பாணர் என்ற வேறுபாடுகள் சிறிதுமின்றி இறை அன்பர்கள் என்ற உயரிய நோக்கில் பழகினும் சாதி வேறுபாடுகளால் புலப்படுத்தும் நிகழ்வுகள் சுட்டப்படுகிறது."[39] வழிபாட்டு முறைகளிலும் திருவிழாக்களிலும் முதலிடம் பெற்றிருந்த பாணர்கள் பின்னர் வந்த சமயப் பழக்க

வழக்கங்களால் இழிநிலை அடைந்துவிட்டனர் என்றும் கருதப் பெறுகின்றனர் என்ற தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் கூற்று நோக்கத்தக்கது.

**கம்பராமாயணத்தில் ஊடல்**

ஆழ்வார்கள் தமிழுக்குச் செய்திருக்கும் சிறந்த சேவையை நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் நன்கறிகின்றோம். கி.பி.12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த கம்பர் கன்னித் தமிழில் இராமகாதையைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்குத் தந்திருப்பது தமிழர் பெற்ற பெரும் பேறாகும். கம்பராமாயணத்தில் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம் என்ற ஏழு காண்டங்கள் உள்ளன.

கம்பராமாயணத்தின் கவிதைச் சிறப்பினால், ‘கம்பநாடன் கவிதையிற்போற் கற்றோர்க் கிதயம் களியாதே’ என்ற புகழுக்குக் காரணமாக விளங்குகிறார். பாலகாண்டத்தில் பூக்கொய் படலத்திலும், உண்டாட்டுப் படலத்திலும் ஊடல் செய்திகளைச் சங்க இலக்கியத்திற்கு ஒப்பாகப் பாடியிருப்பது கம்பனின் கற்பனைக்கு எடுத்துக்காட்டாகும்.

**ஊடல் கொண்ட வனிதை**

மேனி வண்ணத்தால் தாமரை மலரில் விளங்கும் திருமகளின் ஆபரணம் போன்ற ஒருத்தி வெண்மையான பளிங்குக் கல்லில் மலர் தாங்கிய வண்ணம் தெரியும் தன் நிழலை நோக்கி அவளை வேறொரு பெண்ணாகவே எண்ணினாள். பின்னர் இப்பெண் தன்னுடைய கணவற்கு

உயிர் போன்றவளே என எண்ணி வருந்தித் தன் கையில் விளங்கும் மலரோடும் கண்ணீர் பெருக நின்றாள். இதனைக் கம்பன்,

**'மெய்ப் போதின் நங்கைக்கு அணி அன்னவள்**

**வெண்ப ளிங்கிற்**

**பொய்ப்போது தாங்கிப் பொலிகின்ற**

**தன்மேனி நோக்கி**

**இப்பாவை எங்கோற்கு உயிர் அன்னவள்**

**என்ன உன்னிக்**

**கைப்போதி னோடுநெடுங் கண்பனி**

**கார நின்றாள்''[40]**

என்று கூறுகிறார். கண்ணாடியில் முகம் பார்த்து தன்முகம் என்று அறிந்திராத பெண்ணாகவா இருக்கிறாள் என்ற ஐயப்பாடு தோன்றுகிறது. அழகான தன் முகத்தைப் பார்த்து, வேறொரு பெண்ணோ என்று அச்சப்படுமளவிற்கு, எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் இவள் தன் கணவனுக்கு உரியவளோ என என்னும் ஆற்றாமை ஊடலாக பரிணமிப்பதை அறிய முடிகிறது.

வேறொரு தலைவன் தன் தலைவிக்கு மாலையணிவதைக் கண்டு ஈண்டு, தன் கணவன் தனக்கு மாலையணிவித்து மகிழச் செய்யாமையை எண்ணி ஏக்கம் கொண்டு கண்ணீர் வடிக்கும் நிலையை,

**'மைதாழ் கருங்கண்கள் சிவப்புற**

**வந்து தோன்ற**

**நெய்தாவும் வேலானொடு நெஞ்சு**

புலந்து நின்றாள்

எய்தாது நின்றம் மலர் நோக்கி

எனக்கு இது ஈண்டக்

கொய்து ஈதி யென்றார் குயிலைக்

கரங் கூப்பு நின்றாள்."(41)

என்று கம்பர் விவரிக்கின்றார். மை விளங்கும் கரிய கண்களையுடைய பெண்ணொருத்தி நெய் தடவப் பெற்ற வேலையுடைய தன் கணவன் பால் ஊடல் கொண்டு தனியே நின்றாள். அவள் மலரைக் கொய்ய முற்படும் போது கைக்கு எட்டாமல் இருந்த மலரைக் கண்டு அதன் மேல் விருப்பம் கொண்டவளாகி, ஆங்குள்ள ஒரு குயிலை நோக்கி, இதனைக் கொய்து எனக்குக் கிடைக்கும்படி செய்வாய் எனக் கைகூப்பி நின்றாள்.

**உருவு கண்டு ஊடல்**

தலைவன் ஒருவன் ஓங்கி வளர்ந்த தென்னை மரத்தின் இளநீர்க் காய்களை நோக்கி வியப்பு மேலிட்டவனாய், இவை மங்கையரின் தனங்கள் (மார்பகங்கள்) போல் உள்ளனவே என உரைக்க, அவ்ஆடவனின் மனைவி விம்மி அழுதும் வெதும்பியும் வியர்த்தும் ஊடல் கொள்கிறாள்."(42)

கணவன் பொதுவாகக் கூற அதனைத் தன் கணவன் தன்னைத் தவிர வேறொரு மங்கையின்பால் அன்பு கொண்டான் என எண்ணி ஊடல் கொள்கிறாள். உடல் உறுப்புக்களை நோக்குதலுங்கூட ஊடற் காரணங்களாக அமைகின்றன.

"வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுவாள்

யாருள்ளித் தும்மினீர் என்று" (குறள்: 1317)

என்ற குறளினை நினைவுகூரச் செய்கிறது.

தன் எண்ணங்களை அல்லது ஆசைகளைப் பிறர்மேல் ஏற்றிக் கற்பித்துக் கூறுவது புறத்தோற்றம் எனப்படுகிறது. ஒன்றை விரும்பி நினைத்தவுடன், உள்ளம் விரும்பிய பொருளிடம் சென்று நிற்பது உள்ளத்தின் இயல்பாகும். காணும் பொருளைக் காண விரும்பும் போக்கில் காணுதல், உள்ளத்தின் போக்கிற்கு ஏற்பவே உலகம் தெரிதல் ஆகியனவும் இயல்பே ஆகும். ஆகையால் பிறர்மேல் ஏற்றிக் கூறவும் இயற்கை நிகழ்ச்சிகளுக்கு உள்ளம் விரும்பும் வகையில் பொருள் கூறவும் முடிகிறது.

மற்றொரு தலைவன், போர் என்று சொன்ன அளவில் மலை போன்று விளங்கும் அழகிய தோளை உடையவன், மன்மதனைப் போன்று பூக்களைக் கொய்து கொண்டிருக்க, ஆங்கு வந்த மேகம் போன்ற கூந்தலும் குயில் போன்ற இனிய குரலும் உடைய அவன் மனைவி அவன் கண்களைப் பின்புறம் சார்ந்து புதைத்தாள். அத்தலைவன், யார் என வினவியவுடன் அவள் பெருஞ்சினம் கொண்டவளாகி வெதும்பி நின்றாள்."(43)

தன்னைத் தொட்டதும் தன்னை அறிந்து கொள்ளாத கணவனின் நிலையைக் கண்டு தன்னைப் போலவும் வேறு பெண்களும் அவனிடம் தொடர்பு கொண்டுள்ளனரோ என்ற எண்ணம் கொண்டு மனைவி சினந்து ஊடியமை விளங்கிற்று.

## இரு மனைவியரைப் பெற்ற ஆடவனின் நிலை

ஒருவன் வாய்தவறி தன் மனைவியின் பெயரைச் சொல்லி அழைக்காமல் வேறு பெண்ணின் பெயரைச் சொல்லி அழைக்கின்றான். அதைக்கேட்ட அப்பெண் தன் சினத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அதனை மறைப்பதற்காகத் தன் மென்மையான விரல்களில் ஒரு பூவைக் கைக்கொண்டு மோந்தாள். ஆயினும் அப்பூவானது சினத்தால் கருகிப் போனது."[44] அகத்தில் உள்ள நெருப்பு (சினம்) புறத்தில் தெரிகிறது.

மற்றொரு தலைவனின் நிலை பரிதாபத்திற்குரியவையாகக் காணப்படுகிறது. மனைவியர் இருவரும் கணவன் தன்பால் தனி அன்பு கொண்டுள்ளான் என்று கருதியிருக்க, அவன் கொடுத்த பூக்கள் சரிசமமாக இருந்தமையால் இருவரும் ஊடல் கொண்டு அவன் அளித்த பூக்களை வீசி எறிந்து அப்பாற் சென்றார்கள்."[45] இத்தகைய நிலை உருவாகும் என்னும் காரணத்தால் ஆடவன் ஒருவன் பூக்களை மனைவியர்க்குத் தராமலும், இல்லை என்று கூறாமலும் இருந்த தன்மையைப் 'ஒரு பாடல்"[46] விளக்குகிறது.

நாடிக் கொண்டாள் குற்றம்
　　நயந்தாள் முனிவாற்றாள்
ஊடிக் காணக் காட்டு
　　நலத்தாள் உடன் நில்லாள்
தேடித் தேடிச் சேர்த்த
　　செழும்பூ நறுமாலை.
சூடிச் சூடிக் கண்ணடி
　　நோக்கித் துவள்வாளும்"[47]

நங்கையொருத்தி, தன் கணவுன் மீது குற்றத்தைத் தேடிக் கற்பித்துக் கொண்டு ஊடல் கொண்டிருக்க ,அவள் சினத்திற்கு ஆற்றாது அவன் புறத்தே விலகிச் சென்றான். பின்னர் தனக்குத் தானே ஊடலைத் தணித்துக் கொண்டு தான் தேடிச் சென்று சேகரித்த வளமையான நறுமண மலர்களை மாலையாகக் கட்டித் தலையில் சூடிக் கொண்டு கண்ணாடியை நோக்கித் தன் அழகைச் சுவைக்கும் போது கணவன் அண்மையில் இல்லையே என்று எண்ணி வாடுதலானாள்.

**உண்டாட்டுப் படலம்**

நிலவொளியின் சிறப்பைக் கூற வந்த கம்பன்,

**கலந்தவர்க்கு இனியதோர் கள்ளு மாய்ப் பிரிந்து**
**உலந்தவர்க்கு உயிர்சுடு விடமு மாய்உடன்**
**புலந்தவர்க்கு உதவிசெய் புதிய தூதுமாய்**
**மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே"(48)**

கணவன் மனைவியர் பிரிந்து வாழும் காலத்தில் உயிரை வாட்டுகின்ற கொடிய நஞ்சு போன்று வெறுக்கத்தக்கதாகவும், ஊடல் கொண்டிருப்பவர்களுக்கு, அவ்வூடலை நீக்கி உதவி செய்யும் தரமுள்ளதாகவும் இந்நிலவானது இனிய தூது என ஆகி மலர்ந்தது என்று கம்பர் ஊடல் கொண்ட இருவரையும் நிலவானது ஒன்று சேர்ப்பதாகக் கூறுகிறார்.

**'உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு"(49)**

என்று திருக்குறள் கூறுவது நோக்கத்தக்கது.

### பொய் அன்பென வருத்தமடைதல்

தன்னிடம் பழகிய கணவன் தன் இளைய மனைவியையே நினைத்துத் தளர்ந்ததால் ஏளனமும் தன்பால் கணவன் கொண்டு பழகிய பொய் அன்பு கண்டு வருத்தம் அடைந்தனள்."[50] மற்றொருத்தி ஆடையிலிருந்து உதிர்ந்த நவரத்தின மணிகள் அறுந்து கீழே மண்ணில் சிதறின. ஆனால் முத்துக்களைப் போன்ற அவளின் கண்ணீர்த் துளிகள் நவரத்தின மணிகள் சிந்தும் முன்னரே தரையில் உதிர்ந்து பெருகின"[51] என்கிறார் கம்பர்.

**'தோடவிழ் கூந்தலாள் ஒருத்தி தோன்லோடு**
**ஊடுகெ னோஉயிர் உருக நோய்கெடக்**
**கூடுகெ னோஅவன் குணங்கள் வீணையில்**
**பாடுகெ னோஎனப் பலவும் பன்னினாள்"[52]**

தலைவன் பிரிந்து சென்றமை குறித்து ஊடல் செய்வேனோ! உயிர் வதைக்கும் காமநோய் தீர அவன்பால் கூடுவேனோ! அல்லது அவனுடைய சிறப்பியல்புகளை வீணையில் இசையுடன் மீட்டிப் பாடி மகிழ்வேனோ! எனப் பலவாறு மனத்துள் சிந்தித்து ஆராயலானாள்.

ஊடல் கொண்ட ஒருத்தி வாய்திறந்து ஏதும் கூறாமல் கரம் சிவக்க வீணை மீட்டிய செய்தியும்"[53] காணக்கிடைக்கிறது. ஒன்றைச் சாதிக்க இயலாத சூழலில், ஏமாற்றமும் முறிவும் கவலையும் உற்ற உள்ளம், பிறிதொன்றைச் சாதிக்க முயல்கிறது. உள்ளத்தின் இவ்வியல்பை உளவியலார் 'ஈடு செய்தல்' என்பர். ஈடு செய்தல் ஏதோ ஒரு சாதனையைப் பெறுவதற்குத் தவறியதால் ஏற்பட்ட கவலைக்கு எதிராக

விரிவடைந்த ஒரு வழியமைப்பு என்பது உளவியல் விளக்கமாகும். ஒரு நிலையின் இழப்பை மறு நிலையில் ஈடு செய்து கொள்ள உள்ளம் முயலுதலால் இதனை இழப்பு-ஈடு எனலாம்.

**'கொண்ட கோலக் குறள்உரு வாய்ச் சென்று**
**பண்டு மாவலி தன்பெரு வேள்வியில்**
**அண்டமும் நிலனும் அடியொன் றினால்**
**கொண்டவன் வரில் கூடிடு கூடலே"[54]**

என்ற பாவை ஆண்டாளைப் போல கணவனுக்காகக் காத்திருக்கிறாள். தன் அழகிய கணவன்பால் காதல் நோய் கொண்டவளாகி அதனைத் தீர்த்தலையொட்டித் தன் தோழியைத் தூது அனுப்பினாள். பின்னர் கணவன் திரும்பி வந்தான். ஆயினும், தூது அனுப்பியதால் தானே வந்தான். தன்பால் அன்பு கொண்டு விரும்பி வரவில்லை எனக் கொண்டு வாயிற் கதவைத் தாளிட்டு அடைத்துக் கண்கள் சிவக்குமாறு சினம் கொண்டு ஊடுதல் செய்கிறாள்."[55]

**'உய்த்தபூம் பள்ளியின் ஊடல் நீங்குவான்**
**சித்தமுண்டு ஒருத்திக்கு அது அன்பன் தேர்கிலான்**
**பொய்த்ததுஓர் முரியால் நிமிர்ந்து போக்கினாள்**
**எத்தனை யிறந்தன கடிகை ஈண்டென்றாள்"[56]**

மலர்ப்படுக்கையில் ஊடல் கொண்டு விளங்கும் ஒருத்தி தன் ஊடலைத் தானே நீக்கிக் கொண்டதை அறியாத கணவன், இவளை நெருங்கினால் சீறிப் பாய்வாளோ என அஞ்சியிருந்தான். ஆனால் அவள், யாதும் அறியாதவள் போன்று கணவனை நோக்கிச் சோம்பல்

முறிப்பவளாகி உடலை நெளித்து இப்போது பொழுது எவ்வளவு கடந்தது என வினவுதல் ஆனாள்.

ஊடல் கொண்டு சினந்த பெண்ணொருத்தி தன் கணவனை உதைக்கிறாள். அவள் உதைத்தவுடன் காதல் மலர்ந்து உடம்பில் உள்ள மயிர்க்கால்கள் சிலிர்த்துப் புளகாங்கிதம் கொண்டு விளங்கின என்று பாடுகிறார்.

**"கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி**
**அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்**
**காதல் எங்கையர் காணின் நன்றென**
**மாதர் சான்ற வகையின் கண்ணும்"** (தொல்.பொருள்.1093)

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். ஊடல் தணிப்பதற்காகத் தலைவன் தலைவியின் அடிகளில் வீழ்தலுண்டு. வையை நீராட்டில் தலைவி ஒருத்தி பரத்தை காரணமாகத் தலைவன் மேல் கோபம் கொண்டாள். தான் அணிந்திருந்த மாலையைப் பிய்த்தெறிந்தாள். இதனால் கண்கள் சிவந்தன. இந்நிலையில் அவளுடைய ஊடலைத் தணிப்பதற்காகத் தலைவன் அவள் அடியில் விழுந்து வணங்கினான். அவளோ அவன் தலைமேல் உதைத்துப் பின்னும் வெகுளி அடங்காதவளாய் ஊடல் கொள்கிறாள். இதனை,

**"என்னை வருவ தெனக்கென் றினையா**
**நன்றெமர் மார்ப னடுக்குற நண்ணிச்**
**சிகைகிடந்த வூடலிற் செங்கண்சேப் பூர**
**வகை தொடர்ந்த வாடலு னல்லவர் தம்முட்**
**பகை தொடர்ந்து கோதை பரிபூஉ நனிவெகுண்**

**டியாறாடு மேனி யணிகண்ட தன்னன்பன்**

**சேறாடு மேனி திருநிலத் துய்ப்பச் செம்புனல்**

**ஊருட னாடுங் கடை"[57]**

என்ற அடிகள் விளக்குகின்றன. தலைவன் தலைவியின் ஊடலைப் போக்க அடிமேல் வீழ்வதும், அவள் அவன் தலையை மிதிப்பதும் மிகையான செயல்களாகும்."[58] என்று குறிக்கும் பரிபாடல் ஒப்பு நோக்கத்தக்கது.

**இராமாயணக் கிளை கதைகளில் ஊடல்**

இராமாயணத்தில் இராமனுடைய அவதாரக் கதைகளும் இடம்பெற்றுள்ளன. கிளைக்கதைகளைக் கம்பன் பயன்படுத்தும் இடங்களில் ஊடலும் இழையாடுகின்றன.

**'கேள், இது நீயும்காண, இளர்த்தகோள் அரியின் கேழ்இல்**

**தோளொடு தாளும் நீக்கி, நின்னையும் துணித்து, பின்என்**

**வாளினைத் தொழுவது அல்லால், வணங்குதல் மகளிர் ஊடல்**

**நாளினம் உளதோ? என்னா, அண்டங்கள் நடுங்க நக்கான்'**

கம்பராமாணத்தில் அவதாரங்களைப் பற்றிப் பேசுகிறான் கம்பன். "இரணிய வதத்திலே இரணியனை அவன் மகன் இப்போதாவது இறைவனை வணங்கிவிடு என்கிறான். அதற்கு இரணியன் 'நீ பார்க்க இந்த தூணில் இருந்து தோன்றிய இந்த கோன் (அரி) சிங்கத்தினுடைய தோள், தாள் இரண்டையும் நீக்கி, உன்னையும் கொன்று பின் என் வாளினைத் தொழுவது அல்லால், இது இரண்டையும் சாதித்து என் வாளைத் தொழுபனே அல்லால், ஊடல் காலத்தில் கூட நான் மகளிரை

வணங்குவது என்பது இல்லை என்கிறான். இராவணன் முடி படி நெடிதின் வைத்தான். பாவம் அந்த பத்து தலையும் இருபது திண்தோளையும் தரையிலே வைத்து சாஷ்டாங்கமாக எட்டு அங்கமும் தரையில்பட சீதைக்கு முன்னால் விழுந்து பணிய எனக்கு ஒரு மதுர வாசகம் சொல்லு. எப்பொழுது ஏழைக்கு இரங்குவது என்று கேட்டான் என்பான் கம்பன்.

அவ்வளவு பெரிய இராவணன், நாரதர்கேற்ப நயம்பட உரைத்த நா, சங்கரன் கொடுத்த வாள், இவ்வளவு வரபலம், இத்தனையும் உடைய இராவணன், ஈஸ்வரன் என்று பெயர் பெற்றவன், சீதைக்கு முன்னாலே விழுந்து வணங்குகிறான். அந்தப் பெண்ணைச் சம்மதிக்க வைப்பதற்காக. நம்முடைய மரபே சங்ககால மரபு. தொல்காப்பியம் காலத்திலே இருந்து, ஊடல் காலத்தில் கிழவோன் பணிவும், மகளிர் உயர்வும் என்று சொல்லுகிறது. கிழவோன் பணிய வேண்டும். மகளிர் அதற்கு மேலாக இருக்க வேண்டும். அவர்களிடத்திலே பணிவது தான் இயற்கை என்று சொல்லுகிறது. மனைவியிடம் கூட - அந்தக் காலத்தில் கூட - ஊடல் காலத்திலே கூட நான் பணிவது இல்லை. நான் வணங்குவது இல்லை. நான் வணங்காதவன். அப்படிப்பட்ட என்னைப் போய் இவனை வணங்கு என்று சொல்லுகிறாய். இவனைக் கொனையாவேன் என்கிறான் இரணியன்"[59] என்பர் பழ. பழனியப்பன். வீரத்தைவிட ஒரு பெண்ணின் ஊடல் பெரிதாகக் காட்டப்பட்டுள்ளது. ஆண்கள் பெண்களை அடிமை கொண்டதற்குப் பதிலாகப் பெண்கள் ஆடவரை இறுதியில் வெற்றி கொண்டதன் அடையாளமாகக் காணப்படுகிறது.

**சீதையின் ஊடல்**

அறிவும், உணர்வும் இயற்கையாக அமைந்த பண்புகளாகும். அறிவே இல்லாதவரையும் உணர்வு அற்றவரையும் உலகத்தில் காணமுடியாது. சிலர் அறிவிலும் உணர்விலும் ஓங்கியிருப்பர். அத்தகைய தன்மையுடையவளாக சீதையைக் கம்பர் படைத்துள்ளார். இன்று அசோகவனத்திலே இருப்பதற்குக் காரணம் எதுவென்று அவளின் உள்மனம் அசைபோடுகிறது. "வாழ்வில் விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் நிகழும் போதும், விருப்பங்கள் முறிவுற்று உள்ளப் போராட்டம் மிகும் போதும் உள்ளம் தன்னையறியாமல், இறந்த காலத்தின் இயல்பிற்குச் சென்றுவிடுகிறது. இத்தகைய நிலையைப் பின்னோக்கம் என்பர்."(60) சீதை பிரிவுத் துன்பத்தில் வருந்தும் போது, இராமனோடு மனம் மகிழ்ந்து பேசிய செய்திகளை அனுமனுக்குக் கூறுகிறாள்.

**'இந்தஇப் பிறவிக் கிரு மாதரைச்**
**சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்**
**தந்தவார்த்தை திருச்செவி சாற்றுவாய்'**

என அனுமனிடம் கூறுகிறாள். 'திருச்செவி சாற்றுவாய்' என்பதினால் இதை யாரும் அறியாமல் அவன் காதிலே போய்ச் சொல் என்கிறாள். ஏனெனில் கணவன் மனைவிக்கிடையே நடக்கும் உள்ளப் போராட்டமானது வேறொருவருக்கும் தெரிதல் கூடாது என்பதினாலே இவ்வாறு கூறுகிறாள். காதல் வாழ்வில் எத்தனையோ உரையாடல் நிகழ்ந்திருக்கும். இருப்பினும் 'இந்த இப்பிறவிக்கிரு மாதரை' என்பதினால், அன்று சூர்ப்பனகையிடம்

தனித்திருந்து பேசிய இராமனை அவள் முழுமையாக நம்பவில்லையோ எனத் தோன்றுகிறது. அதனால் ஏற்பட்ட ஊடல் அவள் உள்ளத்தைத் துளைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். "இந்தஇப் பிறவிக்கிரு... என அநுமனிடம் சீதை கூறியதன்கண் தோன்றும் மனப்பான்மை என்ன? அவனைத் தனக்குப் பின் மற்றொருவர் நுகரப் பொறாமை யன்றோ! அன்பின் மிகுதி, அறிவைக் கெடுக்கும்; பூசல் விளைவிக்கும்; கூடல் வேண்டிய இடத்தில் ஊடல் தரும்; அதனால் நாணும் நாடலும் மிகைபடச் செய்யும். ஊடலின் அடிப்படை பரத்தைமையா அன்பின் அறியாமையா? யாது சொல்வது?

**'வளைபயில முன்கைஓர் மயிலனாள் தனக்கு**
**இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்**
**முளைஎயி றிலங்கிட முறுவல் வந்தது**
**களகள உதிர்ந்தது களைக்கண் ஆலியே'**

என்ற கம்ப நாடர் வாக்கு ஊடலின் சிறப்பையும், அதன் அடிப்படை எத்துணை உண்மைப் பொருள் கொண்டுள்ளது என்பதையும் நன்கு விளக்கும்"(61) என்பர். ஊடல் தோன்றுவதற்குப் பரத்தைமை காரணமாகத் தான் அமைய வேண்டும் என்பதில்லை. ஒருத்தர் மீதுள்ள அதீத அன்பே ஊடலின் காரணமாகும். இதனை,

**'தரைமகளும் தன்கொழுநன் உடலந் தன்னைத்**
**தாங்காமல் தன்கரத்தால் தாங்கி, விண்ணாட்டு**
**அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்**
**ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்'**

என்று சயங்கொண்டார் கலிங்கத்துப்பரணியில், போர்க்களத்தில் வேல்பட்டுத் துடித்துத் தரையில் விழும் முன்னர் அவ்வீரர்களை மண்மகள் தாங்குவதற்கு முன் தாங்கிக் கொள்வாள். அவ்வீரர்களின் உயிர் பிரிந்து விண்ணிலுள்ள மகளிர் அவ்வுயிரைக் கைப்பற்றுவதற்கு முன் இவர்கள் உயிரை விட்டு விண்ணுலகம் சென்று தலைவனின் உயிரைக் கைப்பிடிக்கும் பெண்களைக் காணுங்கள் எனப் பெண்களின் மனப்பான்மையை நன்கு விளக்குகின்றார். இத்தகைய இயல்புடையவர்கள் ஊடுவது வியப்பில்லை எனலாம். பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில் ஓர் அர்த்தம் இருந்ததாகவே காணப்படுகிறது.

***காதா சப்தசதி***

காதா சப்த சதி பிராகிருத மொழிப் பேரிலக்கியமாகும். இது ஒரு மொழிப் பெயர்ப்பு நூலாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஆந்திர நாட்டை ஆண்ட மன்னன் சாதவாஹனனால் தொகுப்பட்ட அகப் பொருள் இலக்கியமாகும். 'ஆந்திரநாட்டு அகநானூறு' என்று அழைக்கப்படுகிறது.

தலைவன் தலைவியரின் அகவாழ்வைச் சித்திரிக்கும் காதற் சுவை மிகுந்த நூல். மனித மனத்தின் ஆழத்தைத் துருவிக் கண்டெடுத்த ஆணிமுத்துக்களான கவிதைகளையுடையது. "தலைவன் தலைவியரின் ஆசாபாசங்கள், கோபதாபங்கள், பீறிட்டெழும் அடக்கப்பட்ட உணர்ச்சிகள், இதய வேட்கைகள், சமுதாயச் சட்டதிட்டங்களை மீறி வெளிப்படும் சுதந்திர உணர்வு, சமூகப் பழக்க வழக்கங்களால் நசுக்கப்பட்ட உள்மன

உணர்வுகளின் உந்துதல்கள், இதயக் குமுறல்கள் எல்லாம் இக்கவிதைகளில் வெளிப்படுகின்றன"[62] என்பர் மு.கு.ஜகந்நாதராஜா.

"காதலின் பல நிலைகள், அனுபவங்கள், மர்மங்கள் இந்த காதாவைத் தவிர வேறு எந்த இலக்கிய நூலிலும் இல்லை எனத் திண்ணமாகக் கூறலாம். தமிழ் அகச்சுவை இலக்கணம் புறக்கணித்த பெருந்திணைப் பாற்படும் பொருந்தாக் காமச் சுவையும் இதில் ஊடுருவி உள்ளது"[63] என்பர் த.நா.குமாரஸ்வாமி. "காதா சப்தசதியின் பாடல்கள் தமிழ்ச் சங்க அக இலக்கியப் பாடல்களை ஒத்திருக்கின்றன. சப்தசதியை 'ஆந்திரச் சங்க அக இலக்கியம்' எனக் குறிப்பிடலாம். தமிழ்ச் சங்க காலத்தை ஒட்டி அதே போக்கில் அதே கருத்துக்களைக் கொண்டு அதே முறையில் ஆந்திர நாட்டில் ஒரு தொகுப்பு நூல் உருவாகியுள்ளது. இவ்விரு நாட்டு மக்களின் அடிப்படைப் பண்பொற்றுமைகளைக் காட்டுகிறது"[64] என்பர் சிலம்பொலி சு.செல்லப்பன்.

சங்க இலக்கியப் பாடல்களில் கூட்டுக். குடும்ப வாழ்க்கை பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை. ஆனால் காதா சப்த சதியில் பல பாடல்கள் கூட்டுக் குடும்ப வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன. தமிழ் அக இலக்கியங்கள் உயர்ந்த ஒழுகலாறுகளை மட்டும் இயம்புவன. கணவனிருக்க அயல் ஆடவனோடு தொடர்பு கொள்ளும் கேடுகளை காதா சப்த சதி எடுத்துரைக்கிறது. மு.கு.ஜகந்நாதராஜா இந்நூலை மொழிபெயர்த்துள்ளார்.

கடவுள் வாழ்த்துப் பகுதியே ஊடலோடு தொடங்குகிறது. காலையில் சிவபெருமான் சந்தியாவந்தனம் செய்ய அங்கையில் (உள்ளங்கை) நீர்

கொண்டான். அருகிலிருந்த மலைமகள் தன்னைக் கவனிக்காமல் கையிலுள்ள கங்கை(நீர்)யைத் தியானிப்பதாகப் புலவி கொண்டாள். மலைமகளின் புலவி சிவனுக்கு மகிழ்ச்சி தந்தது போல் நீயும் இன்புறுக என்று தோழி கூறியதாக உரையாசிரியர் கூறுகிறார்.

**தோழி கூற்று**

> **'முகமதி யத்தை முழுதும் திருப்பி**
> **ஏனழு கின்றாய்? இளம்வெள் ளரிக்கொடிக்**
> **கொழுந்து போன்ற குடில முடைத்தே**
> **காதல் வழியும்! காரிகை! கவலேல்'**

(காதா சப்தசதி: 9: அனீகன் (1-10)

என்று தோழி கூறுகிறாள். தலைவி புலவி கூர்ந்திருந்தாள். தோழி தேற்றுவிக்க, மதிமுகந்திருப்பி தலைவனின் கொடுமை நினைந்து ஏன் அழுகிறாய்? புலவி தீர்ந்து சமாதானம் உறுக. ஏனென்றால் காதல் வேட்கைகள் வெள்ளரிக் கொடியின் கொழுந்து போல நேர்மையற்ற வழியில் சுற்றித்திரியும் இயல்பினது. கொழுந்து கிடைத்ததைப் பற்றிக் கொள்ளும். அதைத் தடுப்பின் முறிந்துவிடும். அதுபோல காதலன் புலவியினால் நீங்கியிருப்பின் அவன் உள்ளமும் உனது தடையால் முறிவதும் வேறொரு பெண்ணின் தொடர்பால் பற்றுக் கோடாகப் படர்வதும் ஆகிவிடும். ஆதலின் நீ புலவி தவிர்வதே கடனாம் என்றுரைக்கிறார்.

தலைவி தலைவன்பால் ஊடல் கூர்ந்தாள்! தலைவன் வரும்போது வாயில் மறுத்தாள். அதுகண்டு தோழி கூறிய கூற்று. காதலன் மீது கடுஞ்சினங் கொண்டு ஊடல் தளர்த்தாமல் உறுதியாக இருந்தாள். ஆனாலும் அவ்வூடல் நிலைக்குமா? குறுமணலை இறுக்கமாகப் பிடிக்கப் பிடிக்க மணல் தளர்ந்து சிந்திவிடும் அல்லவா? அதுபோலத்தான் இவள் ஊடலுறுதியும்கூட முடிவில் பையப்பயத் தளர்ந்துவிடும் என்று தோழி கூறுகிறாள். இதனை,

**'காதலன் மீதே கடுஞ்சினத் தாலே**

**ஊடல் கூர்ந்தோள் உறுதி மிகினும்**

**பையப்பயத் தளர்ந்து பாழா கிடுமே**

**கைப்பிடி யிறுக்கிய குறுமண லொத்தே'**

(காதா சப்தசதி: 66: பாலிதகன்(1-74)

என்ற பாடலடிகளின் மூலம் 'வெற்று ஊடல் கொள்வதில் யாதொரு பயனுமில்லை' என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

**தலைவி கூற்று**

சங்ககால மக்கள் சடங்குமுறைகளை நடைமுறைப்படுத்தி வந்துள்ளனர் என்பது அவர்களின் சடங்குமுறைகளிலிருந்து அறிகிறோம்.

**'பூப்பின் புறப்பா டீராறு நாளும்**

**நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்'** (தொல்.பொருள்.கற்பு.46)

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கேற்ப, பூப்புத் தோன்றிய நாள் முதலாகத் தலைவன் கூடி உறைதல் தொன்மை வழக்கமாக இருந்திருந்திருக்கிறது.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், 'பூப்பினது புறம்பு பன்னிரண்டு நாளும் விட்டு அகன்றுறைவா ரல்லர்' எனப் பொருள் கொள்வர். 'பூப்புத் தோன்றிய மூன்று நாளும் கூட்டமின்றி அணுகவிருந்து அதன் பின்னர்ப் பன்னிரண்டு நாளும் கூடியுறைய என்பதாம்' என்று நச்சினார்க்கினியர் பொருளுரைப்பர். இதனை, 'புறப்பெண்டிர் மாட்டுப் பிரிந்த தலைமகன், கிழத்தி பூப்புப் புறப்பட்ட நாண்முதற் பன்னிரு நாளும் நீத்தும் அகன்றும் உறைதல் அறநெறி யன்று' இறையனார் அகப்பொருளுக்கு (கற்.43) உரைகண்ட நக்கீரர் உரைப்பர். "பூப்புக் காலத்தில் உறவு கொள்ள வேண்டும் என்ற சிந்தனை புராதனக் குழுச் சமூகத்துச் சிந்தனை ஆகும்"(65) என்பர். "குருதி என்பது உயிராகும் என்ற நம்பிக்கை புராதன மனிதச் சமூகத்தில் நிலவி இருந்த போதுதான் பூப்புக் காலத்தில் உறவு கொள்ள வேண்டும் என்ற எண்ணம் எழுந்திருக்க வேண்டும். பூப்புக்காலத்தில் வரும் குருதிக் கசிவு, ஒரு பெண் உயிரை உண்டாக்கும் நிலையினள் என்பதை உணர்த்தியிருக்க வேண்டும். அக்குருதிக் கசிவு உயிர்ப்பொருள் ஆதலின் அச்சமயத்தில் உறவு கொள்வது மூலம் மகப்பேறு கிட்டும் என்று நம்பப்பட்டிருக்க வேண்டும். இத்தகு நம்பிக்கை மிகப் புராதனச் சமூகத்தைச் சேர்ந்தது"(66.) என்பர். பூப்பாகும் காலத்தை ஒருவிதச் சடங்காகவே நடத்தி, அதற்கென்று சில விதிகளையும் அமைத்திருக்கின்றனர் என்பது புலனாகும்.

தலைவியின் பூப்புக்குளிப்பான நாளில் தலைவன் அவளைப் பிரியாதிருத்தல் வேண்டும் என்பது சமுதாய விதியாக முன்னாளில் கருதப்பட்டதைக் காதா சப்த சதி,

**‘இனியர் பிரிவும் இசையார் புணர்வும்**

**ஆயஇரண்டும் அல்லல் நரினும்**

**நின்னை உய்த்த நெறிமிகும் குலத்தின்**

**வழக்காற், றினையே வணங்கு கின்றேன்’**

(காதா சப்தசதி: 22: பிரம்மசாரி(1-24)

என்று கூறுகிறது. தலைவி தலைவனை நோக்கி, இனியர் ஆகிய காதலியைப் பிரிதல், இசையார் ஆகிய எம்மைச் சேர்தல் இரண்டுமே உனக்குப் பிடிக்காதவை; துயரம் தருபவைதான். ஆனாலும் இசையாத என்னிடம் வருமாறு செய்தது நமது குல வழக்காறே. பூப்புக்காலத்தில் பிரியக் கூடாது என்ற நம் வழக்காற்றினால் தான் நீ இங்கு வந்தாய் என்று புலந்து கூறுகிறாள்.

ஊடல் கொண்ட தலைவியிடம் ஊடல் உணர்த்திய தலைவன் வாய் தவறி, தான் கலந்தின்புற்றுவந்த காமக்கிழத்தியின் பெயரைக் கூறிவிட்டான். அதனால் தலைவி உன் மனத்திலுள்ளதே கூறினாய் என்று புலந்து கூறுகிறாள். இதனை,

**‘இத்துணைநற் குணம் எவருக் குளதே**

**உன்னையன்றி ஒருவரைக் காணேன்**

**இன்றுளர் எல்லாம் இதயத் தொன்றும்**

**வாயி லொன்றுமாய் வழங்குகின்றாரே’**

(காதா சப்தசதி: 22: போஜயன்(1-32)

என்று கூறுகிறது.

**ஊடல் தீர்தல்**

**'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்**

**நினையுங் காலைப் புலவியுள் உரிய'** (தொல்.பொருள்.பொருளி.33)

என்ற தொல்காப்பிய நூற்பாவின்படி, தலைவியின் பூப்போன்ற பாதங்களில் தலைவன் வீழ்ந்து வணங்கினான். அங்கிருந்த அவன் புதல்வனாகிய சிறுவன் தந்தையின் முதுகில் ஏறி விளையாடுகிறான். அதைக்கண்ட தலைவி தலைவன் நிலையை நினைத்த குறுநகை கொண்டு புலவி தீர்த்தாள்.

**'போதடி வீழ்ந்த காதலன் முதுகின்**
**மீதமர் புதல்வன் மிடுக்குட னாட**
**புலவி கூர்ந்த பொற்கொடி மங்கை**
**சினம்பெரி தேனும் மனம்மா றிடவே**
**முகத்தில் முறுவல் முளைத்த தம்மா'**

(காதா சப்தசதி: 10: சிரிராயன்(1-11)

என்று காதா சப்த சதி விளக்குகிறது.

**பரத்தை கூற்று**

**'முற்றும் அணிந்து முடிய வில்லை**
**எனினும் விரைந்தே ஏகுக குழந்தாய்**
**வேட்கை வெம்மை விரைவகன் றிடினே**
**மீண்டும் அவனுளம் மேவுத லரிதே'**

(காதா சப்தசதி: 22: கலிராயன்(1-21)

மகளே! அணிகள் அணிவதிலேயே நேரங் கடத்திவிடாதே. காதல்

வேட்கை வெம்மை குறையின் தலைவன் உன்னை அலட்சியப்படுத்த நேரிடலாம். ஆதலின் விரைந்து செல்க! உன் அழகுக்கு இப்போதுள்ள அணிகளே போதும் என்கிறாள். தாயே தன் மகளைப் பரத்தையாகச் செயல்படும்படி உரைப்பதை அறியமுடிகிறது.

பரத்தையர் அல்லாத பொதுமகளிரும் பரத்தையாகச் செயல்பட்டதைக் காதா சப்தசதி குறிப்பிடுகிறது.

**'இங்கே துயில்வாள் எனது மாமி**
**இங்கே யானே இங்கே சுற்றம்**
**பயணி இரவில் பார்வை யிலாதோய்**
**என்படுக் கையிலே வீழ்ந்திடல் வேண்டா'**

(காதா சப்தசதி: 490)

பிரிந்துறையும் தலைவியவள்; அவள் வீட்டில் வழிப்போக்கன் விருந்தாளியாகத் தங்கியிருந்தான். அவனுக்குத் தன் வீட்டில் இரவில் தங்குமிடம் காட்டும் தலைவி கூறுகிறாள். இவ்விடத்தில் எனது மாமி துயில்வாள்; இங்கே சுற்றத்தாரெல்லாம் துயில்வார்கள். வழிப்போக்கனே, இருட்டில் கண் தெரியாமல் என் படுக்கையில் வீழ்ந்து தொலையாதே என்று கூறுகிறாள்.

அவள் வாய்ச் சொற்கள் இங்கு வராதே என்று கூறினாலும் உளக் குறிப்பு இங்கே நான் படுத்திருப்பேன் அங்கே பிறர் படுத்திருப்பர், காமந்தகாரனாகிய நீ கண் தெரியாமல் அவர்களிடத்தில் கால் இடறி வீழ்ந்து காரியத்தைக் கெடுத்துக் கொள்ளாதே; அவர்கட்கு விழிப்பை யூட்டி விடாதே. நீ விழிப்புடன் என் படுக்கைக்கே வந்து சேர். என்

மாமி எல்லோரும் நன்கு துயின்று விடுவர் என்ற தொனிப் பொருள் அமையக் கூறுகிறாள். இத்தகைய அறக்கழிவுப் பாடல்களும் சங்க இலக்கியத்தை ஒத்த காலத்தில் அமைந்த பாடல்களில் காணலாகிறது.

ஒரு பாடலைப் படித்ததும் அதன் முழுப்பொருள் உணர்தலரிதே. உரையாசிரியர்கள் யார் கூற்று என்றும், யாரிடம் கூறியது என்று அப்பாடலின் கருப்பொருள் என்ன என்றும் கூறியுள்ளனர். செல்வச் செழிப்பை மட்டும் காட்டாமல் வறுமையில் வாடும் மக்களையும் எடுத்துக்காட்டுகிறது. "இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு நமது மக்களின் வாழ்க்கை நிலைகளைத் தெள்ளத் தெளிவாக, பிரத்தியட்ச நோக்குடன் காட்டும் வரலாற்றுப் பதிவாக விளங்கும் ஒரே நூல் இதுவே."(67) என்பர். கற்புக்கரசிகள் மட்டுமின்றி கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் பெண்களும் இந்நூலில் காணப்படுகின்றனர். பரத்தையரும் உண்டு. கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் மங்கையரைப் பற்றித் தமிழ் இலக்கியங்களில் குறிப்பில்லை என்பது பெறப்படுகிறது.

***சிற்றிலக்கியங்கள்***

***முத்தொள்ளாயிரம்***

சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஒவ்வொருவரையும் தொள்ளாயிரம் வெண்பாக்களில் புகழ்ந்து பாடும் பழந்தமிழ் நூல் முத்தொள்ளாயிரம். சங்க இலக்கியம் அகம், புறம் கொண்டு, காதலையும் வீரத்தையும் பாடுபொருளாகக் கொண்டவை. அக இலக்கியம், புற இலக்கியம் என இரு கூறாக இயங்குவன. "முத்தொள்ளாயிரம் காதலும்

வீரமும் கலந்திருக்கும் கவிதைப் பெட்டகமாகத் திகழ்கின்றது. முத்தொள்ளாயிரப் பாடல்களில் கைக்கிளையில் அமைந்த பாடல்கள் மூவேந்தர்களையும் பாராட்ட எழுந்தனவே; இவை சிறந்த காதற் பாடல்களாக விளக்கப்படினும், பாடாண், கைக்கிளை என்றே கூறத்தக்கன. உண்மையில் வேந்தர்களைப் பாராட்டிக் கூற எழுந்தன என்றே கூற வேண்டும்"(68) என்பர் அருணாசலம்.

**கண்டறியாக் காதலன்**

வாழ்வின் நிகழ்வுகளை ஏற்க இயலாத சூழலில் உள்ளம் தன்னியல்பாக ஒரு கற்பனை விளையாட்டில் ஈடுபடுகிறது. உலகையும் வாழ்வையும் தன் உள்ளம் விரும்புமாறு படைத்துக் கொண்டு, மனம் தன் போக்கில் மகிழ்கிறது. வாழ்வில் பெற இயலாத தேவைகளைக் கற்பனை செய்து, மன நிறைவு கொள்ளுதல் உள்ளப் போக்கின் அடிப்படையாகும். அவள் அவனைக் காதலித்தாளாம்; கற்பனையில் திருமணமும் செய்து கொண்டாளாம்; ஆனால் அவனைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லையாம்; யார் அவள்? இளமையின் வாசலிலே நின்றிருக்கும் இளநங்கை. வளமிக்க சோழநாட்டை ஆண்டுவரும் கிள்ளி வளவனுக்கும் அவளுக்கும் காதல் திருமணம்; கற்பனையில் நடந்த திருமணம் அது! அன்போடு அணைக்க வந்தான்! அவள் அயல் நின்று ஊடி நின்றாள். பிணங்கி நின்றாள். அணைக்க வந்தவனைக் காண முடியவில்லை.

ஊடலை நீக்கினான் அந்த உலகாளும் மன்னன். காற்றிடைப்படாது கட்டித் தழுவினான். நாணோடு உடன் பிறந்தவள் நாணத்தால் முகம்

புதைத்தாள். நாயகனின் முகம் பார்க்க இயலாது நிலம் பார்த்துத் தவித்தாள். இதனை,

**'புலவிப் புறக்கொடுப்பன் புல்லிடின் நாணநிற்பன்**
**கலவி களிமயங்கிக் காணேன்; நிலவியசீர்**
**மண்ஆளும் செங்கோல் வளவனையான் இதன்றோ**
**கண்ணாரக் கண்டறியா ஆறு'** (முத்தொள். 43)

என்று பாடலடிகள் குறிக்கின்றன. தோழி! கிள்ளி வளவன் மீது ஊடல் கொண்டக்கால் அவனை நேருக்கு நேராக நோக்காது புறங்காட்டி நின்றேன். அவன் என்னைத் தழுவுங்கால் அவனை நேருக்கு நேர் பார்க்க வெட்கமடைந்து முகம் தாழ்த்தி நின்றேன். அவனோடு கூடி மகிழுங்கால் கலவி மயக்கத்தில் கண்மூடி இருந்ததால் அவனைக் காணாது இருந்தேன். இவ்வுலகையே ஆட்சி செய்யும் கிள்ளி வளவனை நான் நேருக்கு நேராகக் கண்டறியாத காரணம் இது தான் என்கிறாள்.

புலத்தல் நடந்தது, கூடலும் நடந்தது. புலத்தல், புல்லுதல், கலத்தல் அனைத்துமே அவளை அவனது முகம் பார்க்க விடாமல் தடுத்தன. ஊடலும், தழுவுதலும், கூடலும் கலவிக் களிப்பின் கூறுபாடுகள் தான்.

**கூடலை அழித்த ஊடல்**

பூங்கொடி போன்ற என் தோழியே! நள்ளிரவில் கண்ணயர்ந்து தூங்கினேன். நல்லதொரு கனாக்கண்டேன். நல்ல அழகும் ஆண்மையும் பொருந்திய காளையொருவன் என் அருகில் வரக் கண்டேன். வந்தான்; வந்தவன் இனிய மொழி பேசினான். என் இதயத்தில் இடம் பிடித்தான்.

காதல் மொழி பேசி என் மனத்தைக் கனியச் செய்தான். மலர்ந்தது காதல்; அதில் ஓர் ஊடல்; அவனோடு ஊடி நின்றேன். புலந்து நின்றேன்; சற்றே பிணங்கிச் சென்றேன். ஊடலை நீக்க இன்மொழி பேசினான். ஆனால் ஊடல் தணியவில்லை. உப்புப் போன்று அளவோடு இருக்க வேண்டிய ஊடல் மிக்குற்றுச் சென்றது. ஊடல் நீட்டித்து நின்றதால் கூடல் நிகழவில்லை. பன்மாயக் கள்வனின் பணிமொழி பயன்தரவில்லை. அறியாமையினால் அவன் மீது ஊடலை நீட்டித்தேன். ஊடலைத் தணிக்க முடியாமல் அவன் விலகிச் சென்றான். அந்தோ! அதன் விளைவு! கூடல் நிகழவில்லை. வாடித் தவித்தேன் யான். அவன் மீண்டும் கனவில் வருவானோ? என் ஊடலை நீக்குவானோ? கூடி மகிழ்வானோ? என்று தலைவியின் ஏக்கத்தை,

**'ஊடல் எனஒன்று தோன்றி அலரு றூஉம்**
**கூடல் இழந்தேன் கொடி அன்னாய் நீள்தெங்கின்**
**பாளையில் தேன் தொடுக்கும் பாய்புனல் நீர்நாட்டுக்**
**காளையைக் கண்படையுள் பெற்று'** (முத்தொள். 47)

என்று முத்தொள்ளாயிரம் ஊடலை வருணிக்கின்றது. மற்றொரு பாடல், நகரத்திலுள்ள அனைத்து இல்லங்களிலும் ஊடல் நடைபெறுவதாக அமைகிறது. இதனை,

**'மைந்தரோடு ஊடி மகளிர் தமிர்ந்திட்ட**
**குங்கும ஈர்ஞ்சாந்தின் சேறிழுக்கி எங்கும்**
**நடுமாறல் ஆகிய தன்மைத்தே தென்னன்**
**நெடுமாடக் கூடல் அகம்'** (முத்தொள். 59)

பாண்டிய நாட்டிலே வசிக்கும் ஆடவரோடு மகளிர் ஊடல் கொள்கின்றனர். அவ்வாறு ஊடல் கொண்ட பெண்டிர் தமது மார்பில் பூசியுள்ள குங்குமம், சந்தனத்தை வழித்துக் காலதர் (சன்னல்) வழியே தெருக்களில் வீசி எறிவர். அவ்வாறு எறியப்பட்ட மணமுள்ள சாந்து தெருவெங்கும் பரவிக் கிடக்கின்றன. இந்நிகழ்ச்சி ஒரு வீட்டில் மட்டும் நிகழவில்லை. பல வீடுகளிலும் நிகழ்கிறது. அதனால் தெருக்களில் போவோர் சாந்தில் வழுக்கி விழும் அளவிற்கு இருக்கிறது என்று முத்தொள்ளாயிரம் ஊடலின் சிறப்பை எடுத்தோதுகிறது.

*முக்கூடற்பள்ளு*

தமிழ் இலக்கிய உலகில் காலந்தோறும் பல்வேறு இலக்கிய வகைகள் தோன்றி வளர்ந்து செழித்திருக்கின்றன. அத்தகைய இலக்கியங்களில் சிற்றிலக்கியங்களுக்குச் சிறப்பிடம் உண்டு. சங்க காலத்தில் படைக்கப்பட்ட இலக்கியங்கள், அதனை அடுத்து வந்த இலக்கியங்கள் பலவும் பெரும்பான்மை புலமை இலக்கியங்களாகத் திகழ்கின்றன. விளிம்புநிலை மக்களைப் பற்றிப் பாடப்பெற்ற இலக்கியம் பள்ளு ஆகும். பள்ளு இலக்கியங்கள், உழவர்களின் வாழ்வியல் நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறும் சிறப்பினவாகத் திகழ்கின்றன.

பரம்பரையாகப் பள்ளன் ஒருவன் பண்ணை ஒன்றில் பண்ணைத் தொழில் செய்து வருகிறான். அவனுக்கு இரண்டு மனைவியர்கள் உண்டு. அவர்கள் மூத்தபள்ளி, இளையபள்ளி எனப்படுகின்றனர். இளைய பள்ளியின் எழிலில் ஈடுபட்டிருக்கும் பள்ளன் மூத்தபள்ளியைக்

கண்டுகொள்ளாமல் இருக்கிறான். இத்தகைய சூழ்நிலையில் கார்காலம் தொடங்கி மழை பெய்ய, ஆற்றில் வெள்ளம் வருகிறது. பள்ளனின் நடவடிக்கையில் வெறுப்புற்ற மூத்தபள்ளி பண்ணைக்காரனிடம் சென்று பள்ளன் வேலையை மறந்து இளையபள்ளியின் வீட்டில் குடியிருக்கிறான் என்று குறைகூறுகிறாள். பண்ணைக்காரன் இளையபள்ளியின் மேல் கோபம் கொள்ளுகிறான். தண்டனைக்காளாகும் பள்ளனை மூத்தபள்ளி விடுவிக்கிறாள். அறுவடை நேரத்தில் இளையபள்ளிக்கு அதிகமாக நெல் அளக்கும் பள்ளனிடம் மூத்தபள்ளி சண்டையிடுகிறாள். அதனைத் தொடர்ந்து பள்ளியர்கள் இருவரும் தங்களுக்குள் சண்டையிடுகின்றனர். இறுதியில் இருவரும் சமாதானம் அடைந்து பாட்டுடைத்தலைவனை வாழ்த்திப்பாடிப் பள்ளனோடு ஒற்றுமையாக வாழ்க்கை நடத்துகின்றனர்.

***'முண்டைமுறை யிட்ட தென்ன***
***முக்கூடற் பள்ளி - உங்கள்***
***மூப்புச் சொம் மெனக்குத் தந்தால்***
***முதலியடி***
***தொண்டை கட்டக் கூப்பிடாதே***
***கூப்பிட்டென்னை - வைது***
***சொன்ன பேச்சைப் பண்ணையார்க்குச்***
***சொல்லுவேனடி'*** (முக்கூடற்பள்ளு, 152)

என்று முக்கூடற்பள்ளு இருவரின் பூசலை விளக்குகிறது. அறிவற்ற முக்கூடற்பள்ளி குறை சொல்லுகிறாயா? உங்கள் மரபு வழிச் சொத்தைப் பள்ளன் எனக்குக் கொடுத்தது உண்மை என்கிறாய். அதை நிரூபித்துக் காட்டு. சும்மா தொண்டைகட்ட என்னைக் கூப்பிட்டுக் கத்தி வையாதே.

வைதால் நீ பேசிய பேச்சுக்களைப் பண்ணையாரிடம் சொல்லிவிடுவேன் என இளையபள்ளி மூத்தபள்ளியிடம் சண்டையிடுகிறாள்.

பள்ளு இலக்கியத்தில் இருமனைவியரிடையே உண்டாகும் பூசலை வெளிக்காட்டும் வகையில் மூத்தபள்ளி, இளையபள்ளியின் ஊடல் பாடல்கள் அமைந்துள்ளன. இரண்டு மனைவியரிடையே ஏற்படும் சிக்கல்கள் காலந்தோறும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்பது பெறப்படுகிறது.

**தஞ்சைவாணன் கோவை**

சிற்றிலக்கிய வகைகளில் கோவை பாடல்களும் ஒன்று. சிற்றின்பச் சுவையுடன் அமைக்கப்பட்டுள்ளன. களவும் காமமும் மிகுதியாகக் காணப்படுகின்றன. தஞ்சைவாணன் கோவை,

**'என்பாற் குறையை நினைந்து மறாதெதிர் கொள்ளவல்லே**
**தன்பாற் புலவி தணிசென்று நீ தஞ்சை வாணன்வைய**
**மன்பாற் பரவும் புகழுடை யானரு ளேயனையா**
**யுன்பாற் புலவி யுறாள்வண்ண வார்குழ லொண்ணுதலே'**

(தஞ்சைவாணன்கோவை, 388)

என்று உணர்த்த உணரா ஊடலைக் குறிப்பிடுகின்றது. உணர்த்த உணரும் ஊடலை (த.கோ.377) விளக்குகிறது.

**தற்கால இலக்கியங்கள்**

காலங்காலமாய் செய்யுள் வடிவிலேயே செய்திகள் சொல்லி வந்த இலக்கியம், தற்போது உரைநடை வடிவத்தைப் பெற்றிருக்கிறது. கதை

கேட்பதும், கதை சொல்வதும் தமிழர்களுக்குப் புதியதல்ல. ஆயினும் இலக்கிய வடிவில் அவை மாற்றம் பெற்றுள்ளன. இலக்கணம் இல்லாச் சுதந்திரத்தோடும், உணர்விலிருந்து எழுந்த உணர்ச்சி வேகத்தோடும் புறப்பட்ட புதினங்களும் சிறுகதைகளும் விளிம்பு நிலை மக்களையும் அவர்களது வாழ்க்கை நிலைகளையும் விவரிக்கின்றன.

தமிழ்ப் படைப்பாளர்கள் அண்மைக் காலத்தில் செவ்விய முறைகளில் இயங்கி வருகிறார்கள். அவர்களின் படைப்புக்கள் தமிழ்ச் சமூகத்தில் நல்ல பாதிப்புகளை வழங்கி வருகின்றன.

மனிதன் தனது உணர்ச்சிகளையும் ஆசைகளையும் கட்டுப்படுத்திக் கொண்டு பிறருடைய உணர்ச்சிகளையும் புரிந்து கொள்ள முயன்ற பொழுது சமுதாயம் தோன்றுகிறது என்பர். பிறர்க்காக வாழும் பொழுது கூடி வாழ்தல் என்கிற குழு உணர்வு இடம்பெற்றுள்ளது. குழு வாழ்க்கையில் கட்டுப்பாடுகள், வரன்முறைகள் போன்றவை காலப்போக்கில் உருவாக்கப் பெற்றன.

வரன்முறையற்ற பாலுணர்விலிருந்து விடுபட்டு, வரன்முறையான பாலுறவிற்குள் வாழத்தலைப்பட்டனர். இச்சூழலில் தான் குடும்பம் என்ற அமைப்புத் தோற்றம் பெற்றது. குடும்ப வாழ்க்கை, குழு வாழ்க்கை பல படி நிலைகளில் வளர்ச்சி பெற்று நாகரிகமுள்ள, பண்பாட்டுக்களம் பொருந்திய சமுதாயம் உருவாகியது. "குடும்பம் என்னும் அமைப்பானது ஓர் ஆணும் பெண்ணும் அவர்களது சமுதாய மரபுப்படி மண வாழ்வில் ஈடுபடும் நிலையில் மட்டுமே தோன்ற முடியும். அவ்வாறு இணைந்தால் தான் அச்சமுதாயத்தில் அவர்கள் குடும்பமாக ஏற்றுக்

கொள்ளப்படுவார்கள்"[69]என்பர். குடும்பங்களில் பெண்கள் தங்களை நிலைநிறுத்திக் கொள்வதற்குப் போராட வேண்டிய சூழல் உள்ளது. இதனை, "இருண்ட காலம் கரைய, விடிவெள்ளி முளைத்திருக்கிறது. இந்த வெளிச்சத்தில் பெண் தனக்கிழைக்கப்பட்டிருக்கும் அநீதிகளை உணரத் தொடங்கியிருக்கிறாள். தனக்குரிய மதிப்பைக் கோருகிறாள். அடுக்களைக்கும் படுக்கையறைக்கும் வார்க்கப்படும் அச்சுகளில் புகுந்து கொள்ள மறுக்கிறாள் என்பர் ராஜம் கிருஷ்ணன்."[70]

குடும்பம் சமூகத்தின் இன்றியமையாத அங்கம் எனலாம். மாறிவரும் சமூகச் சூழலுக்கேற்பக் குடும்பத்தின் மதிப்புகளும் மாற்றம் பெறுகின்றன. குடும்ப நிலையில் மரபுகளும், மாற்றங்களும் முரண்படுவது இயல்பெனலாம். முரண்பாட்டில் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும் ஏற்படுவது எதார்த்த நிலையாகும். இந்நிலையைத் தற்கால எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளில் பதிவு செய்துள்ளனர்.

குடும்பத்தை நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பு கணவன் - மனைவி ஆகிய இருவருக்கும் சம அளவில் உண்டு. இந்நிலையை உணராமல் செயல்படுகிற பொழுது சிக்கல் உருவாகுகின்றன.

***மூக்கணாங்கயிறு - புதினம்***

இப்புதினத்தில் நாயகன் மூர்த்தி அதீத பாலியல் ஆர்வம் உடையவனாகக் காணப்படுகிறான். மனைவியின் விருப்பு வெறுப்புகளுக்கு மதிப்புத் தராத இயல்புடையவன். மனைவியைத் தினமும் அனுபவிக்க வேண்டுமென்கிற அவனின் ஆர்வ ஆதிக்கத்திற்கே முதன்மை

கொடுப்பவன். மனைவி மட்டுமல்லாமல் வெளிப் பெண்களுடன் தொடர்புடையவன். இந்நிலை குறித்து மனைவி சந்திரா வினவும் போதெல்லாம் முரட்டுத் தனமாகப் பேசி அடக்கிவிடுவான். சந்திரா குழந்தைகளின் நலத்தினைக் கருத்தில் கொண்டு அடங்கியவளாய்ப் பொறுமையுடன் இருக்கிறாள்.

மூர்த்தி அவனிடம் உதவியாளராக வேலை பார்க்கும் நளினி என்பவளிடம் தொடர்பு கொண்டிருப்பதைச் சந்திரா அறிய, நளினியை அவனுக்கு இரண்டாம்தார மனைவியாக்குகிறாள். மூர்த்தி நளினிக்குக் கட்டும் தாலிக்கயிற்றை மூக்கணாங்கயிறாக மாற்றுகிறாள். "நம்ம சமூகத்தில் இரண்டு பெண்டாட்டிக்காரங்களைக் கவுரவமாக ஏத்துப்பாங்க. ஆனால் நாளுக்கு ஒருத்தியோட திரிகிறவனைக் கண்டிப்பா மதிக்க மாட்டாங்க... அதனால் நானே முன்னிற்று உங்களுக்கு இரண்டாம் திருமணம் செஞ்சு வைச்சேன்"(71) என்று தன் செயலுக்கான விளக்கத்தைக் கணவனிடம் சந்திரா கூறுகிறாள்.

தமிழ்ப்பெண் எதையும் விட்டுக் கொடுக்கும் இயல்பினள். ஆனால் கணவனை மட்டும் பங்குபோட விடமாட்டாள். சந்திரா தன் பிள்ளைகளின் நலத்தைக் கருத்தில் கொண்டு கணவனின் இரண்டாந்தாரத் திருமணம் என்கிற முடிவுக்கு வருகிறாள். "என் பிள்ளைகளுக்குத் தகப்பனாகப் பகலில் மட்டும் வந்து செல்லுங்கள் என்று தன்னை அவனிலிருந்து பிரித்துக் காட்டுகிறார். அப்படி நீங்கள் வராவிட்டால் சமூகம் உங்களைத் தான் ஏசும்"(72) என்கிறாள்.

குழந்தைகளுக்குத் தந்தையாக ‘பகலில் மட்டும்’ வந்து செல்லுங்கள் என்று தன் கற்பையும், தன் மானத்தையும் காப்பாற்றிக் கொள்ளும் பெண்ணாகக் காணப்படுகிறாள். கணவன் வீட்டிற்கு வராமல் இருந்தால் இவளை வாழாவெட்டி என்றோ, இல்லை வேறுவிதமாகவோ ஊர் பேசும் என்பதற்காகத் தனக்குக் கணவனாக வேண்டாம். குழந்தைகளுக்குத் தந்தையாக இருந்தால் போதும் என்ற முற்போக்குச் சிந்தனையுடன் காணப்படுகிறாள். “நளாயினி மாதிரி அடங்கிக் கிடக்கிறவ கூட ஒரு நாள் சீறிக்கிட்டுக் கிளம்பிடுவா....”(73)என்று கூறும் நிலையில் பெண்ணின் பொறுமைக்கும் எல்லை வகுத்துக் காட்டுகிறாள். “இருபத்தைந்து வருடமா எங்கிட்ட அடங்காத உங்களை, நளினி என்ற மூக்கணாங்கயிறு மாட்டி அடக்கிவிட்டேன். இந்தக் கல்யாணம் உங்களுக்கு ஒரு ஆயுள் தண்டனையாகத்தான் போகுது. என் பசங்களோட எதிர்காலத்துக்காக இந்த தண்டனையை உங்களுக்கு நான் கொடுக்கும்படி நீங்க நடந்துகிட்டிங்க... இனி எனக்கு அவதியில்லே... வேதனை இல்லே... ”(74) என்று கூறும் போது அவளின் அடிபட்ட காயங்கள் ஆறுதலடைகின்றன.

***மண்குதிரை***

நிரந்தர வேலையில்லாமல், சரியான உழைப்பும் இல்லாமல் இருக்கும் சிவராமனுக்கு நான்கு சின்னக் குழந்தைகள். மனைவி கல்யாணி உழைத்து குடும்பத்தைக் காப்பாற்றுகிறாள். சிவராமன் மனைவி சுகம் தினம் வேண்டுமென்ற நினைப்பு உடையவன். மனைவி உடல் சோர்ந்த நிலையில் இருந்தாலும் அவளை அடித்துத் துன்புறத்தித் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்வதிலேயே முனைப்பாக இருப்பான். மனைவியின்

விருப்பம் இல்லாமல் அவளுடன் உறவு கொள்ளுதல் கற்பழிப்புக்குச் சமமாகும் என்பர். கணவனின் பொறுப்பற்றத் தன்மையினால் குழந்தைகளும் சீரழிந்து போய்விடுகின்றனர். கல்யாணி தன் கணவனைப் பிரிந்து காசிக்குச் சென்று சமையல் வேலை செய்து தன் வாழ்க்கையை நடத்துகிறாள். தனக்கு உடல் சார்ந்தும், உள்ளம் சார்ந்தும் தீங்கிழைக்கும் கணவனைப் பெண் உதறித்தள்ளவும் தயங்கமாட்டாள் என்பதை நிருபிக்கின்ற விதமாய் இக்கதையினை ஆசிரியர் அமைத்துள்ளார்.

***பாலங்கள்***

இப்புதினத்தில் வரும் சுரேஷ் வித்தியாசமான பாலியல் ஆர்வம் உடையவன். அவன் மனைவி சாருலதா. மற்றவர்கள் மத்தியில் சுரேஷ் நல்லவன் போல இருப்பான். தனிமையில் மனைவியிடம் பழகும் போது மிகவும் கீழ்த்தரமாக இருப்பான். ஆபாசமான புகைப்படங்களை மனைவியிடம் காட்டி, பேசக்கூடாத அருவருக்கத்தக்க வார்த்தைகளைத் தயங்காமல் பேசுவான். வக்கிரமான பாலுணர்வு வெறி, பிறரைத் துன்புறுத்தி இன்பம் அனுபவிக்கும் இயல்பு அவனுள் இயங்கியது.

கர்ப்பமான மனைவி அவனின் விருப்பத்திற்கு இணங்கவில்லை. அதனால் விலைமகளைக் கூட்டி வருகிறான். மனைவி எதிரில் இருக்க, விலைமகளிடம் உறவு கொள்கிறான். பொறுமையின் எல்லையை மனைவி மீறி விவாகரத்து செய்ய முடிவு செய்கிறாள். அவளின் தந்தை இம்முடிவை மாற்றும்படி கூற, “அனுபவிச்சது போதும் திரும்ப அந்த மிருகத்தோட வாழச் சொல்லி என்னை வற்புறுத்தாதீங்கப்பா...”(75) என்று கூறி அழுகிறாள்.

வாழ்க்கைத் துணையாக வந்த பெண்ணிடம் கணவன் மனித குணங்களோடு இயங்குகிற போது இல்லறம் இனிமையாக அமையும். மிருக குணங்களுடன் கணவன் செயல்படுகிற போது மனைவி முடிந்த அளவிற்குப் பொறுக்கிறாள்; பொறுமை கடந்த நிலையில் கணவனைப் புறக்கணிக்கவும் செய்கிறாள்.

**47 நாட்கள்**

வாழ்க்கையை வசதிப்படுத்திக் கொள்வதற்குப் பொருள் முக்கியம் அப்பொருளை நேரிய முறையில் பெற்று வசதியாக வாழும் போது வாழ்வியல் சூழல்களில் முரண்பாடுகள் தோன்றுவதில்லை. நெறி பிறழ்ந்த முறையில் பொருள் பெற்று வசதியையும் ஆடம்பரத்தையும் அடைய நினைக்கும் வாழ்வில் முரண்பாடுகளும் சிக்கல்களும் உருவாகின்றன.

47 நாட்கள் என்ற புதினத்தில் குமார் அமெரிக்கா சென்று அங்குள்ள பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறான். அவர்களுக்குக் குழந்தை பிறக்கிறது. குழந்தையை வளர்ப்பதற்காக ஒரு முடிவுடன் இந்தியா வருகிறான். படிக்காத ஏழைப் பெண் விசாலியிடம் பொய் கூறித் திருமணம் செய்து, அமெரிக்காவிற்கு அழைத்துச் செல்கிறான். விசாலி ஏழைப் பெண், படிப்பறிவும் இல்லாதவள். தன்னை அவன் இரண்டாம் தாரமாகத்தான் திருமணம் செய்துள்ளான் என்பதை அமெரிக்கா வந்துதான் அறிகிறாள். அறிந்தவுடன் பொங்கி எழுகிறாள். திருமணமான நாற்பத்தேழாம் நாள் விசாலி, லூசியின் உதவியுடன் தன் வயிற்றில் வளரும் கருவைக் கலைத்துவிட்டு, கணவனைப் புறக்கணித்துத் தாயகம் திரும்புகிறாள்.

*பொய்*

தன் மனைவி துர்க்காவுடன் ஏழு வருடங்களாகக் காதல் தோய்ந்த இல்லற வாழ்வு வாழ்ந்த கிரிதர், அமெரிக்கா செல்கிறான். அங்குச் செல்வமிக்க விதவை லிண்டாவைத் திருமணம் செய்கிறான். தனது மனைவிக்கு இதைத் தெரியப்படுத்துகிறான். "சாதாரணப் பெண்களைப் போல நீ அழுது அமர்க்களம் பண்ணமாட்டாய் என்று ஆணித்தரமாக நம்புகிறேன். ஏனென்றால் நீ விவேகி, படித்தவள், தைரியசாலி"(76) என்று கடிதத்தில் குறிப்பிடுகிறான். துர்கா அமெரிக்கா சென்று, "உன் பணம் காசு ஆகியவற்றை நீயே வைத்துக் கொள் என்று கூறிவிட்டு என் சம்பாத்தியத்தில் என்னால் முடிந்தவரைக்கும் நல்ல விதமாக இவர்களை வளர்ப்பேன்"(77) என்று துணிவாகச் சொல்லிவிட்டு நாட்டிற்குத் திரும்பி விடுகிறாள்.

பொருள் தேடுவதற்கு வெளிநாடுகளுக்குச் செல்லும் ஆண்கள் அங்கேயே திருமணம் செய்து கொள்கிறார்கள். அந்நாட்டுப் பெண்ணிற்கும் தாய்நாட்டுப் பெண்ணிற்கும் துரோகம் இழைக்கிறார்கள். பெண்களில் படித்தவர்களும், படிக்காதவர்களும் இதற்கு விதிவிலக்கல்ல என்பன இங்கு உணர்த்தப்படுகின்றன.

***மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்கள்***

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் மதிப்புக் கொடுத்து வாழ்ந்தால், அது வெற்றி பெற்ற வாழ்க்கையாகக் கருதப் பெறும். குடும்பத்தின் இயக்கத்தில் கணவனைச்

சார்ந்து மட்டும் சிக்கல்கள் தோன்றுவதில்லை; மனைவியைச் சார்ந்தும் சிக்கல்கள் தோன்றுகின்றன என்பதைப் படைப்பாளர்கள் தங்கள் புதினங்களில் பதிவு செய்துள்ளனர்.

**‘காதல் ஒருவனைக் கைப்பிடித்து - அவன்**

**காரியம் யாவினும் கைகொடுத்து’**(78)

என்பார் பாரதி. மனைவியானவள் கணவனுக்கு அமைந்த நண்பர்களில் சிறந்தவளாகவும், அவனுடைய செல்வம், மகிழ்ச்சி, நன்மை ஆகிய அனைத்திற்கும் காரணமாகவும் குடும்பத்தின் நிலைபேற்றிற்குக் காரணமாகவும் விளங்க வேண்டும்.

**வானத்து நிலா**

‘வானத்து நிலா’ என்ற புதினத்தில், சந்தானம் பொறுப்பான பணியில் இருப்பவன். அவன் மனைவி மாலினி நாட்டியப் பெண்மணி ஆவாள். காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறார்கள். குழந்தைப்பேறும் நிகழ்கிறது. திரைப்படத்தில் மாலினி நடிக்கத் தொடங்குகிறாள். தொடக்கத்தில் கணவன் அவளின் நடிப்புத்துறைக்குத் தூண்டுகோலாக இருக்கிறான். அவள் மென்மேலும் புகழ் அடையும் நிலையில், தன் வேலையை விட்டுவிட்டு அவளின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருக்கிறான். வசதியும் புகழும் ஆடம்பரமும் உயர்ந்த நிலையில் கணவனை ‘வேலையற்றவன்’ என்று கூறி அலட்சியப்படுத்துகிறாள். இருவரும் விவாகரத்துப் பெறுகிற நிலைக்கு வந்து விடுகின்றனர். வீட்டு வேலைக்காரி பாலம்மாவின் அறிவுரையால் மனம் திருந்துகின்றனர்.

குடும்பத்தில் புரிதல், சகிப்புத்தன்மை ஆகியன வேண்டும் என்ற நற்சிந்தனையை ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

**திரிசங்கு சொர்க்கம்**

கமலி நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள். அண்ணன் அண்ணி பாதுகாப்பில் படித்து வேலைக்குச் செல்பவள். வசதியான வீட்டைச் சேர்ந்த முரளியைத் திருமணம் செய்து கொள்கிறாள். கமலி திரைப்படக் கற்பனைகளை வாழ்வியலோடு இணைத்துப் பார்க்கும் இயல்பினள். தன் கணவன் திரைப்படக் கதாநாயகன் மாதிரி இல்லையே என்பதில் ஏக்கம் உடையவளாகக் காணப்படுகிறாள்.

கமலி வேலைக்குச் சென்ற இடத்தில் மனோகர் என்பவனுடன் தொடர்பு கொள்கிறாள். அவனின் அழகைப் பார்த்து கற்பனையை எதார்த்தமாக்கி மயங்குகிறாள். கணவனையும் மீறி அலுவல் பணிக்காக சென்னைக்கு மாறிச் செல்கிறாள். போகும்பொழுது தனக்கும் முரளிக்கும் பொருத்தமில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, தன்னைத் தேட வேண்டாம் என்றும், மனோகருடன் சேர்ந்து வாழப் போவதாகவும் கடிதம் எழுதி, தாலியைக் கழட்டி அதன்மேல் வைத்துச் செல்கிறாள். பின் மனோகரின் சுயரூபம் அறிந்து முரளியுடன் வாழ நினைக்கிறாள். அக்காலக்கட்டத்தில் முரளி, தன் மாமன் பெண் சாந்தகுமாரியை மணந்து கொண்டிருக்கிறான். கமலியின் வாழ்க்கை திரிசங்கு சொர்க்கமாக அமைந்துவிடுகிறது.

கணவன் மனைவி ஒருவரையொருவர் மதித்தும் விட்டுக் கொடுத்தும் வாழும் நிலையில்தான் குடும்பச் சக்கரம் சுழலும். இருவரில்

ஒருவரையொருவர் மதிக்காவிட்டால் குடும்பத்தில் சீர் குலைவு ஏற்படுவது இயல்பாகும். ஒருவரையொருவர் வணங்கி நடக்க வேண்டாம்; இணங்கி நடந்தாலே போதும் இல்லறம் சிறப்பாகும்.

பழமைச் சமூகச் சூழலில் ஆணாதிக்கம் பெண் சமூகத்தாரால் விரும்பியோ, விரும்பாமலோ ஏற்றுக் கொள்ளப் பெற்றிருந்தது. கல்வி போன்ற விழிப்புணர்வுக் காரணிகளால் இக்காலச் சமூகம் விழிப்புணர்வு பெற்றிருக்கிறது. இச்சூழலில் ஆண் சமூகத்தில் பெண் சமூகமும் ஆதிக்க நிலையிலிருந்து விடுபட்டு, இணங்கி வாழும் சூழலில் இயங்குவதற்கு வாய்ப்பு உருவாகியிருக்கிறது. எனினும் அவ்வாய்ப்பு நன்முறையில் பயன்படுத்தப் பெறாத நிலைகளும் சமூகத்தில் நிலவி வருகின்றன.

**ஆயுள் தண்டனை**

'பரத்' கதையின் நாயகன். செல்வந்தர் வீட்டுப் பையன். அலுவலகத்தில் உதவியாளராகப் பணிபுரியும் மோகனாவைத் திருமணம் செய்ய விரும்புகிறான். அவள் குடும்பச் சூழல் காரணமாக முற்கால வாழ்க்கையில் விலைமகளாக இருந்தவள். தன் வாழ்வின் முன்பகுதியை அவள் எடுத்துக் கூறிக் காதலை மறுத்துப் பார்க்கிறாள். பரத் அது தெரிந்தும் அவளைச் சம்மதிக்கச் செய்து திருமணம் செய்து கொள்கிறாள்.

மோகனாவின் பழைய கால வாடிக்கையாளர்கள் பரத்தின் நண்பர்களாக இருக்கின்றனர். சந்தேகத்தீயை மனதிற்குள் வளர்த்து மனைவி மோகனாவைக் கொடுமைப்படுத்துகிறான். குடிவெறியில் மனைவி மோகனாவைக் கண்டபடி பேசுகிறான். "நா குடிவெறியிலே நடந்துக்கல... மோகனா... உனக்குத் தான் கிரி கிஸ் பண்ணிய பின்பு நான் பண்ணறது

பிடிக்கலை ..."[79] என்று குத்திக் காட்டுகிறான். தன் நண்பன் கிரியையும் மனைவி மோகனாவையும் சந்தேகக் கண்ணோடு பார்க்கிறான். அவன் கொடுமைப் படுத்துவதைப் பொறுக்க முடியாமல், "என்னை இவ்வளவு மட்டமானவளா உங்க அடி மனசுல நினைக்கிறப்போ ... நா சொல்றது எதுலயும் உங்களுக்கு நம்பிக்கை வராதப்ப ... என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டதே பெரிய தப்பு பரத்.

எஸ்... பெரிய தப்புதான்... ஆயுசுக்கும் உன்னோட நா வேதனைப்பட்டாகணுமா... இத்தனை பெரிய தண்டனை வாங்க நா என்ன பாவம் பண்ணினேன்.."[80] என்று பரத் அரற்றுகிறான்.

"உனக்கு அபார்ட் ஆனதை நினைச்சு இந்த நிமிஷம் ரொம்பச் சந்தோசப்படறேன்... மோஹனா... உங்கம்மா ஹஸ்பெண்டை விட்டுட்டு இன்னொருத்தனோட ஓடி வந்தவ ... ஊரும் உலகமும் அவளைத் தேவடியான்னுதானே சொல்லித்து... நீ டெல்லி புகழ் கால்கேர்ள்... கல்யாணமாகி என்னோட வாழறப்பவே உன் தெருநாய் குணத்தைக் காட்டிட்டே. இந்த விபச்சார புத்தி உங்காத்துல பரம்பரையா வரதுபோல இருக்கு... முதல்ல உங்க அம்மா.... அப்புறம் நீ... ப்ரெக்னென்ஸி தங்கி, அது ஒரு பெண்ணா பிறந்திருந்ததுன்னா... ஓ...காட்.... அதே இரத்தம் தானே"[81] என்று கோபத்தில் சினம் கொள்கிறான்.

மோகனா விலைமகளாக வாழ்ந்தவள் என்று தெரிந்திருந்தும் அவளைத் திருமணம் செய்துவிட்டு. அவள் மேல் சந்தேகம் கொள்ளும் கணவனோடு வாழாமல் பிரிந்து போகும் பெண்ணாகச் சித்திரிக்கப்பட்டுள்ளாள்.

கோவலன், மாதவி ஆடற்கணிகை என்று தெரிந்தும் திருணம் செய்து, பனிரெண்டு ஆண்டுகள் அவளோடு குடும்பம் நடத்திவிட்டு, மணிமேகலையும் பிறந்த பிறகு அவளை விட்டுச் செல்கிறான். "குழலும் யாழும் இனிமையில்லை மாதவியின் குரலே இனிமை என்றிருந்தவன். இவனுக்குத் தேவையென்றால் அணைத்துக் கொள்வதும்; பிடிக்கவில்லையென்றால் ஆடல் மகள் என்று தூற்றுவதும் பெண்களை இழிவுபடுத்தும் செயலைத் தவிர வேறொன்றுமில்லை"[82] என்பது நோக்கத்தக்கதாகும். எத்தனைக் காலமானாலும் ஆண்களின் பார்வையில் பெண் அடிமை தானோ என்கிற அச்சவுணர்வு ஏற்படுகிறது.

*வெட்கம் கெட்டவர்கள்*

வெட்கம் கெட்டவர்கள் என்ற புதினத்தில் புவனா தனது சித்தியால் வளர்க்கப்படுகிறாள். அவளின் விருப்பமான படிப்பைப் பாதியிலேயே நிறுத்தி அவளுக்கு எந்தவிதத்திலும் பொருத்தமில்லாதவனைக் கணவனாக்குகிறாள். புவனாவும் இதுதான் வாழ்க்கை என்று அன்போடு வாழ்க்கை நடத்துகிறாள். பணத்தாசையால் சித்தி, அவளின் சொந்த மகளையே புவனாவின் கணவனுக்கு இரண்டாந்தாரமாகக் கட்டி வைக்கிறாள். இதைப் பொறுக்க முடியாமல் குழந்தையுடன் வெளியேறுகிறாள். மகளின் திருமணத்திற்குத் தந்தை வரவேண்டும் என்கிற சூழலில் அவனிடம் மகளுக்குத் தந்தையாக வந்திருந்து திருமணத்தை நடத்திவிட்டுச் செல்லுமாறு புவனா கேட்கிறாள். அதற்கு "பெண்ணுக்கு அப்பனாய் நா வந்து நிக்கணுமா? ம்...ம்... செய்திடலாம். ஆட்சேபனை இல்லை... ஆனா நீ என்ன பண்ணப் போறே? அதைச்

சொல்லு முதல்லே... பெண்ணுக்கு அம்மாவா மட்டும் நிக்கப் போறியா? இல்ல புருஷனுக்குப் பெண்டாட்டியாகவும் நிக்கப் போறியா? என்னடி, முழிக்கிறே? புரியல? விளக்கமாகச் சொல்லணுமா, சொல்றேன்... முப்பத்தாறு வயசிலே சின்னப் பெண்ணாட்டம் தளதளக்கற உன் உடம்பை நா தொட்டு ஆள, நீ சம்மதிச்சா நானும் உன் பெண்ணுக்குத் தகப்பனா, மணவறைலே நிக்க ரெடி... என்ன, இப்ப புரிஞ்சுதா?..."(83) என்று கேட்டவுடன் புவனாவிற்கு வயிற்றில் குமட்டல் வாயில் கொப்பளிக்க, அந்த அவமானத்தைத் தாங்க சக்தி இல்லாதவள் போல மயங்கி கீழே விழப் போகிறாள். யசோதா அவளைத் தாங்கிப் பிடித்துக் கொள்கிறாள். மாமியார், மனைவி, வயதுப் பிள்ளைகள், பெண் எல்லோரையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஒருவன் பேசுகின்ற பேச்சா என்று நொந்து போகிறாள்.

தாயின் இந்த நிலைக்குத் தான் தானே காரணம் என்று தாயைத் தேற்றுகிறாள். துரைசாமியின் பக்கம் திரும்பி தன் கோபக் கனலைக் கக்குகிறாள் யசோதா. "ஹௌ டேர் யூ டாக் லைக் தட் டு மை மதர், ஹௌ டேர் யூ? நீங்களும் ஒரு ஆம்பிள்ளையா? வெட்கமாய் இல்லை?... இன்ன வார்த்தையை, இன்னார் முன்னாலே சொல்லறதுன்னு விவஸ்தை இல்லே? நீங்கதான் என்னைப் பெத்தவர்னு நினைச்சாலே என் உடம்பு ஆடிப் போகுது... நீங்க ஒரு மனுஷனே இல்லே...சத்தியமாய் சொல்றேன் - மிருகம்...கேவலமான மிருகம்...வெட்கம், மானம், ரோஷம்னு எந்த உணர்ச்சியுமே இல்லாத மிருகம்... உங்களுக்கு ஏத்த சுபாவம் கொண்டவங்கதான் இந்த ரெண்டு பேரும்... நீங்க ஆயுசுக்கும் இவங்களோட வாழத்தான் லாயக்கு... எங்கம்மாவை மனசாலே

நினைக்கக்கூட உங்களுக்கு யோக்கியதை இல்லே...உங்களைச் சந்திக்க அம்மா வந்ததே தப்பு... நீங்க கீழ்த்தரமான புத்தி கொண்டவங்கனு எனக்குத் தெரிஞ்சிருந்தா நா அவங்களை கண்டிப்பா தடுத்திருப்பேன்..."[84] என்று யசோதா கோபத்தோடு பேசுகிறாள்.

பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே யசோதா தன் தாயிடம் மன்னிப்புக் கேட்கிறாள். தன்னால் தானே தன் தாய்க்கு இத்தனை பெரிய அவமானம். "ஐம் ஸாரிம்மா... என்னால் எத்தனை பெரிய அவமானம் உங்களுக்கு? ஐம் ரியலி ஸாரிம்மா... மனைவி செத்த ஆறாம் மாசம் வேலைக்காரிக்கிட்ட மயங்கின தாத்தா, மூத்தமக புருஷனுக்கு இளைய மகளை வைச்சு வலை வீசின தாயார், பண்பான மனைவி ஒருத்தி இருக்கும் போது இரண்டாவதுக்குப் பறந்த புருஷன், அக்காவுக்குத் துரோகம் பண்ணின தங்கச்சி, இந்த அசிங்கமெல்லாம் போதாதுனு பெத்த குழந்தைங்க மனைவிக்கு எதிரிலேயே இந்த மனுஷன் பேசின பேச்சு... ஐயோ, அம்மா.., வேணாம்மா... இந்த வெட்கங்கெட்ட குடும்பத்திலே பிறந்ததும் மனசிலே அழுக்கு இல்லாம குடும்பத்திலே பிறந்தும், மனசிலே அழுக்கு இல்லாம வாழ வேண்டி தனிச்சு ஓடி வந்து பதினேழு வருஷமா நீங்க பண்ணிட்டு வர்ற தவம் எனக்காக கலையறது தப்பு. ஐ வோண்ட் அலோ இட்... எனக்காக இந்த வெட்கங் கெட்ட கும்பல்லே ஒருத்தியா நீங்க சேர வேணாம்மா... ப்ரகாஷ், அவங்க அப்பா நம்மளப் புரிஞ்சிகிட்டா சரி, இல்லைன்னா எனக்குக் கல்யாணமே வேணாம். உங்களோடயே ஆயுசுக்கும் சந்தோஷமா நா இருந்திடறேன். என்னை நம்புங்க... நீங்க வாங்கம்மா... வாங்க"[85] என்று உடம்பும் மனசும் படபடுத்து நடுங்கினாலும்,

அடிபட்டு நிற்கும் தாயை ஆதரவோடு அணைத்துக் கொண்டு வெளியேறுகிறார்கள்.

இலக்கியங்கள் வாயிலாகச் சமுதாய அவலங்களைப் படம்பிடித்துக் காட்டமுடியும் என்பதற்கு இக்கதைச் சான்றாகும். மனைவி இறந்தவுடன் மறுமணம் செய்து கொண்ட தாத்தா, மூத்த மகளின் கணவனுக்கு இளைய மகளை வைத்து வலைவீசிய தாயார், பண்பான மனைவி இருக்கும் போது இரண்டாவது திருமணம் செய்து கொண்ட கணவன், அக்காவுக்குத் துரோகம் செய்த தங்கை என வெட்கம் கெட்டவர்கள் அங்கங்கே, ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் வந்து கொண்டே இருக்கிறார்கள் என்பதை இப்புதினம் தெளிவாக எடுத்துரைக்கிறது.

***கருவாச்சி காவியம்***

கிராமத்துப் பெண் கருவாச்சி, திருமணமாகி பதினொரு நாட்களில் மணமுறிவு பெறுகிறாள். ஆனால் கழுத்தில் உள்ள தாலியைக் கழட்டிக் கொடுக்காத மனவுறுதி உடையவளாகக் கருவாச்சி காணப்படுகிறாள். கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்தவுடன் கண்ணகியின் நிலையை,

***கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்***
***மங்கல அணியின் பிறிது அணி மகிழாள்"*** (சிலம்பு.2:49-50)

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். கணவன் பிரிந்த நிலையில் எந்தவித அணியும் அணியாமல் மங்கல அணியுடன் மட்டும் காணப்படுகிறாள். கணவன் எப்படியும் திரும்பி வருவான் என்ற உறுதிப்பாட்டுடன் இருந்த கண்ணகியைப் போல கருவாச்சியும் தாலியைக்

கழட்டாமல் காணப்படுகிறாள். இருவரின் கணவரும் தன் தவற்றை உணர்ந்து திரும்புகின்றனர். தன் தவறை உணர்ந்து கருவாச்சியைக் காண விரும்பிய கணவனை, "எந்திரி மாமா. திரேகம் நல்லாருந்தப்ப மனசு அழுகிக் கெடந்த. இப்ப திரேகம் அழுகிப் போன பெறகு மனசு நல்லாயிட்ட"[86] என்று நோயில் படுத்த கணவனைத் தன் இல்லத்திற்கு அழைத்துக் கொண்டு வருகிறாள். தன்னைக் கொடுமைப்படுத்திய கணவனை; தன்னை விட்டுவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்த கணவனை; மனம் திருந்திய போது சிலப்பதிகார கண்ணகியைப் போல[87] ஏற்றுக் கொள்கிற வீரப்பத்தினியாகக் கருவாச்சி படைக்கப்பட்டிருக்கிறாள்.

கணவன் என்பவன் அவள் வழியில் வந்துவிட்டுப் போன ஆண். மகன் என்பவன் அவள் வழியாக வந்த ஆண் என்று ஆணினத்தைப் பிரித்துப் பார்க்கிறாள். கருவாச்சியின் கணவன் பேயம்மா என்பவளை இரண்டாவது திருமணம் செய்த போதும் அவள் வருந்தவில்லை. இளம் வயதிலிருந்து கணவனைப் பிரிந்து வாழ்ந்து வருபவள். "நம்புனேன் மாமா. நீ என்னைக்கும் எனக்குப் புருசனாக முடியாது. ஆனா என்னைக்காச்சும் மனுசனாக முடியும்னு நம்புனேன் மாமா"[88] என்று கருவாச்சி கூறுகிறாள். இக்கதை இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் நடப்பதாக உள்ளதால், அக்காலச் சூழலுக்கேற்ப கதை அமைக்கப்பட்டிருக்கிறது.

## சிவகாமியின் ‘ஆனந்தாயி’

பெண் எழுத்தாளர் சிவகாமி இந்திய ஆட்சிப் பணியில் பணியாற்றி தற்போது ஓர் அரசியல் கட்சியின் மூத்த மாநில பொதுச் செயலராக இருப்பவர். தாழ்த்தப்பட்ட மக்களுக்காகத் தன் முழுநேரப் பணியையும் அர்ப்பணித்துக் கொண்டிருப்பவர். அவருடைய ‘ஆனந்தாயி’ என்ற புதினத்தில் கதைத்தலைவன் கட்டிய மனைவிக்குத் துரோகம் செய்கிறான். அதை நினைத்து அழுது கொண்டிருக்கிறாள். அதற்கு அவளின் மாமியார், “என்ன செருப்புக்கு அழுவுறதுங்கறேன்? எதுக்குப் புள்ள பெத்தவ பட்டினி கெடக்கணும்? புருஷன் கூத்தியா மேல போறானாம். அதுக்கு இவ பட்டினி கெடக்கிறாளாம். புருஷன் ஒன்னுதானா ஆயுசுக்கும்? புள்ளங்க இல்ல; சொத்து இல்ல; ஆடு, மாடு இல்ல; அவன் எவளோடயே போனா இவ ஏங்கிச் சாவுறாளாம். அஞ்சு புள்ளைகளாச்சு. அந்த கருமாந்தரத்தைத் தலை முழுவித் தொலைச்சாத்தான் என்ன? மகன் சென்றதும் கிழவி தொண தொணத்தாள். நான்தான் இப்ப எங்கிட்ட படுபடுன்னு அலையிறனா? கேட்க வந்த கேள்வி தொண்டையோடு நிற்க திரும்பிப் படுத்தாள் ஆனந்தாயி”(89) என்று ஆசிரியர் அவளின் ஆற்றாமையை விளக்குகிறார்.

சங்க இலக்கியத்தில் தலைவன் பரத்தையிடம் செல்ல ‘பாணன்’ உதவுவது போல இக்காலத்திலும் சிலர் தரகர்களாகச் செயல்படுகிறார்கள். இதனை, “மிளகாய்க்காரன் தண்டபாணி பெரிய வட்டாரங்களுக்குத் தெரிந்தவன். பெண் பிள்ளைகள் சகவாசம் சேர்த்து விடுவதற்கு இவன்தான்

ஆள். கூப்பிட்டால் வருபவர்கள் யார் யார்? என்று பட்டியல் வைத்துக் கொண்டு அலைவான்.

ஒருநாள் பெரியண்ணனைத் தேடிக்கொண்டு வீட்டுக்கு வந்தான். ஆனந்தாயி நேரடியாக அவனிடம் பேசவில்லை. தன் மகன் மணியிடம் பேசுவது போல பேசினாள். எங்கிட்ட சொல்லிட்டுத்தான் போறாரா... வாறாரா... அடச்சீ ஓட்றா....

இல்லேன்னா இல்லன்னு சொல்லம்மா... அதுக்கு ஏம்மா கத்தறே? என்று மணி அம்மாவுக்குப் புத்திமதி கூறினான்.

ஆமாண்ட நான் கத்தறேன். நாயி பாரு; அதனாலே வெறி புடிச்சிருக்கு... நல்ல மாட்டுக்கு ஒரு சூடு... தண்டபாணி சென்ற பிறகு, ஏம்மா மணி, அந்த வள்ளத்த எடு... என்றாள். நான் எடுக்க மாட்டேன்... ரொம்ப தான் கத்துனீங்க.....

நான் உன்னைச் சொல்லலேடா... அந்த அடைப்பு அடைச்சவனச் சொன்னேன்... தூ... அவனெல்லாம் ஒரு ஆம்பிளை... பத்தாதுக்கு முஞ்சில மீசை வேற ...."(90) என்று ஆனந்தாயி தரகராக வந்த தண்டபாணியை விரட்டுகிறாள். சங்க காலத்தில் பாணனைப் படர்க்கை நிலையில் வைத்து வாயில் மறுத்தது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

மனைவிக்குத் தெரிந்தே தன் வீட்டிலேயே கள்ளக்காதலை வைத்திருக்கும் ஆண்களைப் பெண்கள் எதிர்த்துப் பேசினால் அவர்களுக்கு அடி தான் கிடைக்கிறது."(91) என்கிறார்.

*சிறுகதை*

ஆனந்த விகடனில் (10.12.1933) அமரர் கல்கி அவர்களின் நேர்காணலில் கீழ்வருமாறு கூறுகிறார்.

"கொஞ்ச நாளைக்கு முன்பு எனக்குத் தெரிந்த நண்பர்கள் சிலர் ஒரு நாடகம் போட்டார்கள். அதற்குக் கட்டாயம் வர வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்கள். விகடனில் அதைப்பற்றி விமரிசனம் எழுத வேண்டும் என்று சொன்னார்கள்...

அந்தக் கதையில் கதாநாயகன் ஒரு தாசியின் வலையில் விழுந்து அவள் வீடே கதியாயிருக்கிறான். கதாநாயகி அவனைத் தேடித் தாசியின் வீட்டுக்குப் போகிறாள். அங்கே கதாநாயகன் தாசியின் தூண்டுதலால் அவளுடைய வீட்டை விளக்குமாற்றால் கூட்டும்படி தன் பத்தினிக்குக் கட்டளையிடுகிறான்.

கதாநாயகி என்ன செய்யப் போகிறாள் என்பதை மிக்க ஆவலுடன் கவனித்தேன். அவள், தேமேனு பாவம்! விளக்குமாற்றை எடுத்துத் தாஸியின் வீட்டைக் கூட்டத் தொடங்கினாள்!

அதற்குமேல் பார்க்கச் சகிக்காமல் எழுந்து நாடகக் கொட்டகையை விட்டு வெளியேறினேன்.

மறுநாள் அந்நண்பர்களைப் பார்த்த போது நடிப்பெல்லாம் நன்றாய்த்தானிருந்தது. ஆனால் நாடகம் பாதிக்குமேல் பார்க்க முடியவில்லை. ஆகையால் விமரிசனமும் எழுதமுடியவில்லை என்றேன்.

நாண்பர்கள் காரணம் கேட்டார்கள். நான் கூறியதாவது:- புருஷன் தாஸி வீட்டில் சரணாகதியென்று கிடப்பதும், பத்தினி அவனையே நினைந்து உருகுவதும், அவனை மீட்க முயல்வதும் புதியதல்ல. சிலப்பதிகார காலத்திலிருந்து நமது நாட்டில் வழக்கிலிருந்து வருவதுதான்; அதுதான் முக்கியமான அம்சமென்றால் கோவலன் சரித்திரம் இருக்கிறது. அதைவிட அழகான கதை கற்பனை செய்ய முடியாது. நீங்கள் புதிதாக எழுதியிருக்கும் நாடகத்தின் கதை தற்காலத்தின் புதிய உணர்ச்சிகளுக்கும், புதிய இலட்சியங்களுக்கும் ஒத்ததாய் இருக்கக்கூடாதா? தாசி விளக்குமாற்றை எடுத்துக் கொடுத்ததும் உங்கள் கதாநாயகி பாட்டுப்பாடிக் கொண்டே வீடு கூட்டத் தொடங்குகிறாளல்லவா? அதற்குப் பதிலாக அவள் அந்த விளக்குமாற்றை வேறுவிதத்தில் பிரயோகம் செய்திருந்தால் நாடகம் முழுவதும் பார்த்திருப்பேன் என்று கூறினேன். இவ்வாறு இன்றுவரை தாசி லோலனான புருஷன் இடும் கட்டளையைக் கூடச் சிரமேற் தாங்குவது தான் கற்பு என்ற கொள்கை நிலைபெற்றிருக்கும் நமது தேசத்தில் ஸ்ரீமதி கமலாதேவி காண்பித்த துணிவு அதியாச்சிரியமானதல்லவா? அவர் தொடுத்த வழக்கின் சாராம்சம் என்ன? இல்வாழ்க்கையிலும் கற்பு நிலையிலும் மனைவிக்குச் சம உரிமை வேண்டும் என்பதே.

காலத்திற்கேற்றபடி கவிகளும் தோன்றுகிறார்கள், அதுதான் பெரிய வேடிக்கை!

‘கற்பு நிலை என்று சொல்ல வந்தார் - இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்’

என்று நமது தேசியகவி பாடினார். ஸ்ரீமதி கமலாதேவிக்கு இது தெரிந்திருக்க முடியாது. ஆயினும் கோர்ட்டிலே அவர் தமது கணவர் மீது தொடுத்த வழக்கு மேற்படி வாக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்டதேயாகும்.

ஹரீந்திரநாத் வேறொரு ஸ்திரீயுடன் களவொழுக்கத்தைக் கைக்கொண்டாராம். ஆகையினால் நான் இனிமேல் உமது மனைவியாயிருக்க முடியாது என்று கமலாதேவி சொல்லிவிட்டார். பிரிட்டிஷ் கோர்ட்டும் அதை ஒப்புக்கொண்டு அவர்களுடைய விவாகரத்தை ரத்து செய்துவிட்டது.

கமலாதேவி - ஹரீந்திரநாதின் கலியாணம் சிவில் மாரியேஜ் சட்டத்தின்படி செய்யப்பட்டதாதலால் அவ்வளவு சுலபமாக விவாகப் பிரிவினை சாத்தியமாயிற்று. சாஸ்திர ரீதியாக நடந்து ஹிந்து விவாகங்களில் இது பலிக்காது. அடித்தாலும் உதைத்தாலும் புருஷன் புருஷன்தான்; மனைவி மனைவிதான். இதை மாற்ற வேண்டுமென்றும், மேற்கூறிய காரணங்களை ஆதாரமாகக் கொண்டு, சாஸ்திர ரீதியான விவாகங்களையும் ரத்து செய்யக்கூடிய விதமாகச் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்றும் இக்காலத்தில் சில ஸ்திரீகள் கோருகிறார்கள். இந்திய மாதர் சங்கம் கூட இத்தகைய தீர்மானம் ஒன்றைச் சமீபத்தில் நிறைவேற்றியது என்பதைப் பத்திரிக்கைகளில் படித்தோம்.. இதெல்லாம் நமது பரம்பரைக்கும், பூர்வீக ஆசாரங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் விரோதமென்பதில் சந்தேகமில்லை.

கமலாதேவியை நளாயினியின் வழியில் வந்தவர் என்று சொல்ல முடியுமா? புருஷனைத் தோள்மீது சுமந்து கொண்டு அவருடைய ஆசை நாயகியின் வீட்டில் கொண்டு சேர்த்த பதிவிரதா சிரோமணி எங்கே? கணவன் கற்பிழந்தான் என்று கோர்ட்டில் வழக்குத் தொடுத்து விவாகரத்து செய்து கொண்ட காரிகை எங்கே என்கிறார் கல்கி.

இதில் ஒரு வித்தியாசத்தை நன்றாய் கவனிக்க வேண்டும். புருஷன் தீநெறியில் சென்றபடியால் தானும் அப்படியே செய்யலாம் என்றெண்ணி நடப்பதில் துணிவுமில்லை; பெருமையுமில்லை; புதுமையும் கிடையாது. இதில் இழிவையும் ஈனத்தையும் தவிர வேறொன்றுமில்லை. ஆனால் புருஷன் துன்மார்க்கத்தைக் கைக்கொண்டதை எடுத்துக் காட்டிப் பகிரங்கமாய் விவாக விடுதலை தேடிப் பெறுவதிலேதான் எல்லாப் பெருமையும் இருக்கிறது. இல்வாழ்க்கையில் புருஷனும் மனைவியும் சமம். கற்பு நிலை இருவருக்கும் பொது என்னும் கொள்கைகளை அது நாடறிய, ஊரறிய வற்புறுத்துவதாகும்"[92] என்பர்.

காதல், காமம் என்பதெல்லாம் ஒன்றுதான். சாதாரண சிநேக பாவத்துக்கும் சகோதர பாவத்துக்கும் மேற்பட்டுவிட்டால் அது காமமேயாகும். காமம் என்பது ஆண்களுக்கும், பெண்களுக்கும் இயற்கையாக உண்டாகும் மனக்கிளர்ச்சி. அறிவுள்ளவர்கள் அதை அடக்கி ஆண்டு நியாய வரம்புக்குட் படுத்துவார்கள். அவ்வாற்றல் இல்லாதவர்கள் வெறிகொண்டு திரிவார்கள். சமூக வாழ்க்கை சீர்கெடாமல் நன்கு நடைபெற வேண்டுமாயின், காதல் இல்வாழ்க்கையோடியைந்திருக்க வேண்டும்"[93] என்கிறார்.

**பணிக்குச் செல்லும் தம்பதியினரின் ஊடல்**

“கணவன் - மனைவி இருவருமே வேலைக்குப் போய் வருபவர்கள். மெஷின் வாழ்க்கை. காதலுக்கெல்லாம் அடிக்கடி நேரம் கிடைப்பதில்லை.

சனிக்கிழமைகளில் மாலை நேரத்தில் வீட்டுக்குத் திரும்பும் போதே கணவனுக்குக் காதல் மூடு வந்துவிடும். மனைவிக்குப் பிடித்ததையெல்லாம் வாங்கி வருவான். ஆனால் சினிமாவுக்குப் போகலாம் என்பாள் அவள். வேண்டா வெறுப்புடன் வெளியே கூட்டிப் போவான். வேண்டுமென்றே சண்டையும் போடுவான். விஜய் படம் போகலாம் என அவள் சொன்னால் அஜித் படம் போகலாம் என அவன் சொல்வான். வாதங்களில் அவன் ஜெயிப்பான்.

சினிமா பார்த்துவிட்டு, ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு இரவு பத்து மணிக்கு மேல் அலுப்போடு வீட்டுக்குள் நுழைவார்கள் இருவரும். நான் ஸ்டாப் கொண்டாட்டம் நடத்தும் நோக்கத்தோடு மனைவி மீது அவன் பாய... ஸாரிங்க, ரொம்ப டயர்டா இருக்கு, இன்னிக்கு வேண்டாம் என அவள் திரும்பிப் படுத்து விடுவாள்.

ம்ஹூம், இந்த சனிக்கிழமை ஏமாந்து போகக் கூடாது! ஒரு முடிவோடு வீட்டுக்குள் நுழைந்தான் கணவன். வழக்கம் போலவே மனைவி கேட்டாள், ஏங்க சினிமாவுக்குப் போலாமா? வேண்டாம் அவ்வளவுதான் சண்டை பிடித்துவிட்டாள். சில நிமிடங்கள் ஆனதும் திட்டமிட்டபடி தோற்றுப் போனான் அவன். சினிமாவுக்குக் கிளம்பினார்கள்.

வழியில் ஓடும் பைக்கிலேயே அடுத்த சண்டை. த்ரிஷா படம் போலாமா? அஸின் படம் போலாமா? இந்த சண்டையிலும் திட்டமிட்டபடியே அவனே தோற்றுப் போனான். அவள் இஷ்டப்படி அஸின் படத்துக்கே போனார்கள்.

தியேட்டர், ஹோட்டல் எல்லாம் முடிந்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். உம்மென்று முகத்தை வைத்துக் கொண்டான் அவன். தன்னிடம் இரண்டுமுறை தோற்றுப் போனதுதான் அதற்குக் காரணம் என்று அவளுக்கும் தெரிந்தது.

அப்புறம் என்ன ஆகியிருக்கும்! வேறென்ன அவன் எதிர்பார்த்த மாதிரி அவனே ஜெயித்தான். இனிக்கும் இரவுதான்! இதுதான் சின்ன மீனை இழந்து விலாங்கு மீனைப் பிடிக்கும் டெக்னிக்"(94) என்று ஜி.கௌதம் சிறுகதை எழுதியுள்ளார். இது ஊடலில் தோற்றவர் வென்றார் என்பதைக் குறிக்கிறது.

**தொகுப்புரை**

இலக்கியங்கள் தத்தமது காலத்திற்கேற்ப மாறுபாடுகளைக் கொண்டு இலங்குகின்றன. அவ்வாறு மாறுபாடு அடையும் போது அவை முந்தைய கால இலக்கியத்தின் சாயல் அல்லது தாக்கம் காணப்படுவது தவிர்க்கவியலாததாகிறது.

தொல்காப்பியர் அகத்திணை இயல், களவியல், கற்பியல் என மூவகைகளில் அகச் செய்திகளைக் கூறுவர். வள்ளுவர் காமத்துப்பால் என்ற பொதுத்தலைப்புக்குள் அடக்கிவிடுவர்.

காமத்துப்பாலின் நிறைவாக அமைக்கப்பட்டுள்ள புணர்ச்சி விதும்பல், நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை போன்ற ஐந்து அதிகாரங்களில் ஊடல் பொருண்மையை மையமிட்டு பாடல்கள் படைக்கப்பட்டுள்ளன. ஊடல் பொருண்மை உடைய குறள்களில் பெரும்பாலானவை தலைவன் தலைவி இடையே நிகழ்கின்றன. அதற்குக் காரணமாக அமைவது வேறொரு பெண் அல்லது பரத்தையர் ஆவர். சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையாக ஊடல் பரத்தைமை காரணமாக எழுவதாக அறியப்பெறுகிறது. சங்ககாலத்தினைப் போலவே வள்ளுவர் காலத்திலும் தலைவன் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்டிரிடம் உறவு கொண்டிருந்தது புலனாகிறது.

பரத்தைமை இல்லாத காலங்களிலும் தலைவிக்கு ஊடல் நிகழும். ஊடல் தோன்றி அது புணர்ச்சியோடு நீங்க வேண்டும் என்பது வள்ளுவம். ஊடல் தோன்றிய சிறிது நேரத்திற்குள்ளாகவே காமத்தின் காரணமாக அவை நீக்கப்படவேண்டும். இப்பிறவியில் உன்னைப் பிரியேன் என்ற தலைவனிடம், அப்படியென்றால் அடுத்தப்பிறவியில் தம்மை மறப்பாரோ என ஊடுகிறாள். யாரினும் நின்பால் காதலுடையேன் என்றான் தலைவன். அதற்கு யாரினும் என்ற சொல்லுக்குத் தன் கணவன் காதலிக்கும் பெண்களில் பலருள்ளும் என்று கருத்துக் கொண்டு தலைவி புலந்து நிற்கின்றாள். பொருள்வயிற் பிரிந்த நிலையில் தலைவன், நின்னை நினைத்தேன் என்கிறான். நினைத்தேன் என்றதினால் மறந்தவர்தானே நினைப்பர் என்ற கருத்தை வைத்து ஊடுகிறாள் தலைவி. தலைவன் பூச்சூடுதலும், தும்முதலும், அஞ்சித்தும்மல் அடக்குவதும், தலைவியின்

உறுப்புக்களை நோக்குதலும்கூட ஊடலுக்குக் காரணங்களாக அமைவதாக வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

'நண்ணேன் பரத்த நின் மார்பு' எனவும், 'எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே' எனவும் தலைவனின் பரத்தைமையைக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். சங்கப் பாக்கள் பரத்தைமையை மையப்படுத்தியதைப் போல வள்ளுவர் ஊடலுக்குக் காரணமாகப் பரத்தமையைக் குறிக்கவில்லை. ஆடவனின் பலதார மணத்தால் நிகழ்ந்த உச்சகட்ட நிலையினை வள்ளுவரின் ஊடல் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

இறைவனிடம் உறவும் உரிமையும் கொண்டாடுவது இறையடியார்களின் தனிச்சிறப்பாகும். உறவு வளர வளர உரிமை பெருகுதல் இயற்கை. சைவ, வைணவ இலக்கியங்களில் இறைவனிடத்து உறவும் உரிமையும் கொண்டாடும் நிலையைப் பல பாடல்கள் உணர்த்தவல்லனவாகத் தென்படுகின்றன.

சுந்தரர் ஒரு மனைவிக்குப் பதிலாக இரு மங்கையரை மணந்தார்; இன்பந் துய்த்தார். ஊடியிருந்த தமது மனைவி பரவையாரிடம் சான்றோர்களையும் சிவபெருமானையும் தூதாகப் போகச் சொல்கிறார்.

கணவன் தனக்கு மட்டுமே உரியவனாக இருக்க வேண்டிய நிலையில் பரத்தையிடம் சென்று வந்தமை தவறு என்பதையும், ஆடவர் கற்புக்கு இழுக்கு என்பதையும் திருநீலகண்டரின் மனைவி நன்கு உணர்ந்திருக்கின்றாள். தவற்றைத் தட்டிக் கேட்கும் உரிமை

இல்லாமையால் தன்னால் இயன்ற அளவுக்கு மெய்யுறு புணர்ச்சியை மட்டும் தடை செய்கிறாள். இது சங்க இலக்கியத்திலும் காணப்படாதப் புதுமையான அறப்போராட்டமாகக் காணப்படுகிறது.

பிறன்மனை நயவாமை, பரத்தையர் உறவு கொள்ளாமை, இழிகாம உணர்வு கொள்ளாமை போன்றவைகளைப் பக்தி இலக்கியம் இயம்புகின்றது.

பெண்ணினத்துள் பரத்தையர் என்ற பிரிவைச் சமுதாயம் படைத்ததைப் பெண்ணினத்தின் இழிநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். செல்வ வளமிக்க ஆடவர்கள் தம் உடல் உணர்ச்சிகளைப் போக்கிக் கொள்ளும் வடிகால்களாக இப்பரத்தையர் மதிக்கப் பெற்றனர். இப்பரத்தையரின் உள நிலைகளும், செயல்களும் பல்வேறு நிலைகளில் இகழ்ந்துரைக்கப் பெறுகின்றன.

நாட்டுக்கும், வீட்டுக்கும் பயன்படாதவராய் வாழ்பவர்கள் என்றும் இழித்துரைக்கப் பெறுகின்றனர். கணிகையர் குலத்தில் பிறந்த பரவை நாச்சியார் இல்லத்திற்குச் சிவபெருமான் இரண்டு முறை சுந்தரருக்காகத் தூது சென்றமை அறியப்பெறுகிறது.

பாணர் என்ற பிரிவினர் சமுதாயத் தரப்பிரிவில் தாழ்நிலையுற்று வாழ்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரின் வரலாறு பாணர்களின் சமுதாய வாழ்க்கை நிலையைக் காட்டுகிறது. திருஞானசம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அந்தணர் - பாணர் என்ற வேறுபாடுகள் சிறிதுமின்றி இறை அன்பர்கள்

என்ற உயரிய நோக்கில் பழகினும் சாதி வேறுபாடுகளால் புலப்படுத்தும் நிகழ்வுகள் சுட்டப்படுகிறது. வழிபாட்டு முறைகளிலும் திருவிழாக்களிலும் முதலிடம் பெற்றிருந்த பாணர்கள் பின்னர் வந்த சமயப் பழக்க வழக்கங்களால் இழிநிலை அடைந்துவிட்டனர் என்பது பெறப்படுகிறது.

கம்பராமாயணத்தின் பாலகாண்டத்தில் பூக்கொய் படலத்திலும், உண்டாட்டுப் படலத்திலும் ஊடல் செய்திகளைச் சங்க இலக்கியத்திற்கு ஒப்பாகப் பாடியிருப்பது கம்பனின் கற்பனைக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

கம்பராமாயணத்தில், பெண்ணின் மார்பகத்தோடு இளநீர் காய்களை ஒப்பு நோக்கும் தலைவனிடம் ஊடல் கொள்கிறாள் ஒருத்தி. தொட்டதும் தன்னை அறிந்து கொள்ளாத கணவனிடம் ஊடல் கொள்ளும் பெண்ணாக ஒருத்தி காணப்படுகிறாள். இரு மனைவிக்குச் சமமாகப் பங்கிட்டு மலர்களைக் கொடுக்க, இதில் யாரிடம் அன்பு மிகுதியாக வைத்துள்ளான் என அறியும் நோக்கில் இரு மனைவியரும் அப்பூக்களை விட்டெறிந்து ஊடல் கொள்ளும் நிலையினைக் கம்பர் படைத்துள்ளார்.

கணவன் வாய்தவறி பிற பெண்ணின் பெயரை உச்சரித்த நிலையில், தன் சினத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அதனை மறைப்பதற்காகத் தன் கையிலுள்ள ஒரு பூவைக் கைக்கொண்டு முகர்ந்தாள். அப்பூவானது சினத்தால் கருகிப் போனது.

சீதையின் ஊடலாக அமைந்திருக்கும் பாடலில் சீதையின் கற்பு நெறி மேம்படுகிறது. சினந்து கொள்ள வேண்டிய நேரத்தில் சினந்து

கொள்ளாமல் இருப்பதும், ஆறிய கற்பின் அடங்கிய சாயலாகக் காட்டியிருப்பதும் சீதையின் ஊடலை அறியமுடிகிறது. மேலும், பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவது சங்க இலக்கியத்திலிருந்து சற்று மாறுபடுகிறது என கருத இடமுண்டு.

கண்ணகியின் கற்பும் சீதையின் கற்போடு ஒத்திருப்பதைக் காணமுடிகிறது. இருவரின் ஊடலும் ஒன்றாகவே காணப்படுவதால் இருவரும் பெருங்கற்புடைய மகளிரின் பண்புகளைக் கொண்டிருந்தனர் என்பது மெய்ப்பிக்கப்படுகிறது. எல்லா செல்வங்களையும் தொலைத்துவந்த கோவலனுக்கு, சிலம்பிற்கு எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறியது, கோவலனைத் தவறான வழியில் மேலும் செல்லத்தூண்டியது போன்றல்லவா என்று கண்ணகியிடம் குறை காண்பவர்களும் உண்டு. கண்ணகி பூம்புகாரில் தன் ஊடலை வெளிக்காட்டவில்லை. இதனால் அவள் உள்ளத்தளவிலும் ஊடல் கொள்ளவில்லை என்று பொருளில்லை. சீதையும் கண்ணகியும் நேரடியாகத் தன் ஊடலைத் தெரிவிக்கவில்லையெனினும், உள்ளத்தினுள்ளே ஊடல் இருந்தமை புலனாகிறது. பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டுள்ளனர்.

சிலப்பதிகார காலத்திலும் மனைவியோடு ஏற்பட்ட ஊடலைக் களைவதற்கு ஆடவர்கள் விருந்தினரை ஊடல் போக்கும் மருந்து எனக் கொண்டமை புலனாகிறது.

பெண்கள் ஊடற் காலத்தில் கணவனிடம் சினம் கொண்டு கலங்காத அவர்களின் உள்ளங்களைக் கலங்கடித்ததைச் சிலம்பின் வழி அறியமுடிகிறது. சினம் கொண்டு இருக்கும் கோவலனை மாதவி தன்னைஅழகுபடுத்தி, இனிய மொழிகளால் பேசி இன்பப் புணர்விற்கு அழைத்தமை விளங்குகிறது.

ஆற்றுவரிப் பாடல்களில், திங்கள் மாலை வெண்குடையாகிய சோழன், கங்கையைப் புணர்ந்தாலும் காவிரி அது குறித்துப் புலத்தல் கூடாது எனவும், அவ்வாறு புலவாது இருத்தலே பெண்களின் பெருங்கற்பாகும். கணவன் மனைவியன்றி மற்றொருத்தியைப் புணர்ந்தாலும் மனைவி அது பற்றிப் புலத்தல் கொள்ளக் கூடாது என்பது புலனாகிறது.

சிலப்பதிகாரக் குன்றக்குரவையில், தலைவனுக்கு உரிமை உடைய மலையைத் தீண்டி வந்த புதுப்புனலில் கூட மற்றைப் பெண்கள் நீராடக் கூடாது எனக் கருதுகிறாள் தலைவி · தலைவனை வேறொரு பெண்ணுடன் பங்கு போட்டுக் கொள்ள எந்தப் பெண்ணும் சம்மதிக்கமாட்டாள் என்பதைச் சிலம்பதிகார காலத்தில் வாழ்ந்த பெண்களின் நிலையால் அறியமுடிகிறது.

நீதிநெறி தவறாமல் ஆட்சி செய்து கொண்டிருந்தவனின் மனம் மனைவியின் ஊடலால் தன் நிலைத் தடுமாறி கொலைப் பழிக்கு ஆளாகிவிட்டதை அறியமுடிகிறது. கோவலனின் ஊடல் மாதவியைப் பிரித்தது; பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது எனலாம்.

உணர்த்த உணரா ஊடலைக் கொண்டிருந்த மனைவி, கணவன் மேல் கொண்டிருந்த அன்பின் காரணமாக அவன் பரத்தைமையைப் பெருந்தன்மையுடன் விலக்கி ஏற்றுக் கொள்வதை மணிமேகலை காப்பியத்தின் மூலம் அறியப்பெறுகிறது.

சீவகசிந்தாமணியில், தலைவி ஊடல் கொள்வதும், தலைவியைத் தலைவனோடு சேர்த்து வைக்க பெரியோர்கள் வாயிலாக வந்து ஊடல் தீர்ப்பதும் போன்ற செய்திகள் கிடைக்கின்றன. தன் காதலனிடம் பிற பெண்டிரின் ஓவியம் இருப்பதைக் கண்டதும் ஊடல் கொள்கிற தலைவி, தனக்குப் போட்டியாக வந்தவளை நேருக்கு நேராகக் காணும் போது அவ்வூடலானது இன்னும் அதிகமாகிறது என்பதை உணர்த்துகிறது.

காதா சப்த சதி பிராகிருத மொழிப் பேரிலக்கியமாகும். இது ஒரு மொழிப் பெயர்ப்பு நூலாகும். 'ஆந்திரநாட்டு அகநானூறு' என்று அழைக்கப்படுகிறது.

தலைவியின் ஊடல் அதிகமாகிக் கொண்டே இருந்தால் தலைவன் வேறொரு பெண்ணுடன் தொடர்பு கொள்ள அதுவே காரணமாக அமைந்துவிடும் என்று தோழி அறிவுரை கூறுவதை அறியமுடிகிறது.

தலைவி தலைவன்பால் ஊடல் கூர்ந்தாள்! தலைவன் வரும்போது வாயில் மறுத்தாள். அதுகண்டு தோழி கூறிய கூற்று. காதலன் மீது கடுஞ்சினங் கொண்டு ஊடல் தளர்த்தாமல் உறுதியாக இருந்தாள். ஆனாலும் அவ்வூடல் நிலைக்குமா? குறுமணலை இறுக்கமாகப் பிடிக்கப் பிடிக்க மணல் தளர்ந்து சிந்திவிடும் அல்லவா? அதுபோலத்தான் இவள்

ஊடலுறுதியும்கூட முடிவில் பையப்பயத் தளர்ந்துவிடும் என்று தோழி கூறுகிறாள். 'வெற்று ஊடல் கொள்வதில் யாதொரு பயனுமில்லை' என்பதைக் காதா சப்தசதி தெளிவுபடுத்துகிறது.

தலைவியின் பூப்புக்குளிப்பான நாளில் தலைவன் அவளைப் பிரியாதிருத்தல் வேண்டும் என்பது சமுதாய விதியாக முன்னாளில் கருதப்பட்டதைக் காதா சப்த சதி பாடல்களின் வழி அறியமுடிகிறது.

ஊடல் கொண்ட தலைவியிடம் ஊடல் உணர்த்திய தலைவன் வாய் தவறி, தான் கலந்தின்புற்றுவந்த காமக்கிழத்தியின் பெயரைக் கூறியதால் தலைவி ஊடல் கொள்வதை அறியமுடிகிறது.

ஒரு தாய் தன் மகளைப் பரத்தையாகச் செயல்படும்படி உரைப்பதைக் காதா சப்தசதி பாடல்களால் அறியமுடிகிறது.

பரத்தையர் அல்லாத பொதுமகளிரும் பரத்தையாகச் செயல்பட்டதை காதா சப்தசதி குறிப்பிடுகிறது.

தலைவியவள் வீட்டில் வழிப்போக்கன் விருந்தாளியாகத் தங்கியிருந்தான். அவனுக்குத் தன் வீட்டில் இரவில் தங்குமிடம் காட்டும் தலைவி கூறுகிறாள்; இவ்விடத்தில் எனது மாமி துயில்வாள்; இங்கே சுற்றத்தாரெல்லாம் துயில்வார்கள். வழிப்போக்கனே, இருட்டில் கண் தெரியாமல் என் படுக்கையில் வீழ்ந்து தொலையாதே என்று கூறுகிறாள்.

அவள் வாய்ச் சொற்கள் இங்கு வராதே என்று கூறினாலும் உளக் குறிப்பு இங்கே நான் படுத்திருப்பேன் அங்கே பிறர் படுத்திருப்பர், காமந்தகாரனாகிய நீ கண் தெரியாமல் அவர்களிடத்தில் கால் இடறி

வீழ்ந்து காரியத்தைக் கெடுத்துக் கொள்ளாதே; அவர்கட்கு விழிப்பை யூட்டி விடாதே. நீ விழிப்புடன் என் படுக்கைக்கே வந்து சேர். என் மாமி எல்லோரும் நன்கு துயின்று விடுவர் என்ற தொனிப் பொருள் அமையக் கூறுகிறாள். இத்தகைய அறக்கழிவுப் பாடல்களும் சங்க இலக்கியத்தை ஒத்த காலத்தில் அமைந்த பாடல்களில் காணலாகிறது.

கற்புக்கரசிகள் மட்டுமின்றி கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் பெண்களும் உண்டு; பரத்தையரும் உண்டு. கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் மகளிரைப் பற்றித் தமிழ் இலக்கியங்களில் குறிப்பில்லை என்பது பெறப்படுகிறது.

சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஒவ்வொருவரையும் தொள்ளாயிரம் வெண்பாக்களில் புகழ்ந்து பாடும் பழந்தமிழ் நூல் முத்தொள்ளாயிரம். புலத்தல் நடந்தது, கூடலும் நடந்தது. புலத்தல், புல்லுதல், கலத்தல் அனைத்துமே அவளை அவனது முகம் பார்க்க விடாமல் தடுத்தன. ஊடலும், தழுவுதலும், கூடலும் கலவிக் களிப்பின் கூறுபாடுகள் தான் என்பதை முத்தொள்ளாயிரம் விளக்குகிறது.

சிற்றிலக்கியங்களில் களவும் காமமும் மிகுதியாகவும், கற்பு குறைவாகவும் காணப்படுகின்றன. பெரும்பான்மை புலமை இலக்கியங்களாகத் திகழ்வதை அறியமுடிகிறது.

நகரத்திலுள்ள அனைத்து இல்லங்களிலும் ஊடல் நடைபெறுவதாக அமைகிறது. பாண்டிய நாட்டிலே வசிக்கும் ஆடவரோடு மகளிர் ஊடல் கொள்கின்றனர். அவ்வாறு ஊடல் கொண்ட பெண்டிர் தமது மார்பில்

பூசியுள்ள குங்குமம், சந்தனத்தை வழித்துக் காலதர் (சன்னல்) வழியே தெருக்களில் வீசி எறிவர். அவ்வாறு எறியப்பட்ட மணமுள்ள சாந்து தெருவெங்கும் பரவிக் கிடக்கின்றன. இந்நிகழ்ச்சி ஒரு வீட்டில் மட்டும் நிகழவில்லை. பல வீடுகளிலும் நிகழ்கிறது. அதனால் தெருக்களில் போவோர் சாந்தில் வழுக்கி விழும் அளவிற்கு இருக்கிறது என்று முத்தொள்ளாயிரம் ஊடலின் சிறப்பை எடுத்தோதுகிறது.

காலங்காலமாய் செய்யுள் வடிவிலேயே செய்திகள் சொல்லி வந்த இலக்கியம், தற்போது உரைநடை வடிவத்தைப் பெற்றிருக்கிறது. கதை கேட்பதும், கதை சொல்வதும் தமிழர்களுக்குப் புதியதல்ல. ஆயினும் இலக்கிய வடிவில் அவை மாற்றம் பெற்றுள்ளன. இலக்கணம் இல்லாச் சுதந்திரத்தோடும், உணர்விலிருந்து எழுந்த உணர்ச்சி வேகத்தோடும் புறப்பட்ட புதினங்களும் சிறுகதைகளும் விளிம்பு நிலை மக்களையும் அவர்களது வாழ்க்கை நிலைகளையும் விவரிக்கின்றன.

சமுதாய உண்மைகளைப் பதிவு செய்து வெளிப்படுத்தும் ஊடகங்களில் புதினம் இலக்கிய வகைக்குச் சிறப்பான இடமுண்டு. கதைகளில் வரும் நிகழ்வுகள் ஒவ்வொன்றும் யாரோ ஒருவரின் வீட்டுக்குள் நிகழ்ந்த நிகழும் நிகழப்போகும் வாழ்க்கையாகவே அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

குடும்ப இயக்கத்தில் பெண்களின் பங்கு மிகுதி. எனினும் கணவரை அரவணைத்துச் செல்லும் அருங்குணங்களைப் பெண் (மனைவி) பெற்றிருக்க வேண்டும். கணவன்-மனைவி முரண்கள் நான்கு சுவர்களுக்கு

அப்பால் போகக் கூடாது என தற்கால இலக்கியங்கள் வரையறை செய்கின்றன.

எழுத்தாளர்களின் நோக்கில், (சிவசங்கரி) பெண்கள் பொருள் ஈட்டலுக்காக வேலைக்குச் செல்வதை வரவேற்கவில்லை என்பதை அவரின் புதினங்களின் வழி அறியலாகிறது. கணவன் பொருள் ஈட்டுகிறான். மனைவி குடும்பத்தைக் கவனித்துக்கொள்கிறாள். குடும்பப் பராமரிப்புப் பொருள் ஈட்டலுக்கு இணையானது என கருதுகிறார்.

பெரும்பாலான கதைகளில் ஆடவர்கள் மறுமணம் செய்பவர்களாகக் காட்டப்பட்டுள்ளது. பெண்ணின் இரண்டாவது மணம் ஏட்டளவில் கூட எட்டப்படவில்லையோ என்கிற ஐயப்பாடு எழுகிறது.

புதினங்களில் கணவன் தீய பழக்க வழக்கங்களுக்கு ஆட்பட்டாலும், பிற நிலைகளில் மனைவியைப் புறக்கணித்தாலும் பெண்கள் தன்னம்பிக்கையுடன் செயல்படுவதை வெளிக்கொணர்ந்துள்ளனர்.

கணவனின் மிகைப் பாலியலில் வெறுப்புற்றுப் பிரிந்து வாழும் மனைவியர்களையும் படைத்துள்ளனர்.

மிகைப்பாலியல் ஆர்வம், வக்கரபுத்தி, வசதி, ஆடம்பரம். ஆதிக்க உணர்வு என்ற நிலையில் கணவனைச் சார்ந்து சிக்கல்கள் முகிழ்க்கின்றன.

குடும்பம் சமூகத்தின் இன்றியமையாத முதன்மை அங்கம் எனலாம். மாறிவரும் சமூகச் சூழலுக்கேற்பக் குடும்பத்தின் மதிப்புகளும் மாற்றம் பெறுகின்றன. குடும்ப நிலையில் மரபுகளும் மாற்றங்களும் முரண்படுவது இயல்பெனலாம். முரண்பாட்டில் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும்

ஏற்படுவது எதார்த்த நிலையாகும். இந்நிலையைத் தற்கால எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளில் பதிவு செய்துள்ளனர்.

குடும்பத்தை நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பு கணவன் - மனைவி ஆகிய இருவருக்கும் சம அளவில் உண்டு. இந்நிலையை உணராமல் செயல்படுகிற பொழுது சிக்கல் உருவாகுகின்றது.

தமிழ்ப்பெண் எதையும் விட்டுக் கொடுக்கும் இயல்பினள். ஆனால் கணவனை மட்டும் பங்குபோட விடமாட்டாள். சந்திரா தன் பிள்ளைகளின் நலத்தைக் கருத்தில் கொண்டு கணவனின் இரண்டாந்தாரத் திருமணம் என்கிற முடிவுக்கு வருகிறாள். குழந்தைகளுக்குத் தந்தையாக ‘பகலில் மட்டும்’ வந்து செல்லுங்கள் என்று தன் கற்பையும், தன் மானத்தையும் காப்பாற்றிக் கொள்ளும் பெண்ணாகக் காணப்படுகிறாள். கணவன் வீட்டிற்கு வராமல் இருந்தால் இவளை வாழாவெட்டி என்றோ, இல்லை வேறுவிதமாகவோ ஊர் பேசும் என்பதற்காகத் தனக்குக் கணவனாக வேண்டாம். குழந்தைகளுக்குத் தந்தையாக இருந்தால் போதும் என்றும், உடல் சார்ந்து துன்பம் தரும் கணவனுக்கு, அவனுடைய மிகைப்பாலியல் செய்கைகளைக் கட்டுப்படுத்துவதற்காக வேறொரு பெண்ணை மனைவியே திருமணம் செய்து வைக்கும் முற்போக்குச் சிந்தனையுடன் வாழும் பெண்ணைப் புதினத்தில் காணப்படுகிறது.

மனைவி சுகம் தினம் வேண்டுமென்ற நினைப்பு உடைய கணவனை; உடல் சார்ந்தும், உள்ளம் சார்ந்தும் தீங்கிழைக்கும் கணவனைப் பெண் உதறித்தள்ளவும் தயங்கமாட்டாள் என்பதை நிருபிக்கின்ற விதமாய் தற்காலப் புதினங்கள் அமைந்துள்ளன.

வக்கிரமான பாலுணர்வு வெறி, பிறரைத் துன்புறுத்தி இன்பம் அனுபவிக்கும் இயல்பு உடைய கணவன், மனைவி எதிரில் இருக்க, விலைமகளிடம் உறவு கொள்கிறான். பொறுமையின் எல்லையை மனைவி மீறி மணமுறிவு செய்ய முடிவு செய்கிறாள்.

வாழ்க்கைத் துணையாக வந்த பெண்ணிடம் கணவன் மனித குணங்களோடு இயங்குகிற போது இல்லறம் இனிமையாக அமையும். மிருகக் குணங்களுடன் கணவன் செயல்படுகிற போது மனைவி முடிந்த அளவிற்குப் பொறுக்கிறாள்; பொறுமை கடந்த நிலையில் கணவனைப் புறக்கணிக்கவும் தயங்காதப் பெண்களைப் புதினங்களில் காணமுடிகிறது.

வாழ்க்கையை வசதிப்படுத்திக் கொள்வதற்குப் பொருள் முக்கியம் அப்பொருளை நேரிய முறையில் பெற்று வசதியாக வாழும் போது வாழ்வியல் சூழல்களில் முரண்பாடுகள் தோன்றுவதில்லை. நெறி பிறழ்ந்த முறையில் பொருள் பெற்று வசதியையும் ஆடம்பரத்தையும் அடைய நினைக்கும் வாழ்வில் முரண்பாடுகளும் சிக்கல்களும் உருவாகின்றன.

தனக்குத் துரோகம் இழைத்து வேறொரு பெண்ணை மணந்த கணவனை உதறித் தள்ளும் பெண்களைத் தற்காலப் புதினங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

கட்டிய மனைவியை விட்டுவிட்டு வெளிநாடு சென்று அங்குப் பொருளுக்காக வேறொருப் பெண்ணைத் திருமணம் முடிக்கும் கணவன். வாழ்வதற்குப் பொருள் அவசியம் என்பதை உணர்த்த, முறை தவறி சேர்க்கும் பொருள் தனக்குத் தேவையில்லை என்று கணவனையும்

புறந்தள்ளி வைக்கும் சில பெண்களின் தற்கால நடைமுறை வாழ்க்கையினைப் புதினங்கள் சித்திரிக்கின்றன.

பொருள் தேடுவதற்கு வெளிநாடுகளுக்குச் செல்லும் ஆண்கள் அங்கேயும் திருமணம் செய்து கொள்வதும், அந்நாட்டுப் பெண்ணிற்கும் தாய்நாட்டுப் பெண்ணிற்கும் துரோகம் இழைப்பதும், பெண்களில் படித்தவர்களும், படிக்காதவர்களும் இதற்கு விதிவிலக்கல்ல என்பது பெறப்படுகிறது.

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் மதிப்புக் கொடுத்து வாழ்ந்தால், அது வெற்றி பெற்ற வாழ்க்கையாகும். குடும்பத்தின் இயக்கத்தில் கணவனைச் சார்ந்து மட்டும் சிக்கல்கள் தோன்றுவதில்லை; மனைவியைச் சார்ந்தும் சிக்கல்கள் தோன்றுகின்றன என்பதைப் படைப்பாளர்கள் தங்கள் புதினங்களில் பதிவு செய்துள்ளனர்.

மனைவியானவள் கணவனுக்கு அமைந்த நண்பர்களில் சிறந்தவளாகவும், அவனுடைய செல்வம், மகிழ்ச்சி, நன்மை ஆகிய அனைத்திற்கும் காரணமாகவும் குடும்பத்தின் நிலைபேற்றிற்குக் காரணமாகவும் விளங்க வேண்டும். தன்னைவிட கணவன் குறைவான ஊதியம் பெறும் போது அவனை அலட்சியப்படுத்தும் பெண்களைப் புதின ஆசிரியர்கள் நடைமுறை உண்மைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வருகின்றனர்.

கணவன் மனைவி ஒருவரையொருவர் மதித்தும் விட்டுக் கொடுத்தும் வாழும் நிலையில்தான் குடும்பச் சக்கரம் சுழலும். இருவரில் ஒருவரையொருவர் மதிக்காவிட்டால் குடும்பத்தில் சீர் குலைவு ஏற்படுவது இயல்பாகும். ஒருவரையொருவர் வணங்கி நடக்க வேண்டாம்; இணங்கி நடந்தாலே போதும் இல்லறம் சிறப்பாகும்.

உண்மையான அன்பு கொண்டு வாழும் கணவனிருக்க, பொய்யான மாயைத் தோற்றத்தில் மயங்கி வேறொரு ஆடவனோடு செல்லும் பெண்களையும் இக்காலப் புதினங்கள் விளக்குகின்றன.

பழமைச் சமூகச் சூழலில் ஆணாதிக்கம் பெண் சமூகத்தாரால் விரும்பியோ, விரும்பாமலோ ஏற்றுக் கொள்ளப் பெற்றிருந்தது. கல்வி போன்ற விழிப்புணர்வுக் காரணிகளால் இக்காலச் சமூகம் விழிப்புணர்வு பெற்றிருக்கிறது. இச்சூழலில் ஆண் சமூகத்தில் பெண் சமூகமும் ஆதிக்க நிலையிலிருந்து விடுபட்டு, இணங்கி வாழும் சூழலில் இயங்குவதற்கு வாய்ப்பு உருவாகியிருக்கிறது. எனினும் அவ்வாய்ப்பு நன்முறையில் பயன்படுத்தப் பெறாத நிலைகளும் சமூகத்தில் நிலவி வருகின்றன.

விலைமகளாக வாழ்ந்தவள் என்று தெரிந்திருந்தும் அவளைத் திருமணம் செய்துவிட்டு, அவள் மேல் சந்தேகம் கொள்ளும் கணவனோடு வாழாமல் பிரிந்து போகும் பெண்களும் சித்திரிக்கப்பட்டுள்ளனர்.

கோவலன், மாதவி ஆடற்கணிகை என்று தெரிந்தும் திருமணம் செய்து, பனிரெண்டு ஆண்டுகள் அவளோடு குடும்பம் நடத்திவிட்டு, மணிமேகலையும் பிறந்த பிறகு அவளை விட்டுச் செல்வதை

இலக்கியங்கள் காட்டுகின்றன. எத்தனைக் காலமானாலும் ஆண்களின் ஐயஉணர்வில் பெண் அடிமை தானோ என்கிற அச்சவுணர்வு ஏற்படுகிறது.

மூத்த மகளின் கணவனுக்கு இளைய மகளை வைத்து வலைவீசும் சிற்றன்னை, பண்பான மனைவி இருக்கும் போது இரண்டாவது திருமணம் செய்து கொள்ளும் கணவன், அக்காவுக்குத் துரோகம் செய்யும் தங்கை என ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் வந்து கொண்டே இருக்கிறார்கள் என்பதை இலக்கியங்களின் வாயிலாகச் சமுதாய அவலங்களைப் படம்பிடித்துக் காட்டமுடியும் எனப் புதின ஆசிரியர்கள் நிரூபித்துள்ளனர்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் கதை நடப்பதாக உள்ளதால், அக்காலச் சூழலுக்கேற்ப கதை அமைக்கப்பட்டிருக்கிறது. அக்காலச் சூழலில் இருந்த பரத்தைமை, விலைமகளிர், மனைவியின் தங்கையை மணக்கும் ஆணாதிக்க ஆடவர்கள் என்று அத்துணை சிறப்புகளும் விளக்கும் கதையாக கருவாச்சி காவியம் அமைக்கப்பட்டுள்ளது. இருப்பினும் பெருங்கற்புடைய மகளிரைப் போன்று கணவன் எத்துணை தவறிழைத்தாலும் அவனை அன்போடு நேசிக்கும் பெண்ணாக கருவாச்சிப் படைக்கப்பட்டுள்ளாள்.

ஊமை கண்ணகிகள் இன்னும் நாட்டில் உலா வந்து கொண்டிருக்கின்றனர் என்பதை ஆனந்தாயி என்ற புதினம் எடுத்துக் காட்டுகிறது.

சங்க இலக்கியத்தில் தலைவன் பரத்தையிடம் செல்ல 'பாணன்' உதவுவது போல இக்காலத்திலும் சிலர் தரகர்களாகச் செயல்படுகிறார்கள் என்பதையும், சங்க காலத்தில் பாணனைப் படர்க்கை நிலையில் வைத்து

வாயில் மறுப்பதைப் போன்று இக்கதைத் தலைவி, தரகனை விரட்டுவதிலிருந்து பெறப்படுகிறது.

மனைவிக்குத் தெரிந்தே தன் வீட்டிலேயே கள்ளக்காதலை வைத்திருக்கும் ஆண்களைப் பெண்கள் எதிர்த்துப் பேசினால் அவர்களுக்கு அடி, உதை தான் கிடைக்கும் என்பதை ஆனந்தாயி புதினம் காட்டுகிறது.

இன்றைய பொருளாதாரச் சூழலில் இருவரும் வேலைக்குச் செல்பவர்களாக இருக்கிறார்கள். நகரத்தில் வாழும் தம்பதியினர் வாரத்தில் ஆறு நாட்கள் பிரிந்திருந்து ஞாயிற்றுக்கிழமைகளில் ஒன்று சேர்கின்றனர். உண்மையான அன்பின்றி; மனிதக் காதல் இல்லாமல் வெறும் உடற்பசிப் போக்கும் மிருகத்தனம் மட்டும் காணப்படுவதை இக்கால சிறுகதை, புதினங்களின் வழி அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. ச.வே.சுப்பிரமணியன், சிலப்பதிகாரம், முன்னுரை.
2. சிலம்பு நா.செல்வராசு, சிலப்பதிகாரம் (ஆய்வுக்கோவை) கட்டமைக்கும் குடும்பம் சமூகவியல் ஆய்வு, ப.71.
3. தொல்.பொருள்.பொருளி.நூ.229.
4. நாலடியார், பா.384.
5. சிலம்பு: குன்றக்குரவை, 4-6.
6. மணிமேகலை 7: 50-52.
7. சீவக.சிந்.குணமாலை, செய்யுள் 852.
8. மேலது, 1017.
9. மேலது, 1019.
10. மேலது, 1020.
11. திருக்குறள், 1273.
12. மேலது, 1274.
13. மேலது, 1310.
14. மேலது, 1327.
15. மேலது, 1326.
16. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.278.
17. தொல்.பொருள்.பொருளி. நூ.22.
18. சிலம்பு நா.செல்வராசு, வள்ளுவப் பெண்ணியம், ப.107.
19. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.293.
20. திருநாவுக்கரசர் தேவாரம், பொது. பதிகம் 309, பா.1.
21. கலி: 98.
22. கலி: 97: 11.
23. கலி: 96: 6.
24. கலி: 95: -6.

25. நற்: 20: 9-11.

26. இந்திரா பார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம், பக்.286-288)

27. வ.த.இராமசுப்பிரமணியன்(உ.ஆ), பெரியபுராணம், ப.325.

28. மேலது, ப.327.

29. மேலது, ப.327.

30. மேலது, ப.352.

31. திருநீலகண்டர், 5.

32. தா.ஈசுவரபிள்ளை, பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை, ப.235.

33. திருவாரூர் மும்மணிக்கோவை: 19.

34. ஆண்டாள், திருப்பாவை, பா.29.

35. எச்.ஏ.கிருஷ்ணபிள்ளை, இரட்சணிய மனோகரம், பா.332, 335, 337, 338.

36. நம்மாழ்வார் திருவாய்மொழி 5:4:4:1-2.

37. திருமந்திரம் பா. 2833.

38. நா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.95.

39. திருஞானசம்பந்தர் புராணம், 134.

40. கம்ப.பாலகாண்டம் தொகுதி-2, பூக்கொய் படலம், பா.986.

41. மேலது, பா.989.

42. மேலது, பா.990.

43. மேலது, பா.991.

44. மேலது, பா.993.

45. மேலது, பா.995.

46. மேலது, பா.992.

47. மேலது, பா.999.

48. கம்ப.பாலகாண்டம் தொகுதி-2, உண்டாட்டுப் படலம், பா.1047.

49. திருக்குறள், 1281.
50. கம்ப.பாலகாண்டம் தொகுதி-2, உண்டாட்டுப் படலம், பா.1074.
51. மேலது, பா.1075.
52. மேலது, பா.1077.
53. மேலது, பா.1077.
54. நாச்சியார் திருவாய்மொழி, 4.
55. கம்ப.பாலகாண்டம் தொகுதி-2, உண்டாட்டுப் படலம், பா.1079.
56. மேலது, பா.1079.
57. பரி.7: 68-76.
58. மேலது, 7: 75-76.
59. பழ. பழனியப்பன், இராமாயண சாரம், பக்.182-183.
60. சரளா இராசகோபாலன், திருவள்ளுவரின் காமத்துப்பால், ப.161.
61. அ.கு.ஆதித்தர், நற்றிணைச் சொற்பொழிவு, ப.35.
62. மு.கு.ஜகந்நாதராஜா, காதா சப்த சதி, ப.25.
63. மேலது, ப.33.
64. மேலது, பக்.38-39.
65. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப.42.
66. மேலது, ப.44.
67. மு.கு.ஜகந்நாதராஜா, காதா சப்த சதி, ப.25.
68. அருணாச்சலம், புறநானூற்றுப் பாடல்களில் அகம், ப.92.
69. சீ.பக்தவசல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.336.
70. ஹரி.விஜயலெட்சுமி, ராஜம் கிருஷ்ணன் புதினங்களில் பெண்மாந்தர், ப.303.
71. சிவசங்கரி, மூக்கணாங்கயிறு, ப.108.
72. மேலது, ப.108.
73. மேலது, ப.110.

74. மேலது, ப.111.

75. சிவசங்கரி, பாலங்கள், ப.76.

76. சிவசங்கரி, பொய், ப.121.

77. மேலது, ப.133.

78. பாரதியார், பாரதியார் கவிதைகள்,ப.246.

79. சிவசங்கரி, ஆயுள்தண்டனை, ப.196.

80. மேலது, பக்.197-198.

81. மேலது, ப.199.

82. க.மோகன், தமிழ்ப்பொழில், (சிலம்பு உளப்பாகுபாட்டுடன் பெண்மைச் சிதைப்பு), பக்.262-263

83. சிவசங்கரி, வெட்கம் கெட்டவர்கள், ப.138.

84. மேலது, ப.139.

85. மேலது, பக்.139-140.

86. வைரமுத்து, கருவாச்சி காவியம், ப. 333.

87. க.மோகன், செந்தமிழ்ச் செல்வி, (கருவாச்சி காவியத்தில் இரட்டைக் காப்பியங்களின் தாக்கம்), ப.45.

88. வைரமுத்து, கருவாச்சி காவியம், ப. 333.

89. சிவகாமி, ஆனந்தாயி, ப. 25.

90. மேலது, ப.45.

91. மேலது, 9-10.

92. அமரர் கல்கி, (ஆனந்த விகடன் 16.7.1931) பெண் தெய்வங்கள், பக்.30-36.

93. மேலது, ப.46.

94. குங்குமம் வாரஇதழ் - 22.10.2006, (ஜி.கௌதம், நிலாக்காயுது, நேரம் நல்ல நேரம்... சிறுகதை, ப.96

## இயல் - 4

### சங்ககால - பிற்கால ஊடல் ஒப்பீடு

தமிழரின் மரபு சார்ந்த தொன்மையான ஒழுங்குபட்ட இல்லற நெறிகளைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இந்நன்நெறிகள் இன்றைய இல்லறத்தைச் செம்மையாக்கும் வல்லமை கொண்டவை. இன்றைய நிலையில் சமுதாயத்தின் வாழ்வியல் கொள்கைகள் மரபிலிருந்து விலகி புதுமை என்ற நோக்கில் கட்டவிழ்ந்து, நிலைமாறிச் சென்று கொண்டிருக்கிறது. இல்லறத்தை நல்லறம் ஆக்க வேண்டிய தலைவனும், தலைவியும் தேவையற்ற, பொருத்தமற்ற காரணங்களுக்காக முன்னிற்கின்றனர். அவரவர் கடமையையும் பொறுப்பையும் மறந்த காரணத்தினால் அமைதியின்மையும் போராட்டமும் அதிகமாகி மனையற மாண்புகள் சிதைந்து வருகின்றன. சமூகத்தின் அடிப்படையாக விளங்கும் இல்லறம் சீர்படுவதற்கு ஒரு காரணியாக அமையக்கூடிய ஊடல் சங்ககாலத்தில் இருந்ததைப் போல் உள்ளனவா; அன்றி பிற்கால இலக்கியங்களில் வேறுபடுகின்றனவா என்பதை ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

#### களவு வாழ்க்கை

ஆணுக்கும் பெண்ணுக்கும் வாழ்வின் இன்பக் கூறுகளுள் ஒன்று திருமண வாழ்க்கை. அத்தகைய இன்பமான இல்லற வாழ்க்கை களவில் தொடங்கி கற்பில் முடிவதாகச் சங்கப் பாக்கள் இயம்புகின்றன. களவானது பிணி மூப்புமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையான, உருவும், திருவும், பருவம், குணம், குலம், அன்பு முதலியவற்றால் ஒப்புமையுடையவராய்த்

தலைமகனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும், எடுப்பவுமின்றி ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது. தமது மகள் பிறர்க்கு உரியவள் என்று இருவீட்டாரும் சம்மதம் கொள்ளாமல் தலைவனும், தலைவியும் காதல் உள்ளத்தினால் எதிர்ப்பட்டுப் புணர்தல் களவு எனப்பெயர் பெற்றது. இக்களவு ஒழுக்கம் அன்போடு புணர்வதால் காமக்கூட்டம் என்று வழங்கப்பட்டது. "களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற்கோடல்"[1] என்பர் இளம்பூரணர். மேலும் வேதத்திற்கு மறை என்னும் பெயரும் உண்டு. பிறரால் அறியப்படாத பொருள் ஆதலின் மறை என வழங்கப்படும். இம்மறைப்போல் பிறரால் அறியப்படாது நிகழ்ந்த புணர்ச்சியாதலின் களவொழுக்கம் மறை என்று பெயர் பெற்றது. தொல்காப்பியர் களவொழுக்கத்தினை அருமறை என்றும் மறைந்தவொழுக்கம் என்றும் குறிப்பிடுவர்.

**கற்பு வாழ்க்கை**

கற்பு என்ற சொல் தொல்காப்பியர் காலம் முதல் இன்றுவரை பெரு வழக்காக வழங்கி வருகின்றது. இச்சொல் "பதிவிரதா தர்மம், களவுக்கூட்டத்தின் பின் தலைவன், தலைவியை விதிப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம், கல்வி, தியாகம், வேலைப்பாடு, சங்கற்பம், ஆணை, கதி என்ற எட்டுப் பொருள்களில் இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளதைத் தமிழ் லெக்சிகன் விளக்குகின்றது"[2] என்பர்.

சங்க இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் கற்பைக் குறிப்பிடுகையில்,

**"மறைவெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்**

**இவை முதலாகிய இயல்நெறி திரியாது**

**மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்**

**பிரிவொடு புணர்ந்த கற்பெனப்படுமே"[3]**

களவு வெளிப்படலும் பெரியோர் செய்விக்கும் திருமணமும் இல்லறத்தில் நெறிமுறைதிரியாத இன்பமும், புலவியும், ஊடலும், உணர்வும், பிரிவும் கூடலும் கற்பெனப்படும் என்பர்.

கற்பைப் பற்றிக் கூறும் போது 'செயீர்திர் கற்பு'[4] என்றும் 'வடுவறு சிறப்பின் கற்பு'[5] என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் கற்பு வாழ்வு என்பது பிறர் பழித்தல் இல்லாத நிலையில் அமைந்திருக்க வேண்டும் என்று எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இதனைத் தலைவன் சொற்திறம்பாடு ஆற்றியிருக்கும் தலைவி 'கற்பு மேம்படுவி'[6] என்று பாராட்டப் பெறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

கற்பு என்ற ஒழுக்கம் திருமணமான பெண்ணுக்கே சுட்டப்படுகின்றது. களவு வாழ்க்கையில், கற்பு பேசப்பட்டாலும் அது தலைவனோடு இணைந்து இருக்கும் பொழுதே முழுமையடைகிறது. இதனை இளம்பூரணர், "கற்பு என்பது மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி"[7] என்றும் நச்சினார்க்கினியர் கற்பைக் குறிப்பிடுகையில் "கணவனைத் தெய்வமென்று உணர்வதென் மேற்கொள்"[8] என்று கற்புக்கு விளக்கம் தருகின்றனர்.

குடும்ப அளவில் ஆண்களால் ஏற்படும் பிரச்சினைகளினால் பெண்கள் மனத்தில் ஏற்படும் அமைதியின்மையும், குடும்பத்தில் ஏற்படும்

குழப்பத்தை நீக்கும் பொருட்டும் அக்காலச் சமுதாயம் அமைத்துக் கொண்ட ஒரு வழிமுறையாகக் ‘கற்பு’ என்ற கோட்பாடு அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

தலைவனும், தலைவியும் கூடும் இல்லறத்தில் பல நிலைகளில் பிணக்கு ஏற்பட வாய்ப்புள்ளது. வறுமையுற்றபோதும், தலைவன் பரத்தைமை மேற்கொண்டபோதும் நெடுநாள் பிரிவின் போதும் இப்படி பல பிணக்குகளைக் களைய மனைவியிடம் பொறுமையும் அன்பும் தேவை. இவற்றை அவளிடம் வளர்க்கும் பொருட்டுக் கற்பு என்ற ஒழுக்க நெறியை வகுத்துக் கொண்டுள்ளனர்.

கற்பு என்ற ஒழுக்க வரையறையைப் பெண்களுக்கென்று மட்டும் வகுத்ததன் மூலம் ஆணாதிக்கச் சமூகத்தினால் ஆண், பெண் இவர்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு ஏற்பட்டுவிட்டது. கற்பு சமன் கோட்பாடாக அமையாத நிலையே ஆணாதிக்கப் போக்கிற்குக் காரணமாக அமைந்துள்ளது. “கற்பு நிலை என்று சொல்ல வந்தால் அதை இரு கட்சிக்கும் பொதுவில் வைப்போம்”(9) என்ற கொள்கையே ஏற்புடையதாகும்.

தலைவனும், தலைவியும் களவுக்குப்பின் கற்பொழுக்கத்தில் இருக்கும்போது தத்தமக்குக் களவுக்காலத்தில் நிகழ்ந்த சந்திப்பு அருமைகளைச் சொல்லி அளவளாவுதல் ஒரு நல்ல மன ஆறுதலைத் தரும். அவ்வேளையில் பிற குடும்பச் செய்திகளைப் பேசுதல் கூடாது.

இல்லறம் புகுந்தபின் ஒரு தலைவனும், தலைவியும் தமது களவுக் காலத்து நிகழ்ச்சிகளைக் கண்டு நாணுவர். அவ்வாறு நாணுவது கூட ஒரு நல்ல இல்லற மாண்பாகும் என்று அன்று கருதப்பட்டது.

**குடிமரபு**

இல்லறம் புகுந்த தலைவி தனது முன்னோர் வழிக் குடிமரபு வழுவாது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களின் வழி நடக்க வேண்டும் என்பது இல்லற மரபாகும். சிறந்த தலைவியைப் பெற்றுவிட்டோம் என்பதைப் பிறரும் தனது தலைவியும் அறிந்து உள்ளங்கொள்ளுமாறு அதனை வெளிப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் தலைவியும் பிறரும் மகிழ்வர். இதனைத் தொல்காப்பியர்.

**"நன்னெறிப்படரும் தொல்நலப் பொருளினும்**

**பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇ"**[10]

என்று கூறுகின்றார்.

**ஊடல்**

கற்புக்காலத்தில் ஊடல் தலைவியிடத்து நிகழும். தலைவனின் பல மனைவியரிடையே தோன்றிய பூசல் ஊடலாகக் கொள்ளப்படுகிறது. ஒருவனின் பல மனைவியர் இடையே நிகழ்ந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் எனப்பட்டது. பலதார மணத்திற்கு எதிராக எழுப்பப்பட்ட முதல் குரல் ஊடலில் தான் தொடங்கியது ஊடல் ஒன்றிணைந்த உள்ளங்கள் உறவின் உரிமைக்குப் போராடும் போராட்ட வெளிப்பாடுகளாக உணர முடிகின்றது. இதனைத் தொல்காப்பியர்,

"பயங்கெழு துணையணைப் புல்லிப்புல்லாது

உயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகி

அல்கல் முன்னிய நிறையழி பொழுதின்

மெல்லல் சீறடி புல்லிய இரவினும்"(11)

என்கிறார். தான் பரத்தையோடு மருவி வந்தது அறிந்து உள்ளத்தே ஊடல் கொண்ட தலைவியை வேட்கை மிகுதியால் பல அணைகளைக் கொண்ட படுக்கையிடத்து தழுவிய போது அவள் தழுவாமையால் வந்த துயரம் நீங்க அவளது மென்மையுடைய பாதங்களை இரவில் வருடிக் குறையிரந்து நிற்பான். எனவே, தலைவனோடு ஊடுகின்ற தலைவியின் ஊடலை உணர்ந்து உணர்த்தியபின் தழுவுதலே முறையுமாகும்.

"ஊடி யவர உணராமை வாடிய

வள்ளி முதலரிந் தற்று"(12)

என்ற நற்சிந்தனையை உடையவன் தலைவன். பிணங்கியவரை நன்கு புரிந்து கொண்டு அன்பு செய்யாமல் விட்டால் அது வாடிய கொடியை அறுப்பது போன்றதாகும் என வரும் தலைவனின் செயல்பாடும்,

"கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி

அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்

காதல் எங்கையர் காணின் நன்றென

மாதர் சான்ற வகையின் கண்ணும்"(13)

என வரும் தலைமகளின் செயல்பாடும் உறுதிப்படுத்துகின்றன. ஆக அன்பின் வெளிப்பாடுகள் பிரிவின் ஆற்றாமை நிலை, ஊடலின் உரிமை நாட்டம் வழி, அன்பால் ஒன்றிய வாழ்க்கை நெறிக்குத் தொல்காப்பியர் ஆற்றுப்படை அமைப்பதை உணர முடிகின்றது. ஒன்றி வாழ்வதே

வாழ்க்கை என்ற மனையியல் அறத்தை வலியுறுத்தும் சங்ககால இல்லற நெறிப் புலப்படுகின்றது.

**ஊடல் காமத்திற்கு இன்பம்**

காமத்திற்கு இன்பம் ஊடலாகும். அவ்வூடுதலுக்கு இன்பமாவது அதை அளவறிந்து நீங்கித் தம்முள் கூடித் தழுவிப் பெறுவதாகும். "புலவி அண்மைக் காலத்தது, ஊடல் அதனின் மிக்கது"[14] என்பர் இளம்பூரணர். பரிமேலழகரும் ஊடலைப் பற்றிக் குறிப்பிடுகையில் "ஊடலை அளவறிந்து நீங்குதல்"[15] என்று பொருள் குறிப்பர்.

இல்லறத்தின்கண் வாழும் தலைவனும், தலைவியும் ஊடலிலும், காலமறிந்தும், இடமறிந்தும் செயல்பட்டனர். இல்லறத்தின் முதன்மை இடமாகிய கூடலுக்கு அவசியமானது ஊடலாகும். ஊடலினும், 'விருந்தெதிர் ஊடாமை', 'புதல்வர் எதிர் ஊடாமை' என்ற நாகரிகத்தையும் பண்பாட்டையும் கடைப்பிடித்து வாழ்ந்த தலைமக்களைக் காணலாம்.

தலைவனும் தலைவியும் வாழ்ந்த இல்லறத்தில் ஊடலை நீடிக்காமல் கூடுதல் வேண்டும். ஊடலில் வரும் இன்பமே இன்பம் என்பதனை உணர்ந்த தொல்காப்பியரும்,

**"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வருஉம் மேவற்றாகும்"**[16]

என்கிறார். எனவே கூடலுக்கு இன்றியமையாத ஊடலை வெளிப்படுத்திச் சிறிது நேரம் அறிவுறுத்தி; பின்பு மெய்யுறு புணர்ச்சி கொள்வதால் குடும்பத்தில் பிளவில்லை என்ற இல்லற நெறி வகுப்பர் தொல்காப்பியர்.

**புலவியும் கலவியும்**

இல்லற வாழ்க்கையில் புலவி காமத்தைக் கொடுக்கவல்லது. அது சிறிது நீளினும் அதன் சுவை மாறுபடும் என்பதை இல்லறத்தில் உள்ளோர் நன்கு அறிவர். எனவே, தொல்காப்பியர் புலவியின் இறுதியில் தலைவனை அன்போடு இடித்துக் கூறி அவனைத் தழுவுதலே தலைவிக்கு முறையாகும் என்று கூறுவர்,

**"உப்புமைந் தற்றால் புலவி அதுசிறிது**

**மிக்கற்றால் நீள விடல்"**(17)

என்ற வள்ளுவர் கூற்றை உட்கொண்டு 'உப்பு மிக்க வழித்துய்ப்பது சுவையன்றானாற் போல் புலவி மிக்கவழி கலவி இன்பமின்றாம்' என்ற பரிமேலழகரின் உரை நோக்கத்தக்கது. எனவே, புலவியும், கலவியும் அளவோடு இருக்க வேண்டும் என்ற வாழ்வியல் சிந்தனைப் புலப்படும். இத்தகைய மனையற நெறிகள் சங்ககாலம் மட்டுமின்றி அதன்பின் வந்த இலக்கியங்களும் சுட்டுகின்றன என்பது பெறப்படுகிறது.

**ஊடலின் பயன்**

கற்பு வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் உள்ளத்தால் இணைந்து இனிய மனையில் வாழ்க்கை நடத்தும் காலத்தில் சிறுசிறு காரணங்களால் பிணக்குத் தோன்றும். ஊடல் என்பது புறத்தே கோபம் கொள்வது போல் தோன்றி அதே நேரத்தில் அகத்தில் கூட விழைவதாகும். ஊடலின் பயன் தலைவன் தலைவியரின் அன்பு நிலையை அதிகரிக்கப் பயன்படுகின்றன. அதனை அளவறிந்து நீக்குவதால் பயன் கிடைக்கின்றது. ஊடல், உணர்தல் அதன்பின் கூடுதல் இவை காதல் வாழ்வு நிறைவேறப்

பெற்றவர் பெற்ற பயன் என்று குறிப்பிடலாம். உடல், உள்ளம், உயிர் ஆகியவை வளரக் கூடல் மிகவும் இன்றியமையானதொன்றாகும். உள்ளமும் உடலும் ஒருங்கே இயையக் கூடல் அவசியமானது. ஊடல் வேகமாகத் தணிய காமம் மிக முக்கிய காரணமாக அமைகிறது.

தலைவனும் தலைவியும் இணைந்து இன்பமைந்த பின் அவ்வின்பம் சிற்றின்பமெனக் கருதாது பேரின்பமாகவே கொள்ளப்படும். அதற்குத் துணையாக இருப்பது ஊடல். "பிரியாத புணர்ச்சியும் புணராத பிரிவும் உள்ளத்தையும் உடலையும் வளர்க்கா; கெடுக்கும். இடையீடுமிகு உடைய புணர்வு பிரிவுகளே. அன்பை வளர்த்து ஆர்வத்தை மிகுத்து அறிவைத் தூண்டி நெஞ்சினைச் செவ்விதாக்கி உவரா இன்பத்தை நெடித்து தரும்"(18) என்பர் வ.சுப.மாணிக்கனார். இதனைத் தொல்காப்பியர்,

**"காமக்கடப்பினுள் பணிந்த கிளவி**

**காணுங் காலைக் கிழவோற்குரித்தே"(19)**

என்றவாறு தலைவன் தனது தவறினை உணர்ந்து பணிந்து சொல்லும்,

**"அருண்முந்துறுத்த அன்புபொதி கிளவி**

**பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே"(20)**

தலைவியின் அன்பு பொதிந்த சொல்லும் ஊடலின் பயனை உணர்த்துவனாகவே அமைந்துள்ளன. ஊடலின் பயனாகத்தான் இருவரும் தங்களது அன்பு நிலையை உணர்ந்தார்கள் என்பதனை அறிய முடிகின்றது.

அல்லகுறிப்படுதல்

**"உணர்ப்புவரை யிறப்பினும் செயற்குறி பிழைப்பினும்**

**புலத்தலு மூடலும் கிழவோற் குரிய"** (தொல்.பொருள்.கற்பு.15)

என்பர் தொல்காப்பியர். தலைவி இரவுக்குறியிடத்தே தன்னைச் சந்திப்பதற்கு வாய்ப்பாகத் தலைவன் அடையாளமாகச் சில வகை ஒலி எழுப்புவதாகக் கூறிச் செல்வான். இரவில், அந்த அடையாளக் குறியொலி, அவனாலன்றி, இயற்கையாக வேறு வகையில் நிகழ, அதனைத் தலைவன் செய்த அடையாளமாகக் கருதிய தலைவி, குறியிடம் போந்து தலைவனைக் காணாது மீள்வதுண்டு. அந்நிலையில் தலைவன் குறியிடம் போந்து, அக்குறியீட்டினை நிகழ்த்த இதுவும் பொய்க்குறி போலும் எனக் கருதிய தலைவி ஆண்டுச் செல்லாமல் மனைக்கண் இருந்து விடுவாள். அங்குச் சென்ற தலைவன், தலைவியைக் காணாது அல்லகுறிப்பட்ட நிலையில் தலைவன் ஊடல் கொள்கிறான். இதனை,

அல்லகுறிப்பட்ட தலைவனின் மனநிலையை பாரதியார் 'கண்ணம்மா என் காதலி' என்ற பாடலில் பாடுகிறார். கண்ணம்மா தோழியுடன் தான் வருவதாகக் குறியமைக்கின்றாள். குறியிடம் - தீர்த்தக் கரையில் தெற்கு மூலையிலுள்ள செண்பகத் தோட்டம். இரவு வெண்ணிலவு வரும் காலம். பாரதி அந்த இடத்திற்கு வந்து கண்ணம்மாவைக் காணாமல் தவிக்கின்றார். அந்த ஏக்கத்தில்,

**"வார்த்தை தவறிவிட்டாய் - அடிக்கண்ணம்மா**

**மார்பு துடிக்கு தடீ!**

**பார்த்த விடத்தி லெல்லாம் - உன்னைப்போலவே**

**பாவை தெரியு தடீ!"**[21]

என்று பாடுகிறார். 'நோக்கிய எல்லாம் அவையே போல் காணல்' நிலை ஏற்படுகின்றது.

**தலைவனின் மேம்பாடறிதல்**

தலைவனின் மேம்பாட்டினை ஒரு நல்ல இல்லத்தலைவி அறிவாள். அவ்வாறு அறிந்த அவள் அவனது மேம்பாட்டினை வெளிப்படையாக எடுத்துரைக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்த இல்லறம் இனிமையாக இருக்கும். அவனது பெருமைகளைத் தலைவியின் தோழி அல்லது பிறரோ கூறுவதற்கும் சில வேளை வாய்ப்பு வரும். அவ்வாறு கூறும் போது தலைவனைப் பற்றி ஓரளவே அறிந்து பிறர் நிறைவாகச் சொல்லாத பொழுது அவனது விடுபட்ட பெருமைகளை நிறைவு செய்து சொல்வது ஒரு நல்ல மனைவியின் கடமையாகும். இல்லத்தலைவியின் கடமையினைத் தொல்காப்பியர்,

**"..............கிழவோன் பாங்கின்**

**பெருமையில் திரியா வன்பின் கண்ணும்**

**கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின்"**[22]

என்கிறார். இதிலிருந்து தலைவனைப் பிறர் முன் போற்றும் இல்லத்தலைவியின் பண்பினால் இல்லறம் சிறக்கும் என்பது புலனாகிறது.

கணவன் தவறிழைப்பானாயின் இல்லத்தன்மை வாய்ந்த தலைவி அவனைக் கண்டிக்கவும், தடுப்பதற்கும் உரிமையைப் பெற்றிருந்தாள். புறத்தொழுக்கம் கொண்ட தலைவனை 'இல்லில் நுழையற்க' என்று

இடித்துத் திருத்தும் சொல்லுரிமை உடையவள் தலைவி. இதனை,

**"அஞ்ச வந்த உரிமை"**(23)

என்பர் தொல்காப்பியர். தவறிழைத்த ஆடவன் இல்லத்துரிமையும், தலைமையும் பெற்ற தலைவியிடம் இரந்து நிற்க வேண்டும்.

**"பரத்தையினகற்சியிற் பிரிந்தோட் குறுகி**

**இரத்தலும் தெளித்தலும்"**(24)

என்று காட்டுவர். இந்நிலை தலைவனிடம் தலைவிக்கு இருந்த உரிமையையும் தவறினைத் திருத்தும் பண்பினையும் காட்டும். மேலும், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற துறைகளெல்லாம் மனைவியின் உரிமையைப் பறை சாற்றுகின்றன.

பிற்கால இலக்கியமான பத்தி இலக்கியத்தில் கூடல் துறையுண்டு. திருநீலகண்ட நாயனார் பரத்தையிடம் அணுகி வந்ததைக் கண்ட அவர் மனைவி மானத்தால் வந்த மன வருத்தத்தை ஆற்றமாட்டாளாகி ஊடல் கொள்கிறாள். எனினும் மன வாழ்க்கையில் ஆற்ற வேண்டுவனவாகிய அனைத்துக் கடமைகளையும் விதிப்படி செய்து முடித்து மெய்யுறு புணர்ச்சிக்கு மட்டும் இசையாதிருக்கின்றாள்.

திருநீலகண்டர் பரத்தை வீட்டுக்குச் சென்று வந்ததால் ஊடல் கொண்ட மனைவி (அருந்ததிக் கற்பின் மிக்கார்), 'தீண்டுவராயின் எம்மைத் திருநீலகண்டம்' என்று ஆணையிடுகிறார்."(25) கணவன் தனக்கு மட்டுமே உரியவனாக இருக்க வேண்டிய நிலையில் பரத்தையிடம் சென்று வந்தமை தவறு என்பதையும், ஆடவர் கற்புக்கு இழுக்கு என்பதையும் அவர் மனைவி நன்கு உணர்ந்திருக்கின்றார். தவற்றைத் தட்டிக் கேட்கும்

உரிமை இல்லாமையால் தன்னால் இயன்ற அளவுக்கு மெய்யுறு புணர்ச்சியை (உடலால் ஏற்படும் உறவை) மட்டும் தடை செய்கிறாள். சங்க இலக்கியத்திலும் காணப்படாத புதுமையான அறப்போராட்டமாகக் காணப்படுகிறது. இதனைப் பெண்ணியம் என்றும் பெண்ணியப் புரட்சி என்றும் குறிப்பிடலாம்.

**தலைவி தலைவனுக்கு வாயில் மறுத்தல்**

தலைவனிடத்துத் தலைவி வாயில் மறுக்கும் போது 'பரத்தையரின் தலைமாலை களைந்து விட்ட நின் அழகிய மார்பிலே பாடழிந்து தோன்றும் சந்தனம் உன்னைக் காட்டிக் கொடுத்து விடுவதாலும்,"[26] 'புதல்வனுடைய செவ்வாய் நீர் அதனை நனைத்து களைதலால் அடையாளம் வைத்து அனுப்பியவள் வாடுவாள்."[27] என்பதும், மேலும் 'தொடிகழலும் இளையவரான பரத்தையரின் முலைகளிடையே இதழ்கள் எல்லாம் உதிர்ந்தது போக தன் இதழ் வனப்புக் கெட்டுத் தோன்றும், உன் கண்ணி உன்னைக் காட்டிக் கொடுப்பதோடு 'புதல்வன் பற்றி இழுப்பதால் நினக்கு அடையாளமிட்டு அனுப்பியவள் நின் அணிகளைந்த நிலையை நோக்கி ஊடுவாள்."[28]என்பாள் தலைவி.

'நின் தலையில் இருக்கும் பூங்கொத்துகள் உன்னை அடையாளம் காணும் பொருட்டு உன்னவள் வைத்ததை நான் அறிவேன். ஆதலின் புதல்வன் பிடித்து இழுத்து அதனைச் சேதம் செய்தால் அவள் கோபிப்பாள்."[29] அத்துடன் 'பரத்தையோடு நீ ஆடிய துணங்கைக் கூத்தினால் கரை கிழிந்து போன உன் ஆடை உன்னைக் காட்டிக் கொடுத்து விடுகிறது."[30] அதனால், நான் சொல்வதனைக் கேள்! உன்னைப் பெறாத

பரத்தையர் வருந்துவர்; உன் பொய்மைக்கு மயங்கி எப்பொழுதும் உனக்குத் தோற்று இசைந்து விடக் கூடியவள் நான் என்கிறாள். இதனைத் தலைவி,

**'தண்டாப் பரத்தை தலைக் கொள்ள நாளும்**

**புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி மற்றும் யாம் எனின்**

**தோலாமோ நின் பொய் மருண்டு'[31]**

என்பள். ஆதலின் நீ அவள் பால் செல்க! எனக் கூறித் தலைவனுக்கு வாயில் மறுக்கின்றாள்.

**பணிவு**

இல்லறத்தில் இருக்கும் தலைவன், தலைவியர்க்குப் பூசல் தோன்றுவதுண்டு. அப்போது இருவரும் நற்பண்பினைக் கொண்டு புலவி தீர்தல் வேண்டும். அப்புலவி நிகழும் காலத்தில் மட்டும் மனைவி சிறிது கணவனை விட உயர்ந்து காணப்படுதலும் கணவன் அதைப் பொறுத்துக் கொண்டு தாழ்ந்து புலவி தீர்தலும் உண்டு. அப்புலவி நிகழ்ந்ததனால் இல்லறம் வளமுற்றது. இதுவே எழில் மிகுந்த நாகரீக நிலையுமாகும். ஆடவர் பெண்டிர்க்கு உயர்ந்து ஒழுகத் தகுந்த இடத்தில் உரிமையளித்து வாழ்தலே இல்லறத்தின் சிறப்பு. இதனை,

**"மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்**

**நினையுங் கால புலவியுள் உரிய"[32]**

என்றும்.

**"மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்**

**மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப"[33]**

"வணங்கு நிலை பொருதநின் மணங்கமழ் அகலம்

மகளிர்க்கு அல்லது மலர்ப்பு அறியலையே"(34)

என்பதால் பெருமை வாய்ந்த மகளிர் தம் மென்மையினாலும் அன்பினாலும் வன்மை மிக்க ஆடவர்களைப் பணிய வைத்தனர். பெருவீரம் பொருந்திய ஆடவர்கள் கூட புலவிக்காலத்தில் தலைவிக்குப் பணிந்தனர். இதனைப் பதிற்றுப்பத்து,

"ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்

இரவலர் புன்கண் அஞ்சும்"(35)

என்று பெரும் வீரங்கொண்ட சேரமன்னன் ஊடல் காலத்தில் மகளிரிடம் பணிந்தது அறியப்படுகிறது. கணவன், மனைவி இருவரும் இல்வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் தக்கவாறு பல்லாற்றானும் பலவற்றிலும் பகிர்ந்து கொண்டு ஊடியும், கூடியும் உளம் மகிழ்ந்து வாழ்ந்துள்ளனர். இருவரும் எந்நிலையிலும் எஞ்ஞான்றும் சமநிலையே காணப்பெறுவது இல்வாழ்க்கையின் இயல் நெறியாக அமைந்து விளங்கியுள்ளது. சிலப்பதிகாரத்தில், பல படைகளை வென்ற பாண்டியன் பாண்டிமாதேவி ஊடல் கொண்ட 'போது அவளை அமைதிப்படுத்துவதற்காகச் சென்றமை குறிப்பிடத்தக்கது.

**தலைவியின் ஊடலைத் தலைவன் மாற்றுதல்**

ஊடல் கொண்டிருக்கும் தலைவியின் ஊடலைத் தணிக்கத் தலைவன் பலவாறு வேண்டுகிறான். இதனை,

"பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தாள் எருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்
பொய்கைப் பூவினும் நறுந்தண் ணியளே"(36)

என்னும் பாடல் விளக்கும். தலைவன் முற்றும் நல்லவன் ஆயினும் பரத்தைமை உடையவன் என்று தலைவி ஊடினாள். தன் ஒழுக்கத்திற்கு மாசு கற்பிக்கலாமா? பொய்ப் பழி சுமத்தலாமா? என்று தலைவன் சினந்தானல்லன். கோபம் கொள்ளாமல் இது பள்ளியிடைப் பெண்ணின் இயல்பு என்று மகிழ்ந்து புலவி நீக்கி மெய்யின்பம் நுகர்ந்தான். மேயப் போய் வந்த எருமையின் கொம்பில் பகன்றைக் கொடியின் வெள்ளிய மலர்கள் செறிந்து கிடந்தன, அதனைக் கண்ட கன்று இது தன் தாயில்லை என்று மயங்கியதாம் என்று நகையாடி தலைவியின் உள்ளத்தை மாற்றுகிறான். இதனை வள்ளுவர்,

"வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுவாள்
யாருள்ளித் தும்மினீர் என்று"(37)
"தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்தீரோ என்று"(38)

என்று கணவனின் ஒவ்வொரு செய்கைக்கும் குற்றம் கண்டுபிடித்து ஊடும் தலைவியின் செய்கையை தலைவன் மகிழ்வோடு ஏற்றமை புலப்படுகிறது.

**உணர்த்த உணரும் ஊடல்**

பரத்தைமையின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவனை வாயில் மறுக்கும் தலைவி, அறங்கருதி பின் தலைவனை ஏற்றுக் கொள்ளுதல்

உணர்த்த உணரும் ஊடலாகும். "சிறைபனி யுடைத்த சேயரி மழைக்கண்"[39] என சங்க இலக்கியம் உரைக்கிறது. இக்கருத்தினைப் பிற்கால இலக்கியங்களும் பின்வருமாறு இயம்புகின்றன.

**"எம்மா திரமும் புரவலர்த் தேடி யிரந்துழல்வோர்**
**தம்மா துயரந் தணித்தருள் வாணன் றமிழ்ச் தஞ்சைவாழ்**
**நம்மாலி யன்னவர் நாடொறு நாடொறு நல்கவுநீ**
**விம்மா வருந்துவ தென்பிரிந் தாரின் விளங்கிழையே"[40]**

என்று தஞ்சைவாணன் கோவையும்,

**"என்கோட்டி யேழா யிருநிலத்தும் வானத்தும்**
**முன்கேட்டுங் கண்டு முடிவறியேன் - பின்கேட்**
**டணியிகவா நிற்க வவனணங்கு மாதர்**
**பணியிகவான் சாலப் பணிந்து"[41]**

என்று திணைமாலை நூற்றைம்பதும் உணர்த்த உணரும் ஊடலை வெளிப்படுத்துகின்றன.

**உணர்த்த உணரா ஊடல்**

பரத்தைமையின் காரணமாக வாயில் வேண்டி நிற்கும் தலைவனை வாயில் மறுத்து, அன்பில்லாதவன், கொடியவன், என்றுரைத்து இகழ்ந்து வாயில் மறுத்தல் உணர்த்த உணரா ஊடலாகும். இதனை,

**'கலையாகு நின்னிசைக் கண்ணிகொண் டேஎதிர் கன்றுதின்னி**
**புலையா கடக்கவெம் மிற்போக போக புறங்கடையே"[42]**

என்று தஞ்சைவாணன் கோவையும்,

'பாவைநீ புலவியி னீடல் பாவியேற்கு
ஆவியொன் றிரண்டுடம் பல்ல தூற்றுநீர்க்
கூவல்வாய் வெண்மணல் குறுகச் செல்லுமே
மேலிப்பூங் கங்கையுள் விழைந்த வன்னமே"(43)

என்று சீவகசிந்தாமணியும் குணமாலை இலம்பகத்தில் உணர்த்த உணரா ஊடலை விளக்குகிறது.

**வாயில்கள்**

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின வாயில்களென்ப"(44)

ஆகிய பன்னிருவரும் தலைவன், தலைவியரின் உள்ளம் பிணிந்த வாயில்கள் ஆவார். "இந்த வாயில்களோடு தலைவனது ஆற்றாமை தன்னையும் அவன் புதல்வனையும் ஆடை கழுவுவாளும் சேர்ந்துக் கூறுதலும் உண்டு."(45) இவ்வாயில்கள் கற்பிற்குரியராவர். "எனினும் இவர்கள் துறவுக்கும் உறுதுணையாவார் என்று கூறுவர் நச்சினார்க்கினியர்."(46) எனவே,. இவ்வாயில்கள் இல்லற வாழ்க்கைக்கு உறுதுணையாக இருப்பவர்கள் என்பதனை அறிய முடிகின்றது.

**வாயில்களின் நோக்கமும் பயனும்**

வாயில்கள் கூற்று நிகழ்த்துவதில் சில வரையறைகள் உள்ளன. பெரும்பாலும் வாயில்கள் தலைவன், தலைவியர்க்கு மனமகிழ்ச்சொல் நிகழ்த்துதலையே நோக்கமுடையராயிருப்பர்.

"எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்

புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப"(47)

என்பர் தொல்காப்பியர்.

"உண்கடன் வழிமொழிந்திரக்குங்கால் முகனுந்தாம்

கொண்டது கொடுங்குக்கங்கால் முகனும்வே

நாகுதல் பண்மிவ்வுலகத்தியற்கை"(48)

என்ற கலித்தொகைப் பாடலடிகளில் தோழியின் கூற்று வாயிலாக அறிய முடிகின்றது. இல்லற வாழ்க்கையில் தலைவன், தலைவியரை மகிழ்ச்சியுடன் வாழ வைப்பதும் அவர்கள் தவறுச் செய்யும் போது தவறினை மறைமுகமாகச் சுட்டிக்காட்டுவதும் வாயில்களின் நோக்கமும், பயனுமாக இருந்தது. வாயில்களின் கடமையினால்தான் இல்லறம் வளமுற்றது என்பதும்; குடும்பத்தில் பிளவில்லை என்பதைனையும் சங்க இலக்கியத்தின் வழி அறியலாகிறது.

**தோழியின் பங்கு**

தலைவன், தலைவியரின் களவு வாழ்க்கையிலும், கற்பு வாழ்க்கையிலும் தோழியின் இடம் சிறப்பிடம் பெற்றுள்ளது. தலைவியின் நிலையைத் தலைவனுக்கும் தலைவனின் நிலையைத் தலைவிக்கும் புரிய வைப்பதில் இன்றியமையாத பங்கு வகிப்பவள் தோழி. பரத்தையிற் பிரிவில் ஒழுகும் தலைவனின் செயலைக் கடிந்துரைக்கும் மாண்பு தோழிக்குரியது.

**வாயில் மறுத்தலும், வாயில் நேர்தலும்**

தோழி தலைவியின் மன உணர்வினையும், தலைவனின் புறத்தொழுக்க ஈடுபாட்டையும் மனத்திற்கொண்டு வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற செயலை மேற்கொள்வாள். தோழியானவள்,

**"விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்**

**......................................**

**உள்யாதும் இல்லதோர் போர்வையம் சொல்லே"(49)**

என்றவாறு தலைவியின் மனவோட்டங்களை நன்கறிந்து செயல்படுவாள். தலைவன் நீண்ட நாட்கள் பரத்தையிற் பிரிந்திருத்தல், தன் பரத்தமைக்கு நாணாதிருத்தல், அத்தவற்றிற்காக வருந்தாதிருத்தல் போன்ற பல காரணங்களால் தோழி வாயில் மறுப்பாள். தலைவன் வாயில் வேண்டி, தலைவியின் உறவுக்கு ஏங்கும்போது மனம் இரங்கிய தலைவியின் மனநிலையும் தோழி வாயில் நேரக் காரணமாகிறது. தலைவியின் மனவோட்டங்களை, எண்ணங்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் தோழி விளங்கியது புலனாகிறது.

**தோழிக்குரிய மரபு**

புலவியும் ஊடலும் பெரும்பாலும் தலைவிக்குரியவேனும் சில வேளை தலைவனிடம் நிகழ்தல் உண்டு.

**"உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்**

**புலத்தலும் ஊடலும் கிழவோர்க்குரிய"(50)**

தலைவி ஊடிய வழி தலைவன் தேற்றத் தலைவி தேறும் எல்லையை இகந்தனளாயினும் (கற்பில்) அல்லகுறி பட்டதன் காரணமாகத் தலைவி

வாராமை குறித்தும் (களவியல்) தலைவனிடம் ஊடல் நிகழும் என்பர். இறையனார் களவியல் ஆசிரியர் முன்னதை 'உணர்ப்புவயின் வாரா ஊடல்' எனக் குறிப்பிடுவர்"[51] இச்சமயத்தில் தோழி தலைவனை நெருங்கிப் பிணக்கினைத் தீர்க்க முயலுவாள்,

**"அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்**

**புலந்தாரைப் புல்லா விடல்"[52]**

என்று தலைவி குறிப்பினால் தோழி கூற்று வந்ததைக் காணலாம். இங்ஙனம் தோழி கூறுவதின்றி; தலைவியும் கூறுவாள். இதனை,

**"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்**

**தானூட யானுணர்த்த தானுணரான் - தேனூறும்**

**கொய்தார் வழுதிக் குளிர்சாந்தணியகலாம்**

**எய்தா திராக்கழிந்த வாறு"[53]**

என்பதைப் பிற்கால இலக்கியமான முத்தொள்ளாயிரப் பாடலால் அறியலாம். சில வேளை தலைவனிடம் தோழி பணிமொழியும் கூறுவாள்; கடுமொழியும் கூறுவாள் என்பதிலிருந்து இல்லற வாழ்க்கையில் ஊடலைத் தீர்த்து வைப்பதில் தோழியின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். உணர்ப்புவயின் வாரா ஊடல் சங்க இலக்கியத்தினைப் போலவே பிற்கால இலக்கியத்திலும் காணப்படுகின்றன.

உணர்ப்புவயின் ஊடலாக இல்லாமல், வலிந்து ஊடல் கொள்ளும் தலைமகனைச் சிலப்பதிகாரம் எடுத்துரைக்கிறது.

**"ஆடலும் கோலமும் அணியும் கடைக்கொள**

**ஊடல் கோலமோடு இருந்தோன் உவப்பப்"[54]**

மாதவியின் ஆடலும் அதற்குரிய கோலங்களும் தன்னைக் கவர்ந்ததைப் போல், மாதவியின் ஆடலைப் பார்த்தவர்கள் அனைவரையும் கவர்ந்திருக்கும் என்ற எண்ணம் கோவலன் உள்ளத்தில் எழ, அதனால் ஊடல் கோலத்தில் இருந்தான். அவ்ஊடலை மாற்ற விரும்பிய மாதவி, அவன் மகிழும் நிலைக்குத் தகத் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள்.

**"பத்துத் துவரினும் ஐந்து விரையினும்**

**முப்பத் திருவகை ஓமாலிகையினும்**

.............. ................ ............... ..............

**கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்து**

**பாடு அமை சேக்கைப் பள்ளியுள் இருந்தோள்"(55)**

என்று மாதவி, பலவித மணப்பொருட்களாலும், நேர்த்தியான அணிகலன்களாலும் தன்னை அழகுற ஒப்பனை செய்துகொள்கிறாள். அணிகலன்களை எல்லாம் அணிந்து அவனின் ஊடலைத் தணித்ததனைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது. சினம் கொண்டு இருக்கும் தன் கணவனை அல்லது காதலனைப் பெண்கள் தங்களை அழகுபடுத்தி, இனிய மொழிகளால் பேசி இன்பப் புணர்விற்கு அழைத்தமைப் புலனாகிறது.

**கோவலனின் ஊடல் சினமாக மாறி மாதவிக்குப் பிரிவுத்துயரைத் தந்தது**

கோவலன் காவிரியை நோக்கிப் பாடிய ஆற்றுவரிப் பாடல்களில், திங்கள் மாலை வெண்குடையாகிய சோழன், கங்கையைப் புணர்ந்தாலும் காவிரி அது குறித்துப் புலத்தல் கூடாது எனவும், அவ்வாறு புலவாது இருத்தலே பெண்களின் பெருங்கற்பாகும் என்றும் (சிலம்பு 7:2,3)

கூறுகின்றது. கணவன் மனைவியன்றி மற்றொருத்தியை எண்ணினாலும் மனைவி அது பற்றிப் புலத்தல் கொள்ளக் கூடாது என்பதிலிருந்து, மாதவியிடம் உறவு வைத்திருந்தாலும் கண்ணகி அதைப் பொறுத்துக் கொண்டாள். அவளே கற்பில் சிறந்தவள் என்று கண்ணகியை உயர்ந்தேத்துகிறான் கோவலன்.

ஆடவர் பல பெண்டிரை மணந்தாலும் பெண்கள் அடங்கியிருத்தல் கற்பிற்கு இல்க்கணம் என்று ஆணாதிக்கச் சமுதாயம் தலைகாட்டத் தொடங்கியதையும் கோவலனின் ஊடல் சினமாக மாறி மாதவியைப் பிரித்தது என்பதும் பெறப்படுகிறது.

பரத்தையர்பால் சென்று வரும் தலைவனிடம் ஊடல் கொள்ளும் தலைவியைத் தொல்காப்பியர்,

**"கற்பு வழிப்பட்டவள் பரத்தைய ஏத்தினும்**

**உள்ளத்தூடலுண்டென மொழிப"**(56)

என்றவாறு கற்பு நெறியைப் புலப்படுத்துவர். பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில்லை. இவற்றிற்குக் கற்புத் திண்மையே காரணமாகும்.

**கண்ணகியின் ஊடல் உள்ளத்தூடலுண்டென மொழிகிறது**

இல்லற வாழ்க்கை மேற்கொண்ட தலைவிக்கு முக்கியமான கடமையாக இல்லற நெறி வகுப்பர் தொல்காப்பியர். ஆணிற்குப் புற உலகத் தொடர்பு எளிது. ஒருவனுக்கு அகம் நன்றாக இருந்தால்தான் புறமும் நன்றாக இருக்கும் என்பது உலகியல் இயற்கை. அதனால்தான்

இல்லறத்தில் தலைவி முதலிடம் வகிக்கிறாள். இல்லறத்தை நெறிப்படுத்தும் ஆற்றலும் கற்புநெறியும் பெண்ணிடம் இருப்பதால் கணவன் செயல்களில் அனைத்திற்கும் கைகொடுத்துத் தலைவனின் பணி நிற்றலே தலைவியின் முதற் பெருங்கடமையாகும்.

கணவன் தவறிழைத்தப் போதும் அவனை மன்னிக்கும் ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும் இல்லத்தலைவி. இத்தகைய தலைவி பற்றிக் கூறும் நாலடியாரும்,

**"இடனறிந்து ஊடி இனிதிணரு**

**மடமொழி மாதரான் பெண்"(57)**

என போற்றுகிறது. இவ்வாறு கற்புடைய மகளிர் தன்னுடைய ஊடலை வெளிக்காட்டுவதிலும் கணவனின் மனநிலையை அறிந்து செயல்பட்டார்கள் என்பதனையும் அறியமுடிகிறது.

**"சலம்புணர் கொள்கைச் சலதியொடு ஆடிக்**

**குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைத்த**

**இலம்பாடு நாணுத்தரும் எனக்கு . . ."(58)**

என வருந்திய கோவலனிடம்,

**"நலங்கேழ் முறுவல் நகைமுகம்காட்டி**

**சிலம்புள கொண்ம்"(59)**

எனக் கண்ணகி தன் ஊடலை வெளிக்காட்டாமல் இருந்தமை புலனாகிறது. இதனால் அவள் உள்ளத்தளவிலும் ஊடல் கொள்ளவில்லை என்று பொருளில்லை. பெருங்கற்புடைய மகளிர் தம் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டுள்ளனர்.

சீதை பிரிவுத் துன்பத்தில் வருந்தும் போது, இராமனோடு மனம் மகிழ்ந்து பேசிய செய்திகளை அனுமனுக்குக் கூறுகிறாள்.

**'இந்தஇப் பிறவிக் கிரு மாதரைச்**

**சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்**

**தந்தவார்த்தை திருச்செவி சாற்றுவாய்'**

என அனுமனிடம் கூறுகிறாள். 'திருச்செவி சாற்றுவாய்' என்பதினால் இதை யாரும் அறியாமல் அவன் காதிலே போய்ச் சொல் என்கிறாள். ஏனெனில் கணவன் மனைவிக்கிடையே நடக்கும் உள்ளப் போராட்டமானது வேறொருவருக்கும் தெரிதல் கூடாது என்பதினாலே இவ்வாறு கூறுகிறாள். காதல் வாழ்வில் எத்தனையோ உரையாடல் நிகழ்ந்திருக்கும். இருப்பினும் 'இந்த இப்பிறவிக்கிரு மாதரை' என்பதினால், அன்று சூர்ப்பனகையிடம் தனித்திருந்து பேசிய இராமனை அவள் முழுமையாக நம்பவில்லை என்று தோன்றுகிறது. அதனால் ஏற்பட்ட ஊடல் அவள் உள்ளத்தைத் துளைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். இராமனைத் தன்னைத் தவிர பிறிதொருவர் உரிமை கொள்ளுதல் கூடாது என எண்ணியதால் ஊடல் உள்ளத்திலே ஆழ்ந்து படிந்திருக்கிறது. அன்பின் மிகுதி, அறிவைக் கெடுக்கும்; பூசல் விளைவிக்கும்; கூடல் வேண்டிய இடத்தில் ஊடல் தரும்; அதனால் நாணும் நாடலும் மிகைபடச் செய்யும். ஊடலின் அடிப்படை பரத்தைமை அல்ல; அன்பின் அறியாமை என விளங்குகிறது.

**'வளைபயில முன்கைஓர் மயிலனாள் தனக்கு**

**இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்**

*முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது*

*களகள உதிர்ந்தது களைக்கண் ஆலியே'*

என்ற கம்பர் ஊடலின் சிறப்பையும், அதன் அடிப்படை எத்துணை உண்மைப் பொருள் கொண்டுள்ளது என்பதையும் நன்கு விளக்குகிறார். ஊடல் தோன்றுவதற்குப் பரத்தைமை காரணமாகத் தான் அமைய வேண்டும் என்பதில்லை என்பதும், கற்பு வழிப்பட்டவள் உள்ளத்துள் ஊடல் கொண்டிருப்பாள் என்பதும் பிற்கால இலக்கியங்களிலும் காணப்படுகிறது.

கண்ணகி, சீதையின் ஊடலாக அமைந்திருக்கும் பாடலில் இவ்விரு பெண்டிரின் கற்பு நெறி மேம்படுகிறது. சினந்து கொள்ள வேண்டிய நேரத்தில் சினந்து கொள்ளாமல் இருப்பதிலும் ஆறிய கற்பின் அடங்கிய சாயலாகக் காட்டியிருப்பதிலும் பெருங்கற்புடைய பெண்டிரின் ஊடலை அறியமுடிகிறது. தற்காலப் புதினமான வைரமுத்துவின் கருவாச்சி காவியத்தின் நாயகி கருவாச்சி கண்ணகியைப் போன்று பெருங்கற்புடைய பெண்டிராகப் படைக்கப்பெற்றிருப்பது பெறப்படுகிறது.

**பரத்தமையைக் கண்டித்தல்**

தலைவியின் மேனியை மெலிய செய்தவன் தலைவன். இதனால் அவளுடைய செறிந்த வளையல்கள் நெகிழ்ந்தன. அத்தகைய கொடுமைப் பண்பினைக் கொண்ட தலைவன் பலமுறை பரத்தையரை விட்டு நீங்கி தலைவியிடம் வந்தான். அப்பொழுது தலைவி இனிய முகம் கோணாமல் தெய்வத்தன்மை பொருந்திய கற்புடன் அவனை மகிழ்ச்சியாக வரவேற்றுப் போற்றினாள். இதனைக்கண்ட தோழி முற்றிலும்

அறியாமை மிக்கவள் என்று கூறினாள். தலைவி தோழியின் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு தன் செயலுக்கு அமைதி கூறுவாளாகக் காணப்படுகிறாள்.

தலைவனைப் பாராட்டிக் குற்றத்தினை மறந்துவிடும் இயல்பினள் தலைவி என்பதைத் தோழி நன்கு அறிந்தவள். தலைவனின் போக்கை எண்ணித் தலைவிக்கு வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டுவிடக்கூடாது. எனவே அவள் வாயில் வழியாகவே தலைவனைப் புகழ வைத்தால் தலைவனும், தலைவியும் எவ்வாறு வாழ வேண்டும் என்பதை உள்ளடக்கி அதனை நிறைவேற்றும் தோழியின் கூர்த்த அறிவு புலப்படுகின்றது. தலைவனுக்கு அறிவுரை கூறத் தோழி ஒரு போதும் தயங்கவில்லை. புறத்தொழுக்கம் இல்லாது இல்லறம் நடத்துதலே நன்மக்களது நல்லொழுக்கமாகும் இதனை,

**“பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து**

**பெறுதகையில்லாப் பிழைப்பினும் அவ்வழி”**(60)

என்றவாறு கடிந்துரைப்பாள் தோழி. இத்தோழி தொல்காப்பியரால் கூறப்பட முதன்மைப் பண்பிலிருந்து வெளிப்பட்டவள் என்பது பொருந்தும்.

**“வெள்ளி விழுந்தொடி மென்கரும்பு உலக்கை**

........................................

**மெய்யாண்டு உளதோ இவ்வுலகத்தானே”**(61)

என்ற பாடல் தலைவனைத் தோழி தவறினைச் சுட்டிகாட்டி இல்லற நெறி வகுப்பதாகவே சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இவ்வாறு

இல்லறத்தில் தலைவனின் தவறினை உணரச் செய்து சான்றோர்கள் வகுத்த நெறியில் செல்வதே இல்வாழ்க்கை என்ற மனையியல் அறத்தைக் கூறிய தோழியைச் சங்ககாலம் கொண்டிருந்தது.

**ஊடல் தீர்க்கும் முறைமை**

தலைவியை, தலைமகன் நெருங்கி பணிமொழிப் பல கூறித் தான் தவறிலன் எனக்கூறி உணர்த்தவும், அவள் ஊடல் தீராமல் இருந்தால் தோழி தலைவனை நெருங்கிப் பிணக்கினைத் தீர்க்க முயலுவாள். அன்பிலை என கடிந்து கூறுவாள். இதனைக் கேட்ட தலைவி தான் கொண்ட துனி தலைவனுக்கு என்ன துன்பம் தருமோ? நான் இறந்துப்பட்டாலும் சரி அவரை அவ்வாறு கூறாதே என்று கூறுவாள். தலைவியின் அப்பண்புகளைக் கேட்ட தலைவன், தலைவி ஊடல் தணித்துக் கூட விரும்புகின்றாள் என்பதை உணர்ந்து ஊடல் தணிவான். ஒரே வழி அவ்விருவரும் தங்கள் ஊடல் நீங்காது பிணங்கி நிற்பராயின் சான்றோர் முன்வந்து அவ்விருவர் வாழ்க்கையில் ஊடலைத் தீர்த்து இணைந்து வாழ வைப்பர். தலைவனும், தலைவியும் வாழும் இல்லறத்தில் பிணக்கு ஏதேனும் ஏற்பட்டால் அவற்றைக் கடிந்து நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும் வாயில்களின் கடமையாக இருந்தது. இவர்கள் தலைமக்களின் குடும்பத்தில் அக்கறையுடனும் பொதுநலத்துடனும் செயல்பட்டனர். ஊடலைத் தீர்த்து வைத்து; உளவியலை நன்கறிந்து, இருவரையும் கருத்து வேறுபாடு இல்லாமல் ஒன்றாக வாழ வழி வகை செய்தார்கள் என்பதனை,

**"அவன் குறிப்பறிதல் வேண்டியும் கிளவி**

**அகன் மலியூடல் அகற்சிக் கண்ணும்**

**வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறுமே"(62)**

என்று தொல்காப்பியர் இதற்கு விதி செய்வர்.

**"நன்லைந் தொலைய நலமிகச்சாஅய்**

..............................

**புல்லிய தெவனோ அன்பிலங்கடையே"(63)**

என்ற பாடலின் வழியாலும் அறிய முடிகின்றது. தலைவியின் ஊடல் நீளுமாயின் தோழி அவளுக்குத் தக்கதொரு அறிவுரை கூறுவாள். இதனை,

**"புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை**

**அதுபுலந் துறைதல் வல்லி யோரே**

**செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்**

**தாமாட் டுண்டு தமியராகித்**

**தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப**

**வைகுந ராகுதல் அறிந்தும்**

**அறியா ரம்மவஃ துடலுமோலே"(64)**

என்று தோழி, தலைவன் பரத்தையை நாடிச் செல்வதால், அவனுடன் ஊடல் கொள்வதில் ஏதும் பயனில்லை. இல்லறப் பெண்டிர் எதையும் தாங்குதல் வேண்டும். ஊடல் நீட்டித்தால் தனிமையும் வறுமையும் துன்புறுத்தும். எளிய உணவு உண்ண வேண்டும். இனிய புதல்வரும் துன்புறுவர். இதனை எல்லாம் மனதில் வைத்துக் கொண்டு தலைவி ஊடல் கொள்ள வேண்டும் என்று தோழியின் அறிவுரை கூறுவாள். இவ்வாறு குடும்பத்தில் வாழும் தலைவன், தலைவியின் ஊடலைத் தீர்த்து

வைத்து அவர்களை நன்னெறியில் வாழ வழிவகை செய்தவள் தோழியாவாள். இதனை ஆந்திரநாட்டு அகநானூறு என்றழைக்கப்படும் காதா சப்தசதி,

**"முகமதி யத்தை முழுதும் திருப்பி**
**ஏனழு கின்றாய்? இளம்வெள் ளரிக்கொடிக்**
**கொழுந்து போன்ற குடில முடைத்தே**
**காதல் வழியும்! காரிகை! கவலேல்"**(65)

என்று தோழி கூற்று வழியாகக் கூறுகிறது. தலைவி புலவி கூர்ந்திருந்தாள். தோழி தேற்றுவிக்க, மதிமுகந்திருப்பித் தலைவனின் கொடுமை நினைந்து ஏன் அழுகிறாய்? புலவி தீர்ந்து சமாதானம் உறுக. ஏனென்றால் காதல் வேட்கைகள் வெள்ளரிக் கொடியின் கொழுந்து போல நேர்மையற்ற வழியில் சுற்றித்திரியும் இயல்பினது. கொழுந்து கிடைத்ததைப் பற்றிக் கொள்ளும். அதைத் தடுப்பின் முறிந்துவிடும். அதுபோல காதலன் புலவியினால் நீங்கியிருப்பின் அவன் உள்ளமும் உனது தடையால் முறிவதும் வேறொரு பெண்ணின் தொடர்பால் பற்றுக் கோடாகப் படர்வதும் ஆகிவிடும். ஆதலின் நீ புலவி தவிர்வதே கடனாம் என்றுரைக்கிறார்.

தலைவி தலைவன்பால் ஊடல் கூர்ந்தாள்! தலைவன் வரும்போது வாயில் மறுத்தாள். காதலன் மீது கடுஞ்சினங் கொண்டு ஊடல் தளர்த்தாமல் உறுதியாக இருந்தாள். ஆனாலும் அவ்வூடல் நிலைக்குமா? குறுமணலை இறுக்கமாகப் பிடிக்கப் பிடிக்க மணல் தளர்ந்து சிந்திவிடும்

அல்லவா? அதுபோலத்தான் இவள் ஊடலுறுதியும்கூட முடிவில் பையப்பயத் தளர்ந்துவிடும் என்று தோழி கூறுகிறாள். இதனை,

**"காதலன் மீதே கடுஞ்சினத் தாலே**
**ஊடல் கூர்ந்தோள் உறுதி மிகினும்**
**பையப்பயத் தளர்ந்து பாழா கிடுமே**
**கைப்பிடி யிறுக்கிய குறுமணை லொத்தே"**(66)

என்ற பாடலடிகளின் மூலம் 'வெற்று ஊடல் கொள்வதில் யாதொரு பயனுமில்லை' என்பது தெளிவாகிறது.

**பிற்கால இலக்கியங்களில் தோழி**

பரத்தையிற் பிரிந்த தலைவனை அதிலிருந்து மாற்றித் தலைவியுடன் வாழச் செய்தலை விரும்புவாள் தோழி. எனவே ஊடல் தணிக்கும் வாயில்களில் தோழியும் குறிப்பிடத்தக்கவள். தலைவன் ஊடல் கொள்ளும் போதும் தலைவி ஊடல் கொள்ளும் போதும் இருவரையும் சந்து செய்து ஆற்றுப்படுத்தி வைப்பவள் தோழி. ஆனால் தற்கால இல்லற வாழ்வில் தோழியின் பங்கு ஓர் இல்லத்தரசிக்கு அவ்வளவாக இல்லை எனலாம்.

புதினம், சிறுகதை போன்ற தற்கால இலக்கியங்களில் தோழி தலைவியின் இளமைக்காலத்தில் அதாவது திருமணத்திற்கு முன்பு பழகுபவளாகக் காணப்படுகிறாள். கடிதங்கள், தொலைபேசி வாயிலாகப் பேசிக் கொண்டாலும் சங்ககாலத் தோழிகளைப் போல் பழக வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. சங்க இலக்கியத்தில் தோழி திருமணம்

செய்து கொண்டதாகப் பாடல்கள் இல்லை. உலகியல் வழக்கில் அவை இருந்திருக்க வாய்ப்புண்டு. தற்காலத்தில் அவரவருக்கென்று தனித்தனியாகக் கடமைகள் வரும்போது மற்றொருவர் வாழ்க்கையில் ஊடாட முடியாத நிலையில் பெண்களின் வாழ்க்கை நிலை அமைந்து விடுகிறது.

திருமணமாகிப் பணிக்குச் செல்லும் பெண்கள் கூட தன் தோழிகளுடன் பேசி, சிரித்து மகிழ்ந்த போதும் இரவுக்குள் அவள் வீடு வந்து சேர வேண்டிய கட்டாயச் சூழல்கள் இருப்பதை நடைமுறை வாழ்க்கையிலும் காணலாகிறது. திருமணமான ஆண்கள் தோழர்களுடன் இருப்பதைப் போல பெண்கள் தோழிகளுடன் கூடி மகிழ்ந்து இன்புறுதல் மிகக் குறைவாகக் காணப்படுகின்றது. எனினும் தோழி, நேரிடையாக தலைவனிடம் சென்று பேசத் தேவையில்லை என்றாலும் இல்லத்தலைவிக்கு நல்ல ஆலோசனைக் கூறும் தோழி இருந்தால் இல்லத்தரசி தனது குடும்பத்தை இனிதாக நடத்த் முடியும் என்பது பெறப்படுகிறது.

**பாணர்**

தலைவன் ஊடலைத் தீர்க்கும் பொருட்டுப் பாணர், கூத்தர், விறலியர் என்றிவர்களை வாயிலாக அனுப்பிய போது, தோழி தலைவியின் பொருட்டு வாயில் மறுத்தலையும், வாயில் நேர்தலையும் மேற்கொள்வாள். இதனைத் தொல்காப்பியர்,

**"பாணர் கூத்தர் விறலியர் என்றிருவர்**

**பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்"**(67)

என்பதன் மூலம் அறியலாம். இருப்பினும் ஊடல் தணிக்கும் வாயில்களாகப் பாணன், கூத்தர், விறலி முதலியோர் விளங்கினர் எனத் தொல்காப்பியம் சுட்டினும், பாணனைத் தவிர ஏனையோர் ஊடல் தீர்க்கும் வாயில்களாக இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை. தோழி, தலைமகள் பாணனுக்கு வாயில் மறுத்ததாகத்தான் பாடல்கள் உள்ளன. பரத்தை, காமக்கிழத்தி கூற்றில் அமைந்த பாடல்களில் பாணர், கூத்தர், விறலி, பாடினி ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை.

**பக்தி இலக்கியத்தில் பாணர்**

சங்க இலக்கியத்தில் ஊடல் தணிக்கும் வாயில்களாகப் பாணர்கள் பாடப்பெற்றனர். தொல்காப்பியரும் இவர்களுக்கென்று விதி செய்துள்ளார். பின்னர் இவர்களின் வாழ்க்கை கேள்விக்குறியாகிப் போவதாக அறியமுடிகிறது. இவர்களிடம் உடல் உழைப்பின்மையாலும், ஆதரிக்கும் வள்ளல்கள் இன்மையாலும் இவர்கள் வறுமையுற்று வாழ்பவராயினர். இருப்பினும் பக்தி இலக்கியம் இவர்களைப் பெருமைபடுத்தியுள்ளமை அறியப்படுகிறது. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரின் வரலாறு பாணர்களின் சமுதாய வாழ்க்கை நிலையைக் காட்டுகிறது. “திருஞானசம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அந்தணர் - பாணர் என்ற வேறுபாடுகள் சிறிதுமின்றி இறை அன்பர்கள் என்ற உயரிய நோக்கில் பழகினும் சாதி வேறுபாடுகளால் புலப்படுத்தும் நிகழ்வுகள் சுட்டப்படுகிறது.”(68) வழிபாட்டு முறைகளிலும் திருவிழாக்களிலும் முதலிடம் பெற்றிருந்த் பாணர்கள் பின்னர் வந்த சமய, சமுதாயப் பழக்க

வழக்கங்களால் இழிநிலை அடைந்துவிட்டனர் என்றும் கருதப் பெறுகின்றனர்.

தற்காலப் புதினங்களில் பாணர்களைப் போல் பெண் தரகர்கள் காணப்படுகின்றனர். சங்க இலக்கியத்தில் தலைவன் பரத்தையிடம் செல்ல 'பாணன்' உதவுவது போல இக்காலத்திலும் சிலர் தரகர்களாகச் செயல்படுகிறார்கள். அவர்களை இல்லத்தலைவி வாயில் மறுத்தலும் நடைபெறுவதை அறியமுடிகிறது. இதனை ஆனந்தாயி என்ற புதினம், "மிளகாய்க்காரன் தண்டபாணி பெரிய வட்டாரங்களுக்குத் தெரிந்தவன். பெண் பிள்ளைகள் சகவாசம் சேர்த்து விடுவதற்கு இவன்தான் ஆள். கூப்பிட்டால் வருபவர்கள் யார் யார்? என்று பட்டியல் வைத்துக் கொண்டு அலைவான்"[(69)] என்று ஆசிரியர் உரைக்கிறார்.

களவு வாழ்க்கையில் பாணர்கள் இடம்பெறுதல் இல்லை. கற்பு வாழ்க்கையில் தலைவனைப் பரத்தைச் சேரிக்கு இட்டுச் சென்றதாக நூற்பாவில் குறிப்பு ஏதும் இல்லை. தலைவியும் தோழியும் பாணனைக் கடிந்துரைப்பதினின்று பரத்தையர் தொடர்பிற்கு இவர்கள் தொடர்பும் துணையாயினமை என காரணிகளால் அறியப்படுகிறது. 'வெகுண்டனள் என்ப பாண'[(70)] 'அம்ம வாழி பாண எவ்வைக்கு எவன்பிரி தளிக்கும் என்ப'[(71)] என்று பரத்தையிடத்துத் தலைவனைக் கொண்டு சேர்ப்பவன் என்று அறியப்படுகிறது. தலைவனோடு கொண்ட நட்பின் காரணமாகவும் கலைகளில் ஈடுபாடு கொண்டமையினாலும் பரத்தையர் தொடர்பிற்குப் பாணன் உதவியிருக்கலாம். இதனையே தொழிலாகக் கொண்டவன் என்பதற்குச் சான்றுகள் கிடையாது என்பது பெறப்படுகிறது.

செவிலி

இல்லற வாழ்க்கையில் செவிலியின் பங்கு ஈடு இணையற்றதாக அமைந்துள்ளது. தலைமகன் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்ட காலத்தில் தலைமகள் அவனுடன் ஊடினாளாக அவ்வூடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருத்தியாகத் திகழ்பவள் செவிலி. இத்தகைய செவிலியின் சிறப்பினைத் தொல்காப்பியர்,

**"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்**

**தாயெனப்படுபவள் செவிலியாகும்"**(72)

என்பதால் ஈன்றதாயினும் சிறந்தவள் இவளென அறியலாம். இவள் ஓர் அன்னையாய், ஆசனாய்த் திகழ்கிறாள். அல்லவை கடிதலால் அறிவுறுத்துபவளும் ஆகிறாள். செவிலியின் பல்வேறு பண்பு நலங்களை ஆராயும்போது அவளை அறிவுறுத்துப் பாத்திரமாக அறியப்படுகிறது. இதனை,

**"தற்காத்துத் தற்கொண்டார் பேணித் தகைசான்ற**

**சொற்காத்துச் சோர்விலாள் பெண்"**(73)

என்ற கருத்தினைத் தலைவிக்கு உரைப்பதும்,

**"எறியென்றெதிர் நிற்பாள் கூற்றும் சிறுகாலை**

**அட்டில் புகாதாள் அரும்பிணி அட்டதனை**

**உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்**

**கொண்டானை கொல்லும் படை"**(74)

என்றவாறு இல்லற வாழ்க்கையில் அல்லவை கடிதலும் செவிலியின் கடமையாக இருந்தது என்பதிலிருந்து செவிலியின் இல்லற மாண்பினை அறிய முடிகின்றது. களவு வாழ்க்கையிலும் கற்பு வாழ்க்கையிலும்

இன்றியமையாத ஒரு பாத்திரமாய் இருந்து தன் பணிகளை எந்தவித மன வேறுபாடுமின்றித் தலைவியின் நல்வாழ்க்கையின் பொருட்டுச் செயல்படுபவளாக உள்ளாள். இத்தகைய சிறப்பினைப் பெற்ற செவிலித்தாயைப் பிற்காலத்தில் நாற்கவிராச நம்பியும்,

**"செவிலி நற்றாய் தோழியாகி**

**அவல நீக்கி அறிவும் ஆசாரமும்**

**கொளுத்தித் தலைவியை வளர்த்ததாயே"**[75]

எனக் கூறியுள்ளார். இவற்றிலிருந்து செவிலியின் இல்லற மாண்பு நெறியும், தலைவன், தலைவியர் இவர்கள் வழிநடத்தலில் இயங்கியுள்ளமையும் அறிய முடிகிறது. செவிலி தலைவியின் குடும்பத்துடன் மிக நெருக்கமான தொடர்பு கொண்டவள். இவள் பொருளிற்காகப் பணி செய்யும் பணிமகள் போலன்றிக் குடும்பத்தில் மேம்பாடான நிலையில் இருந்து தலைவியை வளர்ப்பதில் அன்புணர்வும், கடமையுணர்வும் கொண்டு செயல்பட்டாள் என்பதையும் அறியமுடிகின்றது.

***கற்பில் செவிலியின் பணிகள்***

தலைவி, தலைவனை மணம்புரிந்து வாழும் கற்பு வாழ்க்கையில் செவிலி தலைவியின் மனைக்குச் செல்கின்றாள். அவ்விருவரும் அன்றில் போல் ஒருவரையொருவர் இன்றியமையாராய் அன்பால் கலப்புற்று இன்புற்று வாழ்கின்ற நல்வாழ்க்கையைக் காண்கிறாள். அவ்விடத்தே தன் நெஞ்சும், கண்ணும் குளிரக்கண்ட காட்சிகளை நற்றாய்க்குக் கூறி அவளை மகிழ்விக்கிறாள் இதனைத் தொல்காப்பியர்,

**"வாயில் உசாவே தம்முள் உரிய"**[76]

என்பதால் வாயில்கள் தலைமகற்குரைத்தலன்றி தம்முள் தாம் உரையாடி மகிழ்ந்து கொள்வார்கள் என்பதனையும் காணலாம்.

**"மறியிடைப்படுத்த மான்பிணைபோலப்**

**..................................**

**வீனுமும்பரும் பெறலருங்குரைத்தே"**[77]

என்றவாறு தலைமக்களின் இல்லறத்திற்குச் சென்று தலைவன், தலைவியும் மகிழ்ந்திருப்பதனை நற்றாய்க்குக் கூறி மகிழ்ந்திருந்தது கொண்டு இல்லற வாழ்க்கையில் தலைவனும், தலைவியும் மகிழ்ச்சியுடன் வாழ்வதே வாயில்கள் தங்கள் முழு மகிழ்ச்சியாகக் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

தலைவி நடத்தும் மனையற வாழ்வின் மாண்பினையும் தலைவன் புதல்வனுடன் இனிது வாழும் காதல் வாழ்வினையும் செவிலி நற்றாயிடம் உரைப்பதனைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன. செவிலி தன் மகளைப் பற்றி அவளுடைய வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்பட்டதாகக் குறிப்புகள் இல்லை. ஒவ்வொரு தலைவிக்கும் செவிலி, தோழி உண்டு என்பது கோட்பாடன்று; அந்நிலை நடைமுறை வாழ்வில் அனைவருக்கும் அமைந்திருக்க வாய்ப்பில்லை என்பது பெறப்படுகிறது.

செவிலி, தோழி இல்லாத தலைவி நிலையும் உண்டு. சேரிக்கண் உப்பு விற்றும், தயிர் விற்றும் வருகின்ற தலைவி நிலையும் சுட்டப்படுகிறது. புலவர்கள் சிறந்தவற்றைப் படைக்கும் நோக்கத்துடன் செவிலி தலைவியை வளர்க்கும் வளர்ப்புத் தாயாகக் காட்டியுள்ளார்கள்.

புலவர்கள் பாடுகின்ற மரபுக்கேற்பத் தலைவி, தோழி, செவிலி என்று யாத்துள்ளார்கள். புலனெறி வழக்காக அக வாழ்விற்கு இன்றியமையாத இரட்டையராக விளங்கும் தலைவன், தலைவியருள் தலைவியை மையமாகக் கொண்டு சமபக்க முக்கோணம் போல் நற்றாய், செவிலி, தோழி ஆகிய மூன்று பாத்திரங்களும் படைக்கப்பெற்று இயங்குகின்றன. தலைவியோடு இம்மூவரும் தனித்தனியாகக் கொள்ளும் தொடர்புகள் உறவால் வேறுபட்டாலும், உணர்வுகளால் இன்றியமையாச் சிறப்பினைப் பெற்று விளங்குகின்றன.

பருவம் எய்திய பாலியல் உணர்வுகள் அரும்பிய நிலையளாய்த் தலைவியை நெறிப்படுத்துவதில் செவிலி பொறுப்புடையவளாக உள்ளாள். ஈன்றவளாதலின் நற்றாய்க்குத் தன் மகளோடு நேரே கூற முடியாத சிக்கல்கள் ஏற்படுகிறது. தோழி தலைவியொடு ஒத்த நட்புடையவள் அதனால் அவளுடைய நட்புக்கு ஆட்பட்டவளாதலின் சிலவற்றைத் தலைவிக்கு உரைக்க முடியாது போவதும் உண்டு. இந்நிலையில் நற்றாயின் அன்பினையும், கண்டிப்பையும் தோழியின் நட்பையும் ஒத்தியல் பண்பினையும், ஒருங்கே பெற்றவளாக விளங்கும் செவிலித்தாய் இருவரின் செயல்களையும் நிறைவு செய்ய முடியாதவற்றை நிறைவு செய்து, தலைவியைப் பண்புகளாலும், ஒழுக்கத்தாலும், இல்லற மாண்புகளால் முழுமையுடையவளாக்கும் பணியைச் செவிலி திறம்பட செய்கிறாள்.

தற்காலத்தில் செவிலி என்றொரு பெண் பாத்திரத்தைப் பணிப்பெண் என்ற நோக்கில் படைத்துக் காட்டுகின்றனர். செவிலி என்ற சொற்றொடர்

மருத்துவமனைகளில் நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யும் பெண்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. தனிக்குடித்தன வாழ்க்கையில் செவிலி என்றொரு பாத்திரம் தேவையற்றவையாக இருப்பதினாலோ அல்லது குடும்பப் பொருளாதாரச் சூழலில் சுமையாக நினைத்தன் விளைவாகவோ இப்பாத்திரங்கள் தவிர்க்கப்பட்டிருக்கலாம். சிவசங்கரியின் 'வானத்து நிலா' என்ற புதினத்தில் பாலம்மாள் என்ற பணிப்பெண் கணவன் மனைவி இருவரும் பிரிந்திருக்கும் நிலையில் அவர்களுக்கு நல்லுரைகள் வழங்கி இருவரையும் ஒன்றாகச் சேர்த்து வைக்கும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளாள். தலைவனும் தலைவியும் ஏதாவதொரு காரணத்தில் பிரிந்த நிலையில் அவர்களை ஒன்று சேர்ப்பதற்கு வாயில்களின் பங்கு அவசியம். அது சங்ககாலம் தொட்டு இன்றுவரை தேவைப்படும் ஒரு கருவியாக உள்ளது என்பது பெறப்படுகிறது.

**மக்கட்பேறு**

கணவனும் மனைவியுமாக உரிமை பூண்டு வாழும் அன்பு வாழ்க்கையின் மணிமுடியாகத் திகழ்வது குழந்தைச் செல்வமாகும். இதனை வள்ளுவரும்,

> **"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்**
> **நன்கலம் நன்மக்கட் பேறு"**(78)

என்று கூறிச்சென்றுள்ளார். மனைக்கு விளக்காக நங்கை பெறும் குழந்தையே குடிக்கு விளக்காகும். குழந்தையுள்ள குடும்பம் சிதைவுபடாது என்பதனைத் தொல்காப்பியர்,

"இன்நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து

பின்னர் வந்த வாயிற் கண்ணும்"(79)

என்று குறிப்பிடுவதால் அறியலாம். குடும்பம் சிதைவுபடாமலும் பரத்தமைத் தந்தையையும், ஊடல் கொண்ட தாயையும் இணைக்கும் பாலமாய் புதல்வன் கூறப்படுவது கொண்டு, தாய்-தந்தை-பரத்தை-குழந்தை என்ற இந்நான்குமுனை உறவை; குடும்பம் என்ற நிறுவனத்தைச் சிதையவிடாமல் ஒருமைப்படுத்துகின்ற ஆற்றலாகக் குழந்தை இருந்ததைச் சங்க இலக்கியங்களின் வழி அறியப்படுகிறது. அதுபோல, 'மூக்கணாங்கயிறு' என்ற புதினத்தில் பரத்தைமை கொண்ட கணவனுக்குத் தானே திருமணத்தை நடத்தி வைத்தாலும், குழந்தைகளின் நலன் கருதி கணவனைப் பகலில் மட்டும் வந்து போக அனுமதிக்கும் பெண்ணை ஆசிரியர் படைத்திருக்கிறார். திருநீலகண்ட நாயனார் மனைவியின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. பரத்தைமை கொண்ட கணவனை முற்றிலும் துறக்காமல் இருப்பதற்குக் குழந்தைகள் அவர்களின் வாழ்க்கையில் ஊடாக இருப்பதிலிருந்து இல்லற வாழ்க்கையில் குழந்தைகளின் பங்கு அறியமுடிகிறது.

## தலைவியின் பண்பு

மனைவியானவள் கணவன் தவறிழைத்தப்போதும், அவனை மன்னித்து ஏற்றுக்கொள்வது தலைவியின் சிறந்த பண்பினைக் காட்டும். எவ்வளவுதான் ஆண் சமுதாயம் கெட்டுப்போய் பெண்களை விலங்கினும் கீழாக நடத்தியபோதிலும் கொண்ட கணவனோடு கலந்து வாழும் இந்த இன்ப வாழ்வு வாழ அவர்கள் தயங்கவில்லை என்பது சங்க இலக்கியம்

காட்டும் இல்லற நெறியாகும். இதுபற்றி பிற்காலத்தில் வந்த குலசேகரர் நாலாயிர திவ்யபிரபந்தத்தில்,

**"கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்**

**கொண்டானை அல்லால் அறியாக் குலமகள்"**(80)

என்ற தமிழ்நாட்டுப் பெண்களின் பெருந்தகவைப் பேசுகின்றார். அவர்கள் கண்ட அந்த கற்பு நெறியில் சங்ககாலத்தில் தலைவியானவள் பொறுப்புடனும், உரிமையுடனும் தன்னுடைய கடமையை உணர்ந்து சரிவர நிறைவேற்றி இல்லறத்தைப் போற்றி வழிபட்ட நிலையினைக் காணமுடிகின்றது. அத்தகைய பண்புகள் தற்காலப் பெண்களிடம் குறைவாகக் காணப்படுகிறது என்பதைப் புதினங்களும் சிறுகதைகளும் எடுத்துக்காட்டுகின்றன. ஆணுக்கு நிகராகப் பொருளீட்டும் பெண்கள் தங்கள் கணவனை மதிக்காமல் இருப்பதுமுண்டு. 'வானத்து நிலா' என்ற புதினத்தில் தன்னைவிட குறைவான வருமானம் பெறும் கணவனைப் புறக்கணிக்கும் பெண்ணை ஆசிரியர் படைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**கணவன் இருக்கும் இடம் செல்லாமை**

கற்புடைய மகளிர் கணவன் இருக்கும் சில இடங்களில் செல்வதில்லை. தலைவன் பிரிந்த இடத்தும், உடம்பும், உயிரும், மெலிந்தயிடத்தும், பாசறைக்கண்ணும், கடல்கடந்து செல்லும் போதும் தலைவி செல்வதில்லை. தலைவனின் பணி முழுமை அடையாது எனக்கருதியும் கவனம் சிதையக்கூடும் என்றெண்ணியும் தலைவியானவள் இவ்வாறன இடங்களில் செல்வதில்லை. இதனைத் தொல்காப்பியர்,

"உடம்பும் உயிரும் வாடியக்கண்ணும்

என்ணுற்றன கொல் இவையெனின் அல்லது

கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை"[81]

"எண்ணரும் பாசறை பெண்ணொடு புணரார்"[82]

"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை"[83]

என்ற நூற்பாக்களின் வழி வரையறை செய்து காட்டுவர். பெண்ணின் மென்மைத்தன்மை கருதியும் தலைவியின் மாண்பு நெறி கெடும் என்று கருதியும் சான்றோர்கள் தலைவி செல்லத்தகாத இடங்களைச் சுட்டியுள்ளனர். இல்லறக் கடமைகளை ஆற்றுவதிலேயே முழுகவனத்தையும் செலுத்தியதால் வெளிவுலகத் தொடர்பு தலைவிக்கு இல்லை என்பதனை உணர முடிகிறது.

தற்காலத்தில் பொருளீட்டுவதற்காக வெளிநாடுகளுக்குச் செல்லும் ஆண்கள் அந்நாட்டுப் பெண்ணிற்கும், தாய்நாட்டுப் பெண்ணிற்கும் துரோகம் செய்யும் கணவன்மார்களாகக் காணப்படுகின்றனர். '47 நாட்கள்', 'பொய்' போன்ற புதினங்களில் வெளிநாடு சென்று பொருளீட்டும் கணவனைத் தண்டிக்கும் பெண்களைப் படைப்பாசிரியர் படைத்துள்ளார். '47 நாட்கள்' என்ற புதினத்தில், அமெரிக்காவில் வேலை பார்க்கும் குமார், விசாலி என்ற பெண்ணைத் திருமணம் செய்து, அங்கு அவளை அழைத்துச் செல்கிறான். அங்கு அவன் லூசி என்ற பெண்ணை ஏற்கனவே திருமணம் செய்தது அறிந்த விசாலி, தன் வயிற்றில் வளரும் கருவைக் கலைத்துவிட்டு கணவனைப் புறக்கணித்துத் தாயகம் திரும்புகிறாள்.

'பொய்' என்ற புதினத்தில், கணவன் அமெரிக்காவில் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதை அறிந்த பெண் துர்கா, அமெரிக்கா சென்று, 'உன் பணம், பொருள் எதுவும் வேண்டாம். என் உழைப்பில் நல்லவிதமாக என்னால் வாழமுடியும்' என்று உதறித்தள்ளி விடுகிறாள். சங்ககாலத்தில் பெண்கள் மௌனிகளாக வலம்வந்துள்ளனர். தற்காலத்தில் தவறினைத் தட்டிக் கேட்கும் போர்க்குணம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

*பொறை*

தொல்காப்பியர் தலைவிக்குரிய மாண்புகளில் ஒன்றாகப் பொறையினைக் குறிப்பிடுவர். பொறை என்பது மென்மையான மனத்துடன் பொறுத்துப் போகும் பண்பாகும். கணவன் எத்தகைய துன்பம் தரினும், வறுமை ஏற்படினும் பொறையே காத்தனர். தம்மை இகழ்வாரையும் பொறுப்பதே தலையாய பண்பாகப் போற்றினர். "பொறுமைக்குணங்களால் நிறைந்த கற்பினை உடையவர் மகளிர் என்று புறநானூறும் குறிப்பிடும்."[84] இத்தகைய தலைவி பற்றிக் கூறும் தொல்காப்பியர் தலைவியின் மாண்பினைத்,

**"தாய்போல் கழறித் தழீஇக் கோடல்**
**ஆய்மனைக்கிழத்திக்கு உரித்தென மொழிப**
**கவவொடு மயங்கிய கால யான"[85]**

என்றவாறு இல்லற நெறி வகுப்பர். கணவன் அன்பால் குறைந்தாலும், பரத்தையர் பால் பிரிந்து சென்றாலும், அவனது தவறினைச் சுட்டிக்காட்டி உண்மை அன்பு மாறாமல் தாய்போல் தலைவனைத் தழுவுதல் தலைவியின்

உயர்ந்த பண்பாகும். "தாய் குழந்தையை அடிக்கும் நேரத்திலும் அம்மா என்றே அழும் அக்குழந்தையைப் போலத் தலைவன் இன்னாதவற்றைச் செய்யினும் தலைவி பொறுத்துத் தலைவனது அருளையே நினைந்து வாழும் இயல்புடையவள்"(86). இத்தகைய பொறுமைக் குணத்தைப் பெற்றிருந்தால்தான் இல்லத்தை நன்னெறியில் வழிநடத்த முடிந்தது என்ற சங்க கால பெண்களின் வாழ்வியல் சிந்தனை புலப்படுகிறது.

தற்காலத்தில் பெண்கள், பொறுமையில் சிறந்த பூமியும் உண்டு; பூமியை மிஞ்சும் தாய் மனம் உண்டு என்பதைப் போல் வாழ்ந்தாலும், பொறுமையின் எல்லை கடக்கும் போது மணமுறிவுக்குச் சென்றுவிடுகின்றனர். 'பாலங்கள்' என்ற புதினத்தில் கணவன் மிகைப் பாலியல் கொடுமை செய்கிறான். இன்பமாய் இருக்க வேண்டிய காமம் அவளுக்குத் துன்பத்தைத் தருகிறது. வக்கிரமான பாலுணர்வு வெறி, பிறரைத் துன்புறுத்தி இன்பம் அனுபவிக்கும் இயல்பு கணவனிடம் மிகுந்துள்ளது. கர்ப்பமான மனைவி அவனின் விருப்பத்திற்கு இணங்கவில்லை என்பதற்காக மனைவியின் எதிரிலேயே விலைமகளிரோடு உறவாடும் கணவனை; பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு என்று மணமுறிவுக்கு உடன்படுகிறாள். கணவனை 'மிருகம்' என்றே உரைப்பதினால் அவளின் வேதனை உணரப்படுகிறதே ஒழிய, அவளின் ஊடல் காணப்படவில்லை.

*பரத்தமை*

இல்லற வாழ்க்கை மேற்கொண்ட தலைவன், தலைவியரிடையே ஊடல் அவ்வப்போது ஏற்படுதல் உண்டு. தலைவியின் ஊடலுக்குக்

குறிப்பிட்டுச் சொல்லத்தக்கதொரு அடிப்படைக் காரணமாக அமைவது தலைவனின் பரத்தையிற் பிரிவேயாகும்.

அகவாழ்க்கையின் நடைமுறை நிலையினை விளக்கும் பாத்திரங்களில் பரத்தை பெறும் இடம் குறிப்பிடத்தக்கது. அவளும் தனது இயல்புகளை வெளிப்படுத்தத் தவறுவதில்லை. மணவாழ்க்கை, குழந்தைப்பேறு முதலியன குறித்துப் பரத்தையர் கொண்ட ஏக்கத்தைப் பல பாடல்களில் காணமுடிகின்றது.

**பரத்தமை வாழ்வு**

பரத்தையர், "ஆடலும், பாடலும் வல்லவராக அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதார்"(87) என்பர் இளம்பூரணர். தொல்காப்பியர் பரத்தையரைப் பற்றி,

"**பல்வேறு புதல்வர் கண்டு நனியுவப்பினும்**"(88)

என்று கூறுவர். தெருவில் விளையாடும் பலவகைப்பட்ட சிறுவர்களைக் கண்டு மகிழ்ந்து பேசுவாள் என்று பொருள். இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் போது இதுபோல் ஒரு குழந்தை இல்லையே என்ற வருத்தம் அவள் மனதில் ஓடுவதை அறியமுடிகின்றது. வாரிசு உரிமை பரத்தையர்க்கு இல்லை. தலைவனின் வாரிசு உரிமை தலைவியின் புதல்வனுக்கு வழங்கப்பட்டுள்ளது என்பது பெறப்படுகிறது.

பரத்தையர் பலரைத் தலைவன் திருமணம் செய்து கொண்டது பலதார மணத்தினை நினைவுபடுத்துவதாக முன்பு கூறப்பெற்றது. தலைவன் அவ்வாறு பலரைத் திருமணம் செய்து கொண்ட போதிலும்

அப்பலருக்கு இல்லற உரிமைகள், வாரிசு உரிமைகள் மறுக்கப்பட்டன. இக்கருத்தைக் குறிப்பாகச் சில பாடல்கள் உணர்த்துகின்றன. அவரும் 'பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து நன்றி சான்ற கற்பொடு எம்பாடு ஆதல் அரிதே'[89] எனவும், 'நின் காதலி எம்போல் புதல்வற் பயந்து நெடுநகர் நின்னின்று உறைய என்ன கடத்தளோ''[90] எனவும் வரும் பாடலடிகள் சிறுவரைப் பயத்தல், தலைவன் பிரியும் வழி இல்லிலிருந்து இல்லறக் கடன் ஆற்றுதல் முதலியன தலைமகளுக்கு உரியன என்பதைக் காட்டுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

பரத்தை / காமக்கிழத்தியர் தலைவனுடைய வாழ்க்கையில் தொடர்புடையவராக இருந்தாலும் பொருள் நாட்டம் காரணமாகத் தொடர்பு கொண்டதாகத் தெரியவில்லை. இதுபற்றித் தொல்காப்பியத்திலும் குறிப்பு இல்லை. மூலப்பாடல்களிலும் செய்திகள் இல்லை. பொது மகளிர் என்ற சொல்லாட்சி கலித்தொகையில் மட்டும் ஒரு பாடலில் இடம்பெறுகின்றது.

**"நாறிருங் கூந்தற் பொதுமகளிர் எல்லாரும்**
**முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோடு**
**எல்லாம் புணர்குறிக் கொண்டு"[91]**

பொதுமகளிர் என்ற சொல் பரத்தை அல்லது காமக்கிழத்தியைக் குறிக்கவில்லை. ஆயருடன் சென்றதால் இது ஊர் மகளிரைக் குறிப்பதாகும்.

திருமணத்தின் மூலமாக தலைவன் பலரை உரிமையாக்கியது. அப்பலரில் ஒருத்தியை இல்லத்திற்கு உரிமையாக்கியது; வாரிசுக்கு

உரிமையாக்கியது என்று உணர முடிகிறது. சங்க இலக்கியத்தில் பரத்தையரும் தலைவனின் மனைவியரில் ஒருத்தி என்பதும் பெறப்படுகிறது.

பிறன்மனை நயவாமை, பரத்தையர் உறவு கொள்ளாமை, இழிகாம உணர்வு கொள்ளாமை போன்றவைகளைப் பக்தி இலக்கியம் இயம்புகின்றது. 'தலைவனைப் பிரிந்த தலைவி புலம்புவதாக அமையும் பாடல் ஒன்றில் 'பெண் பிறந்தார் எய்தும் பெருந்துயர் காணேன் என்று ஒண்சுடரோன் வாராதொழிந்தான்'[92] என வருந்துவதாக உரைக்கிறார்.

பிற்காலத்தில் பெண்ணினத்துள் பரத்தையர் என்ற பிரிவைச் சமுதாயம் படைத்தது பெண்ணினத்தின் இழிநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். செல்வ வளமிக்க ஆடவர்கள் தம் உடல் உணர்ச்சிகளைப் போக்கிக் கொள்ளும் வடிகால்களாக இப்பரத்தையர் மதிக்கப் பெற்றனர். இப்பரத்தையரின் உள நிலைகளும் செயல்களும் பல்வேறு நிலைகளில் இகழ்ந்துரைக்கப் பெறுகின்றன. காளையர்களைத் தங்கள்பால் ஈர்த்து, ஏய்த்து, உண்பவர்கள் என்றும்'(5:2:44: திருக்குறுந்தொகை 1:1-2) இழிந்தவர்களாயினும் உயர்ந்தவர்களாயினும் வேற்றுமை பாராட்டாது எண்ணெய் ஆட்டுவோர் தாம் பெற்ற எள்ளிற்கேற்ப எண்ணெய் கொடுப்பது போலத் தாம் பெறும் பொருளுக்கேற்ப உடனுறையும் இன்பத்தை விலையாகக் கொடுத்து இரக்கம் சிறிதும் இல்லாதவர்களாய் விளங்குபவர்கள் என்றும் (11:28:11-20), தந்தை யாரெனத் தெரியாது, நாட்டுக்கும். வீட்டுக்கும் பயன்படாதவராய் வாழ்பவர்கள் என்றும்[93] இழித்துரைக்கப் பெறுகின்றனர்.

தற்காலத்தில் பரத்தையர் முற்றிலுமாக விலைமகளிர் என்ற பொது நோக்கில் காணப்படுகின்றனர். பரத்தையர்களுக்கென்று சிவப்பு விளக்குப் பகுதிகள் இருக்கின்றன. இருப்பினும் தற்காலத்திலும் இரண்டு மனைவியருடன் வாழும் ஆண்களைக் காணமுடிகிறது. இரண்டு பெண்களைத் திருமணம் செய்வது நமது சட்டத்தில் குற்றமாகும். அது இன்னும் கடுமையாக்கப்படவில்லை. பணிக்குச் செல்லும் பெண்கள் கணவனை விட்டுவிட்டுத் தனியாக வாழ்கின்றனர் என்றாலும், பல பெண்கள் தங்கள் வறுமை, குழந்தைகளின் நலன் போன்ற காரணங்களால் கணவனின் இரண்டாவது திருமணத்தை ஏற்றுக் கொள்கின்றனர். உணவும், உடையும், உறையுளும் உயிர் வாழ்வதற்குத் தேவைபடுவதன் காரணமாக ஆணாதிக்கம் பெண்களை ஊமைகளாக; நடைபிணங்களாக மாற்றிவிடுகின்றது.

'மூக்கணாங்கயிறு' என்ற புதினத்தில் மனைவியே தன் கணவனின் பரத்தைமைச் செயலைக் கண்டு அவனுக்கு இரண்டாவது திருமணம் செய்து வைக்கிறாள். மனிதன் தோன்றிய காலத்திலிருந்து இத்தகைய பாலுணர்வுகள் இருந்து கொண்டே இருக்கிறது. ஒன்றிருக்க ஒன்றின் மேல் ஆவல் கொள்ளும் நிலை வெறியாகும் போது இல்லற மாண்பு சிதைவுபடுகிறது.

***விலைமகளிர்***

ஆணும் பெண்ணும் ஊடியும் கூடியும் இன்புற்று, மக்கட் செல்வம் பெற்றுச் சிறந்திருந்த சங்ககாலத்தில் விலைமகளிரும் இருந்துள்ளனர்.

விலை மகளிரைப் பற்றிய குறிப்புகள் கிடைக்காமைக்கு அறக்கழிவுக் கோட்பாடும் காரணமாக இருக்கலாம். அறக்கழிவு பற்றித் தொல்காப்பியர்,

**“அறக்கழிவு உடையன பொருட் பயம்படவரின்**

**வழக்கு என வழங்கலும் பழித்து அன்று என்ப”[94]**

என்று அறக்கழிவுடைய பொருள்கள் பயன் தருபவை ஆயினும் அவற்றைப் பாடுதல் ஆகாது என விதி செய்தார். விலைமகளிர் பற்றிக் கூடுதல் சான்றுகள் கிடைக்காமைக்கு நல்லவற்றை மட்டும் எடுத்தியம்பி பயனற்ற, தீயவற்றைப் புலவர்கள் பாடாதொழிந்த அவர்களின் நற்சிந்தனையாகலாம். “சங்க இலக்கியங்கள் யாவும் ஒரு காலத்தில் எழுந்தவையாகக் கொள்ள இயலாது. அவை 700 ஆண்டு காலப்பரப்பும் பழமையும் பெற்றவை”[95] என்பர். பரத்தை பல்வேறு அணிகளுடன் விழவுக்களம் பொலிய வந்து நின்றதும் அதனைக் கண்ட மனைவியர் ‘எழுமினோ எழுமின்’ என்று கூறி மலையனது ‘வேலிற்குப் பகைவர் அஞ்சி ஓடியது போலத் தம் கொழுநரைக் காக்க விரைந்து ஓடியதும் கூறப்பெற்றுள்ளன. (நற்.170) மற்றொரு பாடலில், கண்ணே இளையோள் வர ஊர் கல்லென்ற ஆரவாரத்தை உடையதாயிற்று என்றும் அதற்கொண்டு ஆய்தொடி மகளிர் தம் கணவரைக் காக்கக் காவலைச் செறிந்தனர் என்றும் செய்திகள் கூறப்பெற்றுள்ளன. கலித்தொகை, பரிபாடல்களில் விலைமகளிர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. “சங்ககால இறுதியில் விலைமகளிரினம் தமிழகத்தில் காலூன்றி விட்டமையை உணர்த்துகின்றன”[96] என்ற சிலம்பு நா.செல்வராசு கூற்று சுட்டத்தக்கது.

பரத்தையர் அல்லாத பொதுமகளிரும் பரத்தையாகச் செயல்பட்டதைக் காதா சப்தசதி குறிப்பிடுகிறது.

**'இங்கே துயில்வாள் எனது மாமி**
**இங்கே யானே இங்கே சுற்றம்**
**பயணி இரவில் பார்வை யிலாதோய்**
**என்படுக் கையிலே வீழ்ந்திடல் வேண்டா'** (காதா சப்தசதி: 490)

கணவனைப் பிரிந்துறையும் தலைவியவள்; அவள் வீட்டில் வழிப்போக்கன் விருந்தாளியாகத் தங்கியிருந்தான். அவனுக்குத் தன் வீட்டில் இரவில் தங்குமிடம் காட்டும் தலைவி கூறுகிறாள். இவ்விடத்தில் எனது மாமி துயில்வாள்; இங்கே சுற்றத்தாரெல்லாம் துயில்வார்கள். வழிப்போக்கனே, இருட்டில் கண் தெரியாமல் என் படுக்கையில் வீழ்ந்து தொலையாதே என்று கூறுகிறாள்.

அவள் வாய்ச் சொற்கள் இங்கு வராதே என்று கூறினாலும் உளக் குறிப்பு இங்கே நான் படுத்திருப்பேன் அங்கே பிறர் படுத்திருப்பர், காமந்தகாரனாகிய நீ கண் தெரியாமல் அவர்களிடத்தில் கால் இடறி வீழ்ந்து காரியத்தைக் கெடுத்துக் கொள்ளாதே; அவர்கட்கு விழிப்பை யூட்டி விடாதே. நீ விழிப்புடன் என் படுக்கைக்கே வந்து சேர். என் மாமி எல்லோரும் நன்கு துயின்று விடுவர் என்ற உள்ளுறைப் பொருள் அமையக் கூறுகிறாள். இத்தகைய அறக்கழிவுப் பாடல்களும் சங்க இலக்கியத்தை ஒத்த காலத்தில் அமைந்த காதா சப்தசதிப் பாடல்களில் காணலாகிறது.

இவ்விலக்கியத்தில் கற்புக்கரசிகள் மட்டுமின்றி கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் காரிகையாரும் உண்டு. பரத்தையரும் உண்டு. கணவனிருக்க மற்றொரு காதலனை நாடும் காரிகையாரைப் பற்றித் தமிழ் இலக்கியங்களில் குறிப்பில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

***திரிசங்கு சொர்க்கம்***

கமலி நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள். அண்ணன் அண்ணி பாதுகாப்பில் படித்து வேலைக்குச் செல்பவள். வசதியான வீட்டைச் சேர்ந்த முரளியைத் திருமணம் செய்து கொள்கிறாள். கமலி திரைப்படக் கற்பனைகளை வாழ்வியலோடு இணைத்துப் பார்க்கும் இயல்பினள். தன் கணவன் திரைப்படக் கதாநாயகன் மாதிரி இல்லையே என்பதில் ஏக்கம் உடையவளாகக் காணப்படுகிறாள்.

கமலி வேலைக்குச் சென்ற இடத்தில் மனோகர் என்பவனுடன் தொடர்பு கொள்கிறாள். அவனின் அழகைப் பார்த்து கற்பனையை எதார்த்தமாக்கி மயங்குகிறாள். கணவனையும் மீறி அலுவல் பணிக்காக சென்னைக்கு மாறிச் செல்கிறாள். போகும்பொழுது தனக்கும் முரளிக்கும் பொருத்தமில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, தன்னைத் தேட வேண்டாம் என்றும், மனோகருடன் சேர்ந்து வாழப் போவதாகவும் கடிதம் எழுதி, தாலியைக் கழட்டி அதன்மேல் வைத்துச் செல்கிறாள். பின் மனோகரின் உண்மை நிலையறிந்து முரளியுடன் வாழ நினைக்கிறாள். அக்காலக்கட்டத்தில் முரளி, தன் மாமன் பெண் சாந்தகுமாரியை மணந்து கொண்டிருக்கிறான். கமலியின் வாழ்க்கை திரிசங்கு சொர்க்கமாக அமைந்துவிடுகிறது. யாக்கை நிலையில்லாதது என்பதை அறியாமல்,

நிழல் பிம்பங்களை உண்மையென நினைத்து மயங்கும் பெண்கள் வாழ்க்கையில் சீரழிவதை அறியமுடிகிறது.

தற்போது, மேலைநாட்டு பெண்களைப் போல் நம் நாட்டுப் பெண்களும் பெண்ணியம் என்ற போர்வையில் பண்பாட்டுச் சீரழிவுகளை மேற்கொள்கின்றனர். "திருமண மண்டபங்களை அழித்துவிட்டு முதியோர் இல்லங்களை நாடும் மேற்கத்திய கலாச்சார முறையினால் அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்ததாகத் தன் தோள் தட்டிக் கொள்ளலாம். ஆனால் பண்பாடு சிதைந்து போயினவே. அங்கே குடும்ப வாழ்க்கை கூட்டு வாழ்க்கை ஏனோ புரியவில்லை. சுதந்திரமாய் ஆடை அணிவதிலும், யாரும் துணையில்லாமல் இளமை இருக்கும் வரைக்கும் அனுபவித்துவிட்டு, இன்னும் ஒரு படி மேலே சென்று ஓரினப் பால் சேர்க்கை அமைத்துக் கொண்டு, வயதான காலத்தில் முதியோர் இல்லங்களிலே அடைக்கலமாகி விடும் வாழ்க்கை அமைத்துக் கொள்கிறார்கள். நம் நாட்டுப் பெண்களில் சிலர், நமது கலாச்சாரம், பண்பாடு இவற்றை விட்டுவிட்டு வர முயலுகிறார்கள். நாகரிகம் என்ற பெயரிலே நடத்தும் கூத்துக்களுக்கும் அளவில்லை"(97) என்பர்.

தற்காலப் பெண்களின் கலாச்சார சீரழிவைத் தாயம்மாள் அறவாணன் "கல்வி நிறுவனங்களில் பயிலும் பழக்கம் ஏற்பட்ட அளவுக்கு நூல்களையும், ஏடுகளையும் வாசிக்கும் பழக்கம் பெண்களிடையே பெருகி உள்ளதா? நகை, துணிமணி புதிய புதிய பாத்திரப் பண்டங்கள் ஆகியவற்றின் மேல் பெண்களுக்குள்ள மோகம் குறைந்திருக்கிறதா? ஆண்களை ஈர்க்க உடை அணிவதிலும் பெண்களை ஈர்க்க நகை

அணிவதிலும் நம் பெண்களுக்கு உள்ள தாகம் தணிந்திருக்கிறதா? தொலைக்காட்சி மிதப்பிலேயே காலத்தை அழிப்பது தொடரவில்லையா? ஆண் குழந்தையையும், பெண் குழந்தையையும் சின்ன வயதிலேயே பால் வேறுபாடு காட்டி, நீ பெண் பிள்ளை தானே என்று ஒதுக்கி, குறுக்கி வளர்க்கும் பழக்கம் தாய்மார்களிடையே மாறி இருக்கிறதா? பிறர் ஒருத்தியின் கணவரை நேசிப்பது, அவர்கள் வாழ்க்கையைக் கெடுப்பது, உடலமைப்பில் தனக்குள்ள வாய்ப்பைப் பயன்படுத்திப் பரத்தையாகச் செயல்படுவது, கருத்தடையைச் சாதகமாகக் கொண்டு நெறிகெட்டு வாழுவது, மேற்புறத்தையும், பின்புறத்தையும் துருத்திக் காட்டுவதான உடையை வேண்டுமென்றே அணிவது முதலாய வேண்டாப் பழக்கங்கள் பெண்களைத் தீண்டி மண்டிக் கிடக்கவில்லையா?”[98]என்கிறார்.

நடைமுறை வாழ்க்கையில் பெண்களைப் போகப் பொருளாக நினைக்கும் ஆண்களை விட அதற்கு விலைபோகும் பெண்களே அதிகம் எனலாம். மென்பொருள் நிறுவனங்களில் பணிபுரியும் பெண்கள் அதிகளவில் விவாகரத்து பெற விண்ணப்பித்துள்ளதைப் புள்ளி விபரங்கள் தெரிவிக்கின்றன. கணவனின் கெடுபிடிகள் கொஞ்சம் அதிகமானாலும் மனக்கசப்பு ஏற்பட்டு உடனடியாக நீதிமன்றங்களை நாடுவதும் அன்றாட செய்தியாகிவிட்டதை அறியமுடிகிறது. ‘கொடிது கொடிது அன்பில்லாப் பெண்டிர் கொடிது; அதனினும் கொடிது இன்புற அவர் கையில் உண்பதுதானே’ என்று ஔவையாரும் அன்பில்லாதப் பெண்களை வகைப்படுத்துவது நோக்கத்தக்கது.

**பரத்தை காரணமின்றியும் பிற காரணங்களாலும் தலைவிக்கு ஊடல் நிகழ்தல்**

தலைவிக்குத் தலைவனின் பரத்தைமை தொடர்பால் மட்டும் ஊடல் ஏற்படவில்லை. பிற காரணங்களாலும் ஊடல் உண்டாகும். பொருள்வயிற் பிரிந்து வந்த தலைவனோடும் தலைவி ஊடல் கொள்கிறாள். பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலி 39 ஆம் பாடலின் மூலம் இதனை அறியலாம். பொருள் தேடுவதற்காகச் சென்றவிடத்தில் தன்னைத் தலைவன் நினைக்கவில்லை என்று ஊடுகின்ற பெண்ணையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

**பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது**

பரத்தைமை காரணமாக ஊடல் இல்லாவிடத்தும் பெண்கள் தலைவனிடம் ஊடல் கொண்டதற்குச் சிலப்பதிகாரத்தில் பாண்டிமாதேவியின் ஊடலை சான்றாக்கலாம். தன் அருகில் இருக்கும் கணவன் கலையின் காரணமாக ஆடல் மகளிரின் ஆட்டத்தில் மகிழ்வதைப் பொறுக்கமுடியாத பாண்டிமாதேவி 'தலைநோவு' என்று கூறி அவ்விடமிட்டு நகர, பாண்டியன் அவளின் ஊடலைத் தணிக்க வேண்டும் என்கிற ஒரே நோக்கில் செல்ல; அவனையும் அறியாமல் 'கொன்று அச்சிலம்பு கொனற்க' என்றதினால், கோவலன் கொலை செய்யப்படுகிறான். பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது என்பதை அறியமுடிகிறது.

பிற்கால இலக்கியமான கம்பராமாயணத்தின் பாலகாண்டத்தில் பூக்கொய் படலத்திலும், உண்டாட்டுப் படலத்திலும் ஊடல் செய்திகளைச்

சங்க இலக்கியத்திற்கு ஒப்பாகப் பாடியிருப்பது கம்பனின் கற்பனைக்கு எடுத்துக்காட்டாகும். ஊடலுக்குப் பரத்தைமை காரணமாக அமையாமல் பிற காரணங்களினாலும் தலைவிக்கு ஊடல் உண்டாகும் என்பதைப் பிற்கால இலக்கியங்கள் விளக்குகின்றன.

**உருவு கண்டு ஊடல்**

தலைவன் ஒருவன் ஓங்கி வளர்ந்த தென்னை மரத்தின் இளநீர்க் காய்களை நோக்கி வியப்பு மேலிட்டவனாய், இவை மங்கையரின் தனங்கள் (மார்பகங்கள்) போல் உள்ளனவே என உரைக்க, அவ்ஆடவனின் மனைவி விம்மி அழுதும் வெதும்பியும் வியர்த்தும் ஊடல் கொள்கிறாள்."[99]

கணவன் பொதுவாகக் கூற அதனைத் தன் கணவன் தன்னைத் தவிர வேறொரு மங்கையின்பால் அன்பு கொண்டான் என எண்ணி ஊடல் கொள்கிறாள். உடல் உறுப்புக்களை நோக்குதலுங்கூட ஊடற் காரணங்களாக அமைகின்றன.

**"வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுவாள்**

**யாருள்ளித் தும்மினீர் என்று"[100]**

என்ற குறளிலும் இத்தகைய ஊடல் நிகழ்ந்துள்ளது அறியப்பெறுகிறது.

தலைவனின் கண்களைப் பின்புறம் சார்ந்து புதைத்தாள் ஒரு தலைவி. அதற்கு அத்தலைவன், யார் என வினவியவுடன் அவள் பெருஞ்சினம் கொண்டவளாகி வெதும்பி நின்றாள்."[101]

தொட்டதும் தன்னை அறிந்து கொள்ளாத கணவனின் நிலையைக் கண்டு தன்னைப் போலவும் வேறு பெண்களும் அவனிடம் தொடர்பு கொண்டுள்ளனரோ என்ற எண்ணம் கொண்டு மனைவி சினந்து ஊடியமை விளங்கிற்று.

## இரு மனைவியரைப் பெற்ற ஆடவனின் நிலை

ஒருவன் வாய்தவறி தன் மனைவியின் பெயரைச் சொல்லி அழைக்காமல் வேறு பெண்ணின் பெயரைச் சொல்லி அழைக்கின்றான். அதைக்கேட்ட அப்பெண் தன் சினத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அதனை மறைப்பதற்காகத் தன் மென்மையான விரல்களில் ஒரு பூவைக் கைக்கொண்டு மோந்தாள். ஆயினும் அப்பூவானது சினத்தால் கருகிப் போனது."[102] அகத்தில் உள்ள நெருப்பு, புறத்தில் தெரிகிறது என்பது பெறப்படுகிறது.

ஊடல் கொண்ட தலைவியிடம் ஊடல் உணர்த்திய தலைவன் வாய் தவறி, தான் கலந்தின்புற்றுவந்த காமக்கிழத்தியின் பெயரைக் கூறிவிட்டான். அதனால் தலைவி உன் மனத்திலுள்ளதே கூறினாய் என்று புலந்து கூறுகிறாள். இதனை,

**'இத்துணைநற் குணம் எவருக் குளதே**
**உன்னையன்றி ஒருவரைக் காணேன்**
**இன்றுனர் எல்லாம் இதயத் தொன்றும்**
**வாயி லொன்றுமாய் வழங்குகின்றாரே'[103]**

என்று கூறுகிறது.

மற்றொரு தலைவனின் நிலை பரிதாபத்திற்குரியவையாகக் காணப்படுகிறது. மனைவியர் இருவரும் கணவன் தன்பால் தனி அன்பு கொண்டுள்ளான் என்று கருதியிருக்க, அவன் கொடுத்த பூக்கள் சரிசமமாக இருந்தமையால் இருவரும் ஊடல் கொண்டு அவன் அளித்த பூக்களை வீசி எறிந்து அப்பாற் சென்றார்கள்."[104] இத்தகைய நிலை உருவாகும் என்னும் காரணத்தால் ஆடவன் ஒருவன் பூக்களை மனைவியர்க்குத் தராமலும், இல்லை என்று கூறாமலும் இருந்த தன்மையைப் 'ஒரு பாடல்"[105] விளக்குகிறது.

### உண்டாட்டுப் படலம்

ஊடல் கொண்ட ஒருத்தி வாய்திறந்து ஏதும் கூறாமல் கரம் சிவக்க வீணை மீட்டிய செய்தியும்"[106] காணக்கிடைக்கிறது. ஊடல் கொண்டு சினந்த பெண்ணொருத்தி தன் கணவனை உதைக்கிறாள். அவள் உதைத்தவுடன் காதல் மலர்ந்து உடம்பில் உள்ள மயிர்க்கால்கள் சிலிர்த்துப் புளகாங்கிதம் கொண்டு விளங்கின என்று தலைவன் மகிழ்வதையும் கம்பராமாயணப் பாடல்களின் வழி அறியலாகிறது. சங்கப் பாடல்களைப் போன்று ஊடற் காலத்தில் தலைவன் பணிந்த போது தலைவனின் தலைமேல் உதைத்ததைச் சங்க இலக்கியமும் உணர்த்துகின்றது.

### மரபு மீறிய ஊடல்

ஊடலும் ஊடல் நீங்கலும் இல்லத்தளவாக இருத்தல் அகத்திணை மரபாகும். ஊரறிய ஊடல் கொண்ட தலைவியைப் பரிபாடல் 'ஒன்று"[107] சுட்டுகிறது. ஊடற் காலத்தில் தலைவனின் செயல்களாகத் தொல்காப்பியர்,

"கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காதல் எங்கையர் காணின் நன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணும்" (தொல்.பொருள்.1093)

என்று குறிப்பிடுகிறார். ஊடல் தணிப்பதற்காகத் தலைவன் தலைவியின் அடிகளில் வீழ்தலுண்டு. அவ்வாறு வீழ்தல் இல்லத்தின்னுள்ளே நிகழுமே தவிர புறத்தே நிகழாது. மையோடக் கோவனார் என்ற புலவர் பரிபாடலில் ஓர் ஊடலைச் சித்திரிக்கின்றார். வையை நீராட்டில் தலைவி ஒருத்தி பரத்தை காரணமாகத் தலைவன் மேல் கோபம் கொண்டாள். தான் அணிந்திருந்த மாலையைப் பிய்த்தெறிந்தாள். இதனால் கண்கள் சிவந்தன. இந்நிலையில் அவளுடைய ஊடலைத் தணிப்பதற்காகத் தலைவன் அவள் அடியில் விழுந்து வணங்கினான். அவளோ அவன் தலைமேல் உதைத்துப் பின்னும் வெகுளி அடங்காதவளாய் ஊடல் கொள்கிறாள். ஊர் மக்கள் பலரும் நீராடும் இடத்தே தலைவன் தலைவியின் ஊடலைப் போக்க அடிமேல் வீழ்வதும், அவள் அவன் தலையை மிதிப்பதும் மிகையான செயல்களாகும். இல்லத்தின்னுள்ளே நிகழவில்லை. 'செம்புனல் ஊருடன் ஆடுங்கடை' என்று குறிப்பதிலிருந்து பலரறிய நிகழ்ந்த நிகழ்ச்சியாக அமைகிறது. இவ்வாறான மரபு மீறிய ஊடல்களும் சங்ககாலத்தில் நிகழ்ந்துள்ளன. இதன் தொடர்ச்சியாகப் பெண்கள், தங்கள் கணவனின் பரத்தைமைச் செயலுக்குத் தகுந்த தண்டனையாக மணமுறிவு கொள்வது குறிப்பிடத்தக்கதாகும்.

## செல்லத்தக்க இடங்கள்

புதியன புனையும் புத்தறிவிற்கு வேண்டப்படுவது பயனுள்ள பொழுதுபோக்கே ஆகும். பண்டைத்தமிழர்கள் வாழ்வு ஒரே தொடர்ச்சியைக் கொண்டது. பொழுது போக்கு என்பது வாழ்நாள் முழுவதும் நிகழ வேண்டிய ஒன்று என்று கருதினர். இச்சமயங்களில் தலைவனுடன், தலைவி செல்வதுண்டு. இதனைத் தொல்காப்பியர்,

> **"யாறும் குளனும் காவும் ஆடிப்**
>
> **பதியிகந்து நுகர்தலும் உரியஎன்ப"(108)**

என்ற நூற்பாவால் புலப்படுத்துவர். கணவனும், மனைவியுமாக இன்பச்செலவில் ஈடுபட்டுப் பொழுது போக்கினர் என்று குறிப்பிடுகின்றனர். இல்லறத்தில் தலைவனும், தலைவியும் இன்பம் துய்த்துக்கொண்டே இல்லறக் கடமைகளை ஆற்ற எண்ணினர். மகிழ்ச்சியும் வாழ்க்கைக்கு வேண்டும் எனக் கருதிய சான்றோர்கள் தலைவனுடன் தலைவி செல்ல வேண்டிய இடங்களை வகுத்துக்கூறி இல்லறத்தில் இருக்க வேண்டிய நெறிமுறைகளையும், வாழ்க்கையை இன்பமாக மாற்றுவதற்கு உரிய வழிமுறைகளையும் கூறிச்சென்றுள்ளனர். இன்பச்செலவு செல்லும் போது கணவன் மனைவியர்க்கிடையே உள்ள பிணக்குகள் தீர்ந்து, இன்பம் கூடுகிறது. தற்காலத்திலும் இன்பச்சுற்றுலா என்றும், புதுமணத் தம்பதியினர் தேனிலவு என்றும் சென்று வருவதைத் தொல்காப்பியர் அன்றே உரைத்துள்ளார். இத்தகைய இன்பச்செலவுகள் கணவன் மனைவியரிடையே நிகழும் மனக்கசப்பு, பிணக்குகளைத் தீர்க்கவல்லன என்பது பெறப்படுகிறது.

## நற்காலத் திருமணமும் மணமுறிவும்

திருமணம் என்பது ஆணும் பெண்ணும் இனிய இல்லறத்தைத் தொடங்க முதன்முதலில் நடத்திக் கொள்கிற கால்கோள் விழாவாகும். திருமண நிகழ்ச்சிகள் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு இனமக்கள் மத்தியிலும் ஒவ்வொரு விதமாக நடைபெற்று வருகின்றன. இந்து திருமணச் சட்டத்தின்படி, "திருமணக் காலத்தில் மணமகன் இருபத்தொரு வயது நிறைந்தவராகவும், மணமகள் பதினெட்டு வயது நிறைந்தவளாகவும் இருத்தல் வேண்டும்"[109] என்பர்.

## இருதார மணத்திற்குத் தண்டனை

திருமணமான ஒருவர் மீண்டும் திருமணம் செய்து கொண்டால், இந்தியத் தண்டனைச் சட்டம் **(XLV/1860)** பிரிவு 494 அல்லது பிரிவு 495இன் கீழ்க் குற்றமிழைத்ததாகக் கருதப்படுகிறார். "இச்சட்டத்தின் கீழ் திருமணஞ் செய்து கொண்ட நபரொருவருடைய மனைவி அல்லது கணவன், கணவன் அல்லது மனைவி உயிரோடு இருக்குங் காலத்தில் மறுபடியும் திருமணஞ் செய்து கொண்ட குற்றத்திற்காக இந்தியத் தண்டனைச் சட்டம், பிரிவு 494 அல்லது பிரிவு 495-இன் கீழ் வகை செய்யப்பட்டுள்ள தண்டனைகளுக்கு உள்ளாவார்கள். அவ்வாறு செய்யப்பட்ட திருமணமும் செல்லுபடியற்றதாகும்"[110] என்பர்.

## மணமுறிவு

இந்திய தண்டனைச் சட்டங்கள் ஆண் பெண் இருவருக்கும் பாதுகாப்பு அளிப்பவையாக இருக்கிறது. சட்ட விதிகள் பற்றிய

விழிப்புணர்வு இன்மையால் பெண்கள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள். சட்டம் ஒரு இருட்டறை; அதில் வக்கிலின் வாதம் ஒரு விளக்கு; அது ஏழைக்கு எட்டாத விளக்கு என்று அண்ணாதுரையின் கூற்று நோக்கத்தக்கது.

சட்ட வகைகளுக்கும் விதிகளுக்கும் உட்பட்டு கணவன் அல்லது மனைவி மணமுறிவுக்கு மனு செய்யலாம் என்று இந்தியத் தண்டனைச் சட்டம் கூறுகிறது. அதில்,

1. திருமணத்திற்குப் பிறகும் தனது வாழ்க்கைத் துணையை விடுத்து அயலார் ஒருவருடன் தன்னிச்சையாகக் காமுறு புணர்ச்சியில் ஈடுபட்டிருந்தால், அல்லது

2. மனுதாக்கல் செய்யப்படுவதற்கு உடன் முன் தொடர்ந்தாற் போல் இரண்டாண்டுகள் வரையில் மனுதாரரை விட்டுப் பிரிந்திருத்தல்; அல்லது

3. இந்தியத் தண்டனைச் சட்டத்தில் விளக்கியுரைக்கப்பட்ட குற்றங்களில் ஏதேனும் ஒன்றைச் செய்து, ஏழாண்டோ அல்லது மேலாகவோ சிறைத் தண்டனை பெற்றிருத்தல்; அல்லது

4. மனுதாரரைக் கொடுமையாக நடத்துதல்; அல்லது

5. குணப்படுத்த முடியாததும், தொடர்ந்து அல்லது விட்டுவிட்டு வரக்கூடியதுமான பித்து நிலைக்கு ஆளாகியிருத்தல்”[111] போன்ற காரணங்களுக்காக மணமுறிவிற்கு மனு செய்யலாம் என இந்தியத் தண்டனைச் சட்டம் உரைக்கிறது.

பின்வரும் காரணத்தின் அடிப்படையில் மனைவி ஒருத்தி மணமுறிவு வேண்டி மாவட்ட நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்யலாம். "கணவன் திருமணத்திற்குப் பிறகும் வன்புணர்ச்சி அல்லது ஓரினப் புணர்ச்சி அல்லது விலங்கு புணர்ச்சி போன்ற குற்றங்களை இழைத்திருப்பது"(112) என்று இந்தியத் தண்டனைச் சட்டம் கூறுகிறது.

'சமீப காலமாக இந்தியாவில் கள்ளத்தொடர்புகளும், அதன் காரணமாகக் கொலைகளும் அரங்கேறி வருகின்றன. இந்தச் சமூக அவலத்தில் தவறு செய்யும் கணவன், மனைவி மட்டும் பாதிக்கப்படுவது இல்லை. அவர்களது குழந்தைகள் அனாதைகளாகி விடுகின்றனர். இது இந்திய கலாச்சாரத்திற்கு முற்றிலும் விரோதமானது. இது உடனடியாக தடுக்கப்பட வேண்டும். இப்பிரச்சினையின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ள மத்திய அரசு இந்தியத் தண்டனைச் சட்டம் 497இல் சில திருத்தம் கொண்டுவர முடிவு செய்து, மாநில அரசுகளின் கருத்தைக் கேட்டுள்ளது.

இதுவரை இந்தியத் தண்டனைச் சட்டம் 497இல் கள்ளத் தொடர்பில் ஈடுபடும் ஆண்கள் மட்டுமே தண்டனை பெற்றுள்ளனர். பெண்களுக்கு விதி விலக்களித்து, பாதிக்கப்பட்டவராகப் பாவித்து விடுவித்ததன் விளைவாக, இன்று இந்தியாவில் கள்ளத்தொடர்புகளின் பாதிப்பு பெருகிவிட்டது.

சட்டங்கள் கடுமையானால்தான் குற்றங்களைக் குறைக்க முடியும் என்பதைக் கருத்தில் கொண்டு இந்தியக் கலாச்சாரம் மற்றும் பண்பாட்டைப் பாதுகாக்காவும், கள்ளத்தொடர்பில் ஈடுபடும் ஆண்-பெண்

இருவரும் தண்டனைக்கு உட்பட்டவர்கள் தான் என்கிற வகையில் சட்டத் திருத்தம் மேற்கொள்ள தமிழக அரசும், மத்திய அரசும் பரிந்துரை செய்யவேண்டும்'(113) என்கிறது.

## தொகுப்புரை

ஒவ்வொருவர் வாழ்விலும் இன்புக்கூறுகளுள் ஒன்றாகத் திருமணம் அமைகிறது. தற்காலத்தில் இன்பம் ஒன்றே குறிக்கோளாக இருக்க வேண்டிய இல்லறத்தில், தலைவனும் தலைவியும் தேவையற்ற, பொருத்தமற்ற காரணங்களுக்காக முன்னிற்கின்றனர்.

தொல்காப்பிய நெறிப்படி சங்ககாலத்தில் காணப்பட்ட ஊடல் பொருண்மைகள் தற்காலத்தில் முற்றிலும் மாறுபட்டு, மரபிலிருந்து விலகி, புதுமை என்ற நோக்கில் கட்டவிழ்ந்து, நிலைமாறிச் சென்று கொண்டிருப்பதை ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

கற்பு என்ற ஒழுக்கம் களவு, கற்பு என்ற இரு கைகோள்களில் காணப்பட்டாலும், அது பெண்ணிற்கே அதிகம் சுட்டப்படுகிறது. களவு காலத்தில் கற்பு பேசப்பட்டாலும் அது தலைவனோடு இணைந்து இருக்கும் பொழுதே முழுமையடைகிறது என்பது விளங்குகிறது.

தலைவனும் தலைவியும் கூடும் இல்லறத்தில் பல நிலைகளில் பிணக்கு ஏற்பட வாய்ப்புள்ளது. இருவரும் தனிமையிலிருக்கும் பொழுது பிற குடும்ப பிரச்சினைகளைப் பேசாதிருந்து, அவற்றை முற்றிலும் தவிர்த்தால் இல்லறம் இன்பமாக அமையும் என்பது பெறப்படுகிறது.

இல்லத்தில் வறுமையுற்ற போதும், தலைவன் பரத்தைமை மேற்கொண்ட போதும், நெடுநாள் பிரிவின் போதும் பிணக்குகள் தோன்றியதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. பிரிவே இல்லாமல் தொடர்ந்து மெய்யுறுப் புணர்ச்சி மேற்கொள்ளுவதாலும், அன்றி மெய்யுறுப் புணர்ச்சி இல்லாமல் பிரிந்து வாழ்தலாலும் இல்லத்தில் இன்பம் நிகழாது. அதுகருதியே கோயிலுக்குச் செல்லுதல், புனிதமாகக் கருதப்படும் நாட்களில் விரதம் மேற்கொள்ளுதல் போன்றவற்றைத் தமிழர்கள் கடைப்பிடித்து வாழ்ந்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

சங்ககாலத்தில் இல்லறத்தில் இன்பத்திற்காகவே ஊடல் கொண்டனர் என்பதும், ஊடலின் பயனாகத் தலைவனும் தலைவியும் தங்களது அன்புநிலையை உணர்ந்தார்கள் என்பதும் பெறப்படுகிறது.

மனித உணர்வுகளில் பாலுணர்வும் ஒன்று. துறவிகளும் விதிவிலக்கல்ல. முனிவர்கள் தங்கள் மனைவிமார்களுடன் வாழ்ந்துள்ளனர் என்பது பக்தி இலக்கியங்கள் காட்டுகின்றன. பாலுணர்வின் காரணமாகவே உடல் இச்சைத் தீர்க்கப்படுகிறது. இச்சை தீர்க்கப்பட்டவுடன் மனிதனின் உணர்வு சமநிலை பெறுகிறது. குழந்தைப்பேற்றிற்கு இப்பாலுணர்வு இன்றியமையாததை சங்கச் சான்றோர்கள் நன்கறிந்து, அத்தகைய காலத்தில் தலைவன் தலைவியைப் பிரியாமல் உடனுறைய வேண்டப்பட்டனர். ஊடல் வேகமாகத் தணிவதற்கு இத்தகைய பாலுணர்வு அல்லது காமம் காரணமாக அமைகின்றது என்பது அறியப்பெறுகிறது.

புலவி, ஊடல் இவைகளை நீளவிடாமல், உணவிற்கு உப்பைப் போல சுவையோடும் அளவோடும் அமைதல் வேண்டும் என்பதும்,

தலைவனிடம் பரத்தைமை ஒழுக்கம் இல்லாவிடத்தும் தலைவிக்குத் தலைவனிடம் ஊடல் உண்டாகும் என்பதும் திருக்குறள் வழி கண்டறியப்பட்டுள்ளது. திருக்குறளில் பரத்தைமை கண்டிக்கப்பட்டாலும் தலைவன் பரத்தையிடம் சென்று வந்தாகப் பாடல்களில்லை.

பிற்கால காப்பிய இலக்கியமான கம்பராமாயணத்திலும் பரத்தைமை ஒழுக்கம் இல்லாத நிலையிலும் தலைவனோடு தலைவி ஊடல் கொள்ளும் பாடல்கள் அமைந்துள்ளன. சீவகசிந்தாமணி, மணிமேகலை போன்றவைகளில் ஊடல் பொருண்மைகள் காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் தலைவன் ஊடல் கொள்ளும் பாடல்கள் உள்ளன. தலைவனின் ஊடலைத் தீர்க்க, தலைவி பெரிதும் விருப்பமுடையவளாகக் காணப்படுகிறாள். சிலப்பதிகாரத்தில் கோவலனின் கோபத்தைத் தணிப்பதற்காக மாதவி தன்னை அலங்கரித்துக் கொண்டு இன்ப புணர்விற்கு அழைத்தமைப் பெறப்படுகிறது.

இன்பத்திற்குக் காரண்மாக விளங்கக்கூடிய ஊடல் சிலப்பதிகாரத்தில் துன்பத்திற்குக் காரணமாக அமைந்துள்ளது. கோவலனின் ஊடல் மாதவியைப் பிரித்தது; பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது என்பதை ஆய்வின் வழி கண்டறியப்பட்டதாகும்.

சங்கப்பாக்கள் தலைவியை உயர்ந்தேத்தி, கற்புவழிப்பட்டவளாகக் காட்டுகின்றன. இது தமிழரின் பண்பாட்டையும் கலாச்சாரத்தையும் சங்கப்புலவோர் சிறப்பித்தமைக்குச் சான்றுகளாகும். சிலப்பதிகாரம், கம்பராமாயணம் கதைத் தலைவிகளான கண்ணகி, சீதை போன்றோர்

கற்புக்கரசிகளாகப் படைக்கப்பட்டுள்ளனர். இத்தகைய கற்புவழிபட்டவர்களாயினும் அவர்களின் உள்ளத்தில் ஊடல் இருந்தமை அறியப்பெறுகிறது.

கண்ணகி, சீதையின் ஊடல்களை நோக்கும் போது அவர்களின் கற்புநெறி மேம்படுகிறது. சினந்து கொள்ள வேண்டிய நேரத்தில் சினவாது; ஆறிய கற்பின் அடங்கிய சாயலாகக் காட்டப்பட்டுள்ளனர். பெருங்கற்புடைய பெண்டிர் தங்கள் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டமை அறியப்பெறுகிறது.

சிலப்பதிகாரம், மணிமேகலையின் தாக்கம் அதிகமாகக் காணப்படும் தற்காலப் புதினமான வைரமுத்துவின் கருவாச்சி காவியத்தில் கண்ணகி, மணிமேகலை, சீதை போன்று கற்புடைய பெண்களின் வரிசையில் கதையின் தலைவி கருவாச்சி கற்புடையவளாகப் படைக்கப்பட்டமை அறியப்படுகிறது. கருவாச்சியின் ஊடலும் பெருங்கற்புடையப் பெண்டிரைப் போல உள்ளது அறியமுடிகிறது.

பரிபாடலில் காணப்படும் மரபு மீறிய ஊடல் புதினம், சிறுகதைகளில் அதிகம் காணப்படுவது பெறப்படுகிறது.

உணர்த்த உணரும் ஊடல், உணர்த்த உணரா ஊடல் என எவ்வகை ஊடலானாலும் அளவோடு இருக்க இன்பமாகவும், அளவுக்கதிகமாகச் செல்லும் போது அது துன்பமாகவும் விளங்குகிறது. தலைவி கொள்ளும் அளவுக்கதிகமான வெற்று ஊடல் யாதொரு பயனையும் தராது. அதனால் இல்லத்தில் வறுமையும், குழந்தைக்கு உணவின்மையும் தான் கிடைக்கும்

என்று தோழி கூற்றின் வழி அறியமுடிகிறது. எவ்வளவுதான் தலைவி ஊடல் கொண்டிருந்தாலும் கையில் பிடித்த குறுமணல் போல நழுவிப் போகும் என்பது பெறப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் வாயில்கள் பிற்கால இலக்கியங்களில் குறைவாகக் காணப்படுகின்றன. பக்தி இலக்கியத்தில் ஊடல் தணிக்கும் வாயிலாக இறைவன் (சிவன்) பரவைநாச்சியாரிடம் சென்றமை அறியப்பெறுகிறது.

ஊடல் தணிக்கும் வாயில்களில் ஒன்றாக தோழி குறிப்பிடப்படுவதைச் சங்கப் பாக்கள் இயம்புகின்றன. தற்காலப் புதினம், சிறுகதைகளில் தோழி தலைவியின் இளமைக்காலத்தில் அதாவது திருமணத்திற்கு முன்பு அறிமுகமாகி, தலைவியின் திருமணத்தோடு அவர்களின் நட்பு முடிந்து விடுகிறது. தலைவி, திருமணமாகித் தலைவனின் ஊருக்குச் சென்றுவிடுவதாலும், அவரவருக்கென்று தனித்தனியாகக் கடமைகள் வரும்போது மற்றொருவர் வாழ்க்கையில் ஊடாட முடியாத நிலை இருப்பதாலும், பெண்கள் தங்கள் நட்பைத் தொடர முடியாமல் போய்விடுவதை காணமுடிகிறது.

திருமணமாகிப் பணிக்குச் செல்லும் பெண்கள்கூட தங்கள் தோழியருடன் பேசிச் சிரித்து மகிழ்ந்த போதும், இரவுக்குள் அவள் வீடு வந்து சேரவேண்டிய கட்டாயச் சூழல்கள் நடைமுறை வாழ்க்கையில் காணப்படுகிறது. ஆண்களைப் போல தோழர்களுடன் கூடி இன்புறுதல் மிகக் குறைவாகக் காணப்படுகிறது. கடிதம், தொலைபேசி மூலமாகத்

தொடர்பு கொண்டாலும் தங்களின் மனக்குறைகளைப் பகிர்ந்து கொள்ளதான் முடிகிறது. யாருக்கு யார் ஆறுதல் கூற முடியும் என்கிற நிலை உள்ளது. தோழி நேரடியாக தலைவனிடம் சென்று பேசத் தேவையில்லை என்றாலும், இல்லத் தலைவிக்கு நல்ல ஆலோசனைக் கூறும் தோழி இருக்குமானால் இல்லத்தரசி தனது குடும்பத்தை இனிதாக நடத்த முடியும் என்பது பெறப்படுகிறது.

சங்க காலத்திலும் உலகியல் வழக்காகத் தோழிக்குத் திருமணம் நடைபெற்றிருக்கலாம். தோழி திருமணம் செய்து கொண்டதாகப் பாடல்கள் இல்லை. சங்ககாலத்தைப் போல தற்கால இலக்கியங்களில் திருமணத்திற்குப் பிறகு தலைவியின் இல்லத்தில் தோழி இருப்பவளாகப் படைக்கப்படவில்லை என்பது பெறப்படுகிறது.

செவிலி என்ற பாத்திரம் தற்கால இலக்கியங்களில் பணிப்பெண்ணாகப் படைக்கப்படுகிறது. செவிலி என்ற சொற்றொடர் மருத்துவமனைகளில் நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யும் பெண்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது.

பக்தி இலக்கியத்தில், திருஞானசம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அந்தணர்-பாணர் என்ற வேறுபாடுகள் இன்றிப் பழகியதை அறியமுடிகிறது. வழிபாட்டு முறைகளிலும் திருவிழாக் காலங்களிலும் முதலிடம் பெற்றிருந்த பாணர்கள் பின்னர் வந்த சமய, சமுதாயப் பழக்கவழக்கங்களால் இழிநிலை அடைந்துவிட்டனர் என்று கூறலாம். ஏனெனில் அவர்களிடம் உடல் உழைப்பு இல்லாத காரணத்தினாலும்,

ஆதரிக்கும் வள்ளல்கள் இன்மையாலும் இவர்கள் வறுமையுற்று வாழ்பவர்களாயினர் என்பது பெறப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் ஊடல் தணிக்கும் வாயில்களில் பாணன் முக்கிய இடம்பெற்றதைப் போல, தற்காலப் புதினங்களில் இவர்கள் தரகர் என்ற சொற்றொடரால் அழைக்கப்படுகின்றனர்.

சங்க இலக்கியத்தைப் போன்றே குழந்தைகள் தலைவன், தலைவி அல்லது கணவன், மனைவிக்கிடையே பாலமாக விளங்குகின்றனர்.

சங்க காலத்தில் பெண்கள் கணவன் இருக்கும் சில இடங்களுக்குச் செல்வதில்லை. அவர்களின் கடமையில் கவனம் சிதைவு பெறும் என்ற காரணத்தினால் பெண்கள் செல்லவில்லை. ஆடவர்களோடு கடல் கடந்து செல்லவில்லை. பரத்தையர் பிரிவின் போதும் பரத்தையர் வீட்டிற்குத் தலைவி செல்ல வில்லை. தற்காலப் புதினங்களில் தனக்குத் துரோகம் செய்யும் கணவன்மார்களை கடல் கடந்து சென்று அவர்களைத் தண்டிக்கும் பெண்களைக் காணமுடிகிறது.

தற்காலத்தில் கணவனின் பரத்தைமையை அறிந்த பெண்கள் அவர்களோடு மணமுறிவு செய்துகொண்டமை அறியப்பெறுகிறது. அவ்வாறு மணமுறிவு செய்து கொண்டாலும் தனக்குரிய பொருளாதார வசதிகளுக்கு எந்தவித பாதிப்பும் இல்லாத வகையில் அவர்களிடமிருந்து இழப்பீட்டுத் தொகையைப் பெறத் தவறவில்லை.

ஆணுக்கு நிகராகப் பொருளாதாரத்தில் தன்னிறைவு அடைந்திருக்கும் சில பெண்கள் கணவனை ஒரு பொருட்டாக

மதிப்பதில்லை என்பதும்; சில பெண்கள் கணவனிருக்க மற்றொரு ஆடவனை விரும்பிச் செல்லுதலும் நடைபெறுகின்றது என்பதும் தற்கால இலக்கியங்களின் வழி அறியலாகிறது.

ஊடலுக்குக் காமம் இன்றியமையாதது என்றாலும், கணவனின் மிகைப் பாலியல் துன்புறுத்தல்களுக்கு ஆளாகும் பெண்கள் தங்கள் கணவன்மார்களை மணமுறிவு செய்துள்ளனர் என்பதும் பெறப்படுகிறது.

கலித்தொகை, பரிபாடல்களில் காணப்படும் விலைமகளிர் தொடர்ந்து இன்றுவரை பரவி உள்ளனர் என்பதும் அறியலாகிறது.

அறக்கழிவுப் பாடல்கள் பயனுள்ளவையாயினும் அவற்றைப் பாடுதல் கூடாது என்ற தொல்காப்பிய விதியின்படி சங்க இலக்கியத்தில் புலவர்கள் அவற்றைத் தவிர்த்துள்ளமைப் புலனாகிறது. ஆந்திரநாட்டு அகநானூறு என்றழைக்கப்படும் காதா சப்தசதி போன்றவைகளில் காணப்படும் அறக்கழிவு கோட்பாடுகள் சங்க இலக்கியங்களில் காணப்பெறாமை, தமிழ்ப் புலவர்களின் சான்றாண்மையைக் காட்டுகின்றன.

தற்காலத்தில், திருமணமான ஒருவர் மனைவி உயிருடன் இருக்க இரண்டாவது திருமணம் செய்து கொண்டால், இந்தியத் தண்டனைச் சட்டம் (XLV/1860) பிரிவு 494 அல்லது பிரிவு 495இன் கீழ்க் குற்றமிழைத்ததாகக் கருதப்படுகிறார்.

தற்போது ஆண்களுக்கு இணையாகச் சில பெண்களும் கள்ளத்தொடர்பு, கணவனிருக்க பிற ஆடவரை நாடுவது, உடலமைப்பில் தனக்குள்ள வாய்ப்பைப் பயன்படுத்திப் பரத்தையாகச் செயல்படுதல்

போன்ற அறக்கழிவுகள் நிகழ்ந்துவரும் நிலையில் அவற்றைப் படைப்பாளர்கள் தங்கள் படைப்புகளில் கொணரத் தவறவில்லை என்பது பெறப்படுகிறது.

இந்தியத் தண்டனைச் சட்டம் 497இல் கள்ளத் தொடர்பில் ஈடுபடும் ஆண்கள் மட்டுமே தண்டனை பெற்றுள்ளனர். பெண்களுக்கு விதி விலக்களித்து, பாதிக்கப்பட்டவராக பாவித்து விடுவித்ததன் விளைவாக, இன்று இந்தியாவில் கள்ளத்தொடர்புகளின் பாதிப்பு பெருகிவிட்டது.

சட்டங்கள் கடுமையானால்தான் குற்றங்களைக் குறைக்க முடியும் என்பதை கருத்தில் கொண்டு இந்திய கலாச்சாரம் மற்றும் பண்பாட்டை பாதுகாக்காவும், கள்ளத்தொடர்பில் ஈடுபடும் ஆண்-பெண் இருவரும் தண்டனைக்கு உட்பட்டவர்கள் தான் என்கிற வகையில் சட்டத் திருத்தம் கொண்டுவந்தால் இத்தகைய குற்றங்கள் குறையும் என்பது பெறப்படுகிறது.

சங்ககாலம் ஆணிற்குரிய கடமைகளையும் பெண்ணிற்குரிய உரிமைகளையும் விளக்குகிறது. ஆணின் பலதார மணமும், பரத்தைமை பெண்களுடைய வாழ்வியல் போன்றவற்றைக் குறிப்பிட்டாலும், அதில் ஓர் ஒழுங்கு கட்டமைப்பினைக் காணமுடிகிறது. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்ற அகத்திணைக் கோட்பாடுகளை, இல்லற நெறிகளை இன்றைய இளைய சமுதாயம் பின்பற்றி, ஒருவருக்கொருவர் வணங்கி நடக்காமல்; இணங்கி நடந்தாலே இல்லறம் சிறப்புறும் என்பது பெறப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. இளம்பூரணர், தொல்.பொருள்.களவு. ப.7.
2. இரா.பிரேமா, கற்பு கலாச்சாரம், ப.7.
3. தொல்.பொருள்.செய்யு. நூ.48.
4. தொல்.பொருள்.கற்பு. நூ.111.
5. மேலது, நூ.145.
6. அகம். 323.
7. இளம்பூரணர், தொல்.பொருள்.பொருளி. ப.247.
8. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்.கற்பு. ப.242.
9. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.477.
10. தொல்.பொருள்.கற்பு. நூ.144.
11. தொல்.பொருள்.களவு. ப.145.
12. திருக்குறள், 1304.
13. தொல்.பொருள்.கற்பு. நூ.145.
14. இளம்பூரணர், தொல்.பொருள்.கற்பு. ப.188.
15. திருக்குறள் (பரிமேலழகர் உரை), குறள்.1109.
16. தொல்.பொருள்.பொருளி. நூ.219.
17. திருக்குறள் 1302.
18. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.246.
19. தொல்.பொருள்.கற்பு. நூ.158.
20. மேலது, நூ.159.
21. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.394.
22. மேலது, நூ.145.
23. மேலது, நூ.144.
24. தொல்.பொருள். அகத்திணையியல் நூ.44.
25. திருநீலகண்டர், 5.

26. கலித். 73: 11-12.

27. கலித். 79: 7-9.

28. கலித். 73: 8-9.

29. கலித். 79: 12-14.

30. கலித். 73: 16-17.

31. கலித். 73: 20-23.

32. தொல்.பொருள்.பொருளி.நூ.22.

33. புறநா. 10.

34. பதிற்றுப். 63.

35. மேலது, 57: 13-17.

36. ஐங்.97.

37. திருக்குறள். 1317.

38. மேலது, 1318.

39. குறுந்.86.

40. த.கோ.செ.379.

41. திணை.நூற். 135.

42. த.கோ.செ.393.

43. சீவகசிந்.குணமாலை. 167.

44. தொல்.பொருள்.கற்பு. ப.322.

45. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்.கற்பு. ப.322.

46. மேலது, ப.413.

47. தொல்.பொருள்.கற்பு. நூ.176.

48. கலித்.20.

49. நற். 310.

50. தொல்.பொருள்.கற்பு. நூ.153.

51. இறையனார் களவியல் நூ. 50.

52. திருக்குறள். 1303.

53. முத்தொள்ளாயிர விளக்கம், 104.

54. சிலம்பு: கடல் ஆடுகாதை: 74-75.

55. மேலது, 76-110.

56. தொல்.பொருள்.பொருளி.நூ.229.

57. நாலடியார், பா.384.

58. சிலம்பு:கனாத்திறம் உரைத்த காதை:69-71.

59. மேலது, 72-73.

60. தொல்.பொருள்.கற்பு. நூ.148.

61. அகம். 286.

62. தொல்.பொருள்.கற்பு. நூ.157.

63. குறுந்.93.

64. அகம் 316: 11-17.

65. காதா சப்தசதி: 9: அனீகன் (1-10)

66. மேலது, 66: பாலிதகன் (1-74)

67. தொல்.பொருள்.கற்பு. நூ.148.

68. திருஞானசம்பந்தர் புராணம், 134.

69. சிவகாமி, ஆனந்தாயி, ப.45.

70. ஐங்.82.

71. ஐங்.43, 49, 82, அகம்.56.

72. தொல்.பொருள்.கற்பு. நூ.122.

73. திருக்குறள், 56.

74. நாலடியார், 363.

75. நாற்கவிராசநம்பி, அகப்பொருள் விளக்கம், நூ.111.

76. தொல்.பொருள்.செய்யுளி. நூ.500.

77. ஐங். 401.

78. திருக்குறள், 60.

79. தொல்.பொருள்.கற்பு. நூ.149.

80. நாலாயிர திவ்ய பிரபந்தம், பா.689.

81. தொல்.பொருள்.பொருளி. நூ.200.

82. தொல்.பொருள்.கற்பு. நூ.173.

83. தொல்.பொருள்.அகத்திணையியல். நூ.37.

84. புறநா. 361.

85. தொல்.பொருள்.களவு. நூ.171.

86. குறுந். 397.

87. தொல்.பொருள்.கற்பு. நூ.149.

88. மேலது, நூ.149.

89. நற். 330.

90. அகம்.16.

91. கலித். 101.

92. நம்மாழ்வார், திருவாய்மொழி, 5:4:4:1-2.

93. திருமந்திரம், பா.2833.

94. தொல்.பொருள்.பொருளி.22.

95. சிலம்பு நா.செல்வராசு, வள்ளுவப் பெண்ணியம், ப.106.

96. மேலது, ப.106.

97. க.மோகன், பொன்னான அடிகளார், பக்.27-28

98. தாயம்மாள் அறவாணன், பெண் இன்று நேற்று அன்று, ப.23.

99. கம்ப.பாலகாண்டம், தொகுதி-2, பூக்கொய்படலம், பா.990.

100. திருக்குறள், 1317.

101. கம்ப.பாலகாண்டம், தொகுதி-2, பூக்கொய்படலம், பா.991.

102. மேலது, 993.

103. காதா சப்தசதி: 22: போஜயன்(1-32).

104. கம்ப.பாலகாண்டம், தொகுதி-2, பூக்கொய்படலம், பா.995.

105. மேலது, 992.

106. கம்ப.பாலகாண்டம், தொகுதி-2, உண்டாட்டுப் படலம், பா.1077.

107. பரி.7: 68-75.

108. தொல்.பொருள்.கற்பு. நூ.88.

109. புலமை வேங்கடாசலம், திருமணமும் விவாகரத்தும், ப.5.

110. மேலது, பக்.71-72.

111. மேலது, ப.58.

112. மேலது, ப.59.

113. தினமலர் நாளிதழ் (மதுரை) நாள்: 31.12.2008, ப.6.

# முடிவுரை

தமிழ் செம்மொழி என்ற மதிப்பைப் பெறுவதற்குக் காலப் பழமையும், பிறமொழிக் கலப்பின்மையும், பரந்த இலக்கிய வளமும் கொண்ட சங்க இலக்கியங்கள் அடித்தளமாக அமைந்தன. தொல்காப்பியத்தின் கருவறை என விளங்கும் பொருளதிகாரம் அகம், புறம் என வாழ்க்கையின் பொருளுணர்த்தி நிற்கவல்லன. தொல்காப்பியம் ஊடலுக்கு அளிக்கும் விளக்கத்தின் அடிப்படையில் ஊடல் என்ற சொற்பொருள் கையாளப்பட்டுள்ளது.

மனித உணர்வுகள் ஆண், பெண் என்ற வேறுபாடின்றி அனைவருக்கும் உண்டாகக் கூடியவை. அத்தகைய உணர்வுகளில் ஊடலும் ஒன்றாகும். உள்ளத்தளவிலே வெறுப்பைக் கொண்டிருப்பது புலவியாகும். மனத்தளவில் உண்டாகும் வெறுப்பை மெய்ப்பாட்டாலும் சொல்லாலும் வெளிக்காட்டுவது ஊடலாகும். அதன் முதிர்ச்சியே துனியாகும் என்பது அவை வைப்புமுறையாலும் அறியப்படுகிறது.

மனித உணர்வுகள் எல்லா இடங்களிலும், எல்லா நிலங்களிலும் இருக்கும் என்பது இயல்பானது. உணர்வுப் போராட்டமாகக் கருதப்படும் ஊடலை மருதத்திணை ஒழுக்கமாக உரையாசிரியர்கள் உரையாத்துள்ளனர். தொல்காப்பியர் யாதொருவிடத்திலும் ஊடல் மருதவொழுக்கம் எனக் குறிப்பிடவில்லை.

ஊடல் பெண்ணிற்குப் பிறப்பியல்பு என்பதினால் பெண்ணிற்கு மட்டும் ஊடல் உண்டாவதில்லை; தலைவனுக்கும் ஊடல் உண்டாகும் என்பது தொல்காப்பியத்தின்வழி அறியலாகிறது.

திருமணத்திற்கு முன்பு தலைவனுக்குப் பரத்தையர் தொடர்பு இல்லை என்பது பெறப்பட்டுள்ளது.

பரத்தையற் பிரிவு கடல் கடந்தோ, நாடு கடந்தோ நிகழவில்லை; அவை உள்ளூரிலே நிகழ்ந்தது என்பதும் அறியப்பெறுகிறது.

இவ்வூடலுக்கு உரையாசிரியர்கள், அகராதிகள், நிகண்டுகள் போன்றவைகளின் விளக்கத்தின் அடிப்படையில் ஊடல் பற்றிய இலக்கண வரையறை தரப்பட்டுள்ளது.

சங்ககாலத்தில், ஒருவனின் பல மனைவியரிடையே நிகழ்ந்த பூசலின் இலக்கிய வடிவம் ஊடல் எனப்படுகிறது. பலதார மணத்திற்கு எதிராக எழுப்பப்பட்ட உரிமைக்குரல் ஊடலில் தொடங்குகிறது.

சங்க இலக்கியத்தில் கற்பு என்ற ஒழுக்கம் களவு, கற்பு என்ற இரு கைகோள்களில் காணப்பட்டாலும், அதில் பெண்ணிற்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. களவுக் காலத்தில் கற்பு பேசப்பட்டாலும் அது தலைவனோடு இணைந்திருக்கும் பொழுது முழுமையடையவது காணலாகிறது.

தலைவன் தன் குடிப்பெருமையை உணராமல், ஊராரின் பழிச்சொல்லுக்கு அஞ்சாமல், பரத்தைக்கு முன்னுரிமை தருவதாக நினைப்பதன் காரணமாகவும், தலைவன் பல பரத்தையர்பால் தொடர்புடையவன் என்பதினாலும், பரத்தைமைத் தவறு என்று உணராமல் இருப்பதன் காரணமாகவும் தலைவிக்கு ஊடல் உண்டாகிறது. சங்க இலக்கியத்தில் ஊடலுக்குக் காரணமாக அமைவது வேறொரு பெண் அல்லது பரத்தையர் ஆவர் என்பது பெறப்படுகிறது.

அறம் கருதியும், தலைவன் குறைவற்ற அன்புடையவன் என எண்ணுவதாலும், தலைவனின் பொய்ச் சூளின் காரணமாக அணங்கு, தெய்வம் முதலியன அவனை வருத்துமோ என அஞ்சியும், தோழியின் அறிவுரையினாலும் தலைவி தலைவனுக்கு வாயில் நேர்கிறாள்.

தமிழ்ப் பெண்களின் கற்பினைக் காட்டுவதற்காகப் பரத்தைமை நிகழவில்லை. வாயில் மறுத்தலால் பரத்தைமைத் தவறு என்பதும், வாயில் நேர்தலால் தவறு சரி செய்யப்படுவதும் நிகழ்ந்துள்ளன.

வாயில்களில் தோழி, தலைவன் தலைவியரிடையே நிகழும் அன்புப் பூசலை விலக்கி, அவர்களை ஒன்றிணைத்து வைக்கும் ஓர் உன்னதப் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளாள். வாயில்களாக வருவோர் தலைவன் தலைவியரின் இல்லற வாழ்க்கைச் சிறப்பாக அமைய வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு படைக்கப்பட்டுள்ளனர் என்பது அறியலாகிறது.

தலைவன் பரத்தையை நாடிச் செல்வதால், அவனுடன் ஊடல் கொள்வதில் யாதொரு பயனுமில்லை. இல்லறப் பெண்டிர் எதையும் தாங்குதல் வேண்டும் என்பது அக்கால வாழ்வியல் பார்வையாக இருந்துள்ளது. ஊடல் நீட்டித்துத் தலைவி உரிமைக்குரல் எழுப்பினால் திருமகள் நீங்குவாள் என எச்சரிக்கப்படுகிறாள். பொருளீட்டுதல் பெண்டிருக்கு இல்லாததினால், தலைவன் நீங்கப் பொருளும் நீங்கலாம். தனிமையும், வறுமையும் துன்புறுத்தும். எளிய உணவு உண்ண வேண்டும். இனிய புதல்வரும் துன்புறுவர். அதனால் தலைவி ஊடலை நீட்டிக்காமல் இருத்தல் நலம் பயக்கும். வெறுமையான புலத்தல் பயனற்ற ஊடலே ஆகும் என்பதும், பரத்தைமை மேற்கொண்ட தலைவனிடம் கோபம் கொண்டால் இழப்பு பெண்களுக்கு ஏற்படும் என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

தலைவிக்காகப் பாணன் தலைவனிடம் தூது சென்றமைப் பெறப்படுகிறது. பாணனைத் தவிர, கூத்தர், விறலி போன்றோர் ஊடல் தீர்க்கும் வாயில்களாக இருந்தமைக்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகளில்லை.

ஊடல் தணிக்கும் வாயிலாகப் புதல்வனும் காணப்படுகிறான். விருந்தெதிர் ஊடாமை, புதல்வனெதிர் ஊடாமை போன்றவை சங்க இலக்கியத்தில் கடைப்பிடிக்கப்பட்ட அறநெறிகளாகும்.

சங்க இலக்கியத்தில் தலைவிக்குத் தலைவனின் பரத்தைமை காரணமாக மட்டும் ஊடல் நிகழவில்லை. பொருள்வயிற் பிரிந்த நிலையிலும் ஊடல் உண்டாகும் என்பது ஆய்வில் பெறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியப் பரத்தையர் பொருட் பெண்டிராகவோ, ஒருவர்மாட்டும் தங்காதவராகவோ அறியப்படவில்லை. கலித்தொகை, பரிபாடலில் விலைமகளிர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

பரத்தையர்கள் தலைவனோடு திருமண வாழ்க்கை வாழ்ந்துள்ளனர். திருமணம் செய்து வாழ்ந்தாலும் தலைவி தலைவனைத் தன்னிடமிருந்து பிரித்துவிடுவாளோ என அஞ்சியமையும், யானும் அவன் ஒருவனையே வரித்த ஒருமை நெஞ்சம் கொண்டவள் ஆயினேன் என்பதினாலும் பரத்தை, தலைவன் ஒருவனிடம் மட்டும் காதல் கொண்டமைப் புலனாகிறது.

தலைவிக்குத் தங்கையாகவும், இணையாகவும் வைத்துப் பரத்தையர் பேசப்படுகின்றனர். இருவரும் சந்தித்துக் கொண்டதும் நிகழ்ந்துள்ளது. காதற்பரத்தை, சேரிப்பரத்தை, நயப்புப்பரத்தை, இற்பரத்தை, இல்லிடப் பரத்தை என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். மூலப்பாடல்களில் இவை காணப்படவில்லை என்பது அறியப்பட்டுள்ளது.

சங்ககாலப் பரத்தையர் ஆடவர் பலரோடு தொடர்பு கொண்டனர் என்பதற்குச் சான்றுகளில்லை.

ஊடல் இல்லத்துக்குள்ளேயே நடைபெறுதல் வேண்டும். பிறர் அறிய பொது இடங்களில் ஊடல் கொள்வது மரபாகாது. ஊரறிய ஊடல்

கொண்ட தலைவியைப் பற்றிப் பரிபாடல் சுட்டுகிறது. பரிபாடலில் கீழ்நிலை மக்களாகப் பரத்தையர் பேசப்படுகின்றனர் என்பது பெறப்பட்டுள்ளது.

பெரும் வீரம் கொண்ட மன்னர்களும் ஊடல் காலத்தில் காதல் மகளிரிடம் அடிமேல் வீழ்ந்ததைப் பதிற்றுப்பத்துப் பாடல்களால் அறியமுடிகிறது. புறநானூற்றில் பேகன் கண்ணகியைத் துறந்து நல்லூர் பரத்தையிடம் சென்றதும்; பிரிவுக்குக் காரணம் பரத்தை என்பதினாலும் இவை ஊடலில் விளக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தின் தாக்கம் பிற்கால இலக்கியங்களில் இழையோடிக் காணப்படுகிறது.

தொல்காப்பியர் அகத்திணையியல், களவியல், கற்பியலில் கூறியச் செய்திகளை வள்ளுவர் காமத்துப்பால் என்ற பொதுத்தலைப்புக்குள் வகைப்படுத்தியமை அறியப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தின் அடியொற்றி வள்ளுவரும் ஊடல் உணவிற்கு உப்பைப் போல் இருக்க வேண்டும் என்கிறார். பரத்தைமை இல்லாத காலங்களிலும் தலைவிக்கு ஊடல் நிகழ்வதை வள்ளுவர் குறிப்பிட்டுள்ளமை சுட்டப்பட்டுள்ளது.

திருக்குறளில் தலைவன் பரத்தையிடம் சென்றுவந்ததாகப் பாடல்கள் இல்லை. ஆடவனின் பலதார மணத்தால் நிகழ்ந்த உச்சகட்ட நிலையினை வள்ளுவரின் ஊடல் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன என்பது பெறப்பட்டுள்ளது.

பிற்கால இலக்கியமான பக்தி இலக்கியத்தில் இறைவனிடம் உறவும் உரிமையும் கொண்டாடுவது இறையடியார்களின் தனிச்சிறப்பாகும்.

கணவன் தனக்கு மட்டும் உரியவனாக இருக்க வேண்டிய நிலையில் பரத்தையிடம் சென்று வந்தமை தவறு என்பதையும், ஆடவர் கற்புக்கு இழுக்கு என்பதையும் திருநீலகண்ட நாயனாரின் மனைவி நன்கு உணர்த்தியமை உணரப்படுகிறது. தவற்றைத் தட்டிக் கேட்கும் உரிமை இல்லாமையால் தன்னால் இயன்ற அளவுக்கு மெய்யுறு புணர்ச்சியை மட்டும் தடை செய்தது சங்க இலக்கியத்திலும் காணப்படாதப் புதுமையான அறப்போராட்டம் எனலாம்.

பக்தி இலக்கியத்தில் ஊடல் தணிக்கும் வாயிலாக இறைவன் இருந்தது அறியப்பட்டுள்ளது.

அந்தணர்-பாணர் என்ற வேறுபாடு இல்லாமல் பழகியதை பக்தி இலக்கியத்தில் காணமுடிகிறது.

சிலப்பதிகாரத்தில் கோவலனின் ஊடல் மாதவியைப் பிரித்தது; பாண்டிமாதேவியின் ஊடல் கோவலனின் உயிரைப் பறித்தது என்பது ஆய்வில் பெறப்பட்டுள்ளது.

மனைவியைத் தவிரப் பிற பெண்டிரைப் புணர்ந்தாலும் கற்புடைய மகளிர் புலத்தல் கொள்ளக்கூடாது என்பதும், பெருங்கற்புடைய மகளிர் தங்கள் ஊடலை வெளிக்காட்டுவதில் குறிப்பறிந்து செயல்பட்டனர் என்பதும் காப்பியங்களின் வழி உணரப்பட்டுள்ளது.

கம்பராமாயணத்தில் ஊடல் பாடல்களில் வருணனை, கற்பனை மிகுதியாகக் காட்டுப்பட்டுள்ளன.

முத்தொள்ளாயிரம், தஞ்சைவாணன் கோவை, முக்கூடற்பள்ளு போன்ற இலக்கியங்களில் ஊடல் பொருண்மைகள் இடம்பெற்றுள்ளன. சிற்றிலக்கியங்களில் களவும் காமமும் மிகுதியாகவும், கற்பு குறைவாகவும்

காணப்படுவதால் ஊடல் அதிகமாக வெளிப்படவில்லை. சிற்றிலக்கியங்கள் பலவும் பெரும்பான்மை புலமை இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

மொழிபெயர்ப்பு இலக்கியமான ஆந்திரநாட்டு அகநானூறு என்றழைக்கப்படும் காதா சப்தசதியில் ஊடல் செய்திகள் இருப்பினும், அறக்கழிவு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆய்வுப் பொருளின் அழுத்தம் கருதி இவ்விலக்கியத்தில் ஊடல் பயின்றுவருதல் புலப்படுத்தப்பட்டுள்ளது.

புதினம், சிறுகதைகளில் பெண்களின் கல்வி, பொருளாதாரம், விழிப்புணர்வு போன்ற காரணங்களினால் குடும்ப நிலைகளில் மரபுகளும், மாற்றங்களும் நிகழ்வது அறியப்பட்டுள்ளது.

வாழ்க்கைத் துணையாக வந்த பெண்ணிடம் கணவன் மனித குணங்களோடு இயங்குகிற போது இல்லறம் இனிமையாக அமையும். மிருக குணங்களுடன் கணவன் செயல்படுகிற போது மனைவி முடிந்த அளவிற்குப் பொறுக்கிறாள்; பொறுமை கடந்த நிலையில் கணவனைப் புறக்கணிக்கவும் தயங்காத பெண்களைப் புதினங்களின் வழி காணப்பட்டுள்ளது.

தொல்காப்பிய நெறிப்படி சங்ககாலத்தில் ஊடலின் பயனாகத் தலைவனும் தலைவியும் தங்களது அன்பு நிலையை உணர்ந்தார்கள் என்பதும்; ஊடல் மலர்களுக்கு புற இதழ்களைப் போலவும், உடலுக்கு ஆடையினைப் போலவும் கூடலுக்கு ஒரு திரையாக நின்று, கூடும் ஆர்வத்தைத் தூண்ட வேண்டும். ஒருவருக்கொருவர் வணங்கி நடக்க வேண்டாம்; இணங்கி நடந்தாலே போதுமானது. தற்காலத்தில் அவை முற்றிலும் மாறுபட்டு, மரபிலிருந்து விலகி, புதுமை என்ற நோக்கில்

கட்டவிழ்ந்து, நிலைமாறிச் சென்று கொண்டிருப்பதும் ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

கண்ணகி, சீதை போன்றவர்கள் சினந்து கொள்ள வேண்டிய நேரத்து சினவாது; ஆறிய கற்பின் அடங்கிய சாயலாகக் காணப்படுவதைப் போல தற்கால புதினமான கருவாச்சி காவியத்தின் நாயகியும் காணப்படுவதை அறியப்பட்டுள்ளது.

ஊடல் தணிக்கும் வாயில்களில் ஒன்றாக தோழி குறிப்பிடப்படுவதைச் சங்கப் பாக்கள் இயம்புகின்றன, தற்காலப் புதினம், சிறுகதைகளில் தோழி தலைவியின் இளமைக்காலத்தில் அதாவது திருமணத்திற்கு முன்பு அறிமுகமாகி, தலைவியின் திருமணத்தோடு அவர்களின் நட்பு முடிந்து விடுகிறது. அவரவருக்கென்று தனித்தனியாகக் கடமைகள் வரும்போது மற்றொருவர் வாழ்க்கையில் ஊடாட முடியாத நிலை இருப்பதாலும், பெண்கள் தங்கள் நட்பைத் தொடர முடியாமல் போய்விடுவதைக் காணமுடிகிறது.

திருமணமாகிப் பணிக்குச் செல்லும் பெண்கள்கூட தங்கள் தோழியருடன் பேசிச் சிரித்து மகிழ்ந்த போதும், இரவுக்குள் அவள் வீடு வந்து சேரவேண்டிய கட்டாயச் சூழல்கள் நடைமுறை வாழ்க்கையில் காணப்படுகிறது. ஆண்களைப் போல தோழர்களுடன் கூடி இன்புறுதல் மிகக் குறைவாகக் காணப்படுகிறது. கடிதம், தொலைபேசி மூலமாகத் தொடர்பு கொண்டாலும் தங்களின் மனக்குறைகளைப் பகிர்ந்து கொள்ளதான் முடிகிறது. தோழி நேரடியாக தலைவனிடம் சென்று பேசத் தேவையில்லை என்றாலும், இல்லத் தலைவிக்கு நல்ல ஆலோசனைகள்

கூறும் தோழி இருப்பாளானால் இல்லத்தரசி தனது குடும்பத்தை இனிதாக நடத்த முடியும் என்பது பெறப்பட்டுள்ளது.

தற்காலப் புதினங்களில் செவிலி பணிப்பெண்ணாகப் படைக்கப்பட்டுள்ளமை அறியப்பட்டுள்ளது. பாணர்கள் தற்போது தரகர்கள் என்றழைக்கப்படுவதைப் புதினங்களின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

தற்காலப் புதினங்களில் கணவனின் பரத்தைமைய அறிந்த பெண்கள் அவர்களோடு மணமுறிவு செய்யவும் தயங்கவில்லை என்பது கண்டறியப்பட்டுள்ளது.

கடல் கடந்து சென்று தனக்குத் துரோகம் இழைக்கும் கணவன்மார்களைப் புறந்தள்ளும் பெண்களும் தற்போது காணப்படுகின்றனர்.

பொருளாதாரத்தில் தன்னிறைவு அடைந்த சில பெண்கள் கணவன்மார்களை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை என்பதும், கணவனிருக்க பிற ஆடவரை நாடிச் செல்லும் மங்கையரும் தற்காலப் புதினங்களில் காணப்படுகின்றனர்.

சங்க இலக்கியத்தில் இருதார மணம் கடியப்பட்டாலும் தண்டிக்கப்படவில்லை. தற்போது இருதார மணம் செய்தல் குற்றம் என்று இந்தியத் தண்டனைச் சட்டம் குறிப்பிடுகிறது. பணக்காரர்களும், பிரபலங்களும் பலதார மணம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். சட்டங்கள் கடுமையாக்கப்பட்டால் தான் இன்றைய இல்லறம் சீர்பெறும் என்பது ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

சங்கப்பாக்களை மீட்டுருவாக்கம் செய்யவும், காலந்தோறும் பரத்தையர்களின் நிலைகளைப் பற்றி மேலாய்வு செய்வதற்கும் இவ்வாய்வு துணை செய்கிறது.

# துணைநூற் பட்டியல்

## I. இலக்கண நூல்கள்


1. ------------- தொல்காப்பியம் பொருளதிகாரம்,
இளம்பூரணர் உரையுடன்,
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1953.

2. ------------- தொல்காப்பியம் பொருளதிகாரம்,
அகத்திணையியல், புறத்திணையியல்,
களவியல், கற்பியல், பொருளியல்
நச்சினார்க்கினியர் உரை,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1966.

3. ------------- தொல்காப்பியம் பொருளதிகாரம்
பேராசிரியர் உரை,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1959.

4. இளவழகன், கோ., (ப.ஆ) தொல்.பொருள்.பேராசிரியம் - I
தமிழ்மண் பதிப்பகம்,
2, சிங்காரவேலர் தெரு,
தியாகராயர் நகர்,
சென்னை - 17,
முதற்பதிப்பு - 2003.

5. கோவிந்தராச முதலியார், கா.ரா. (ப.ஆ.) — அகப்பொருள் விளக்கம்,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 18,
2004.

6. சிவலிங்கனார், ஆ. — தொல்காப்பியம் உரைவளம்
பொருளதிகாரம்
பொருளியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ (அஞ்சல்) தரமணி,
சென்னை - 600 113,
1975.

7. சுப்பிரமணியன். ச.வே., — தொல்காப்பியம் தெளிவுரை,
மணிவாசகர் நூலகம்,
சென்னை,
1999.

8. வெள்ளைவாரணன், க. — தொல்காப்பியம் கற்பியல்
உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
1983.

9. ------------- — களவியல் என்ற இறையனார்,
அகப்பொருள் நக்கீரர் உரை,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1958.

10. ------------- நம்பி அகப்பொருள் விளக்கம்,
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1963.

11. மேலது, வீரசோழியம்,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1970.

## II. இலக்கிய நூல்கள்

12. அறவாணன், க.ப., அற்றைநாட் காதலும் வீரமும்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் - 1,
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

13. ஆலாலசுந்தரஞ்செட்டியார், இயற்றமிழ்,
சிவனகம்,
S/19ஆசிரியர் குடியிருப்பு,
தாம்பரம், சென்னை,
இரண்டாம் பதிப்பு 1964.

14. கதிர் முருகு,
சந்திரமோகன், இர., (உ.ஆ)., முக்கூடற் பள்ளு (மூலமும் உரையும்)
சாரதா பதிப்பகம்,
ஜி-4 சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14,
முதற்பதிப்பு பிப்பிரவரி 2007.

15. காசி விசுவநாதன் செட்டியார்,
பெரி.பழ.மு (வெ.ஆ) அகநானூறு களிற்றியானை நிரை,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1947.

16.மேலது, அகநானூறு மணிமிடை பவளம், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1949.

17.மேலது, அகநானூறு நித்திலக் கோவை, மறுபதிப்பு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1957.

18.மேலது, கலித்தொகை, ஆறாம் பதிப்பு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1962.

19.சண்முகம் பிள்ளை, மு. குறுந்தொகை மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர். 1985.

20. சரளா இராசகோபாலன், குறுந்தொகை ஓவியங்கள், ஒளிப் பதிப்பகம், 63, டாக்டர் அரங்காச்சாரி சாலை, சென்னை - 600 018. முதற்பதிப்பு அக்டோபர் 1995.

21. மேலது, வள்ளுவரின் காமத்துப்பால், ஒளிப் பதிப்பகம், 63, டாக்டர் அரங்காச்சாரி சாலை, சென்னை - 600 018. முதற்பதிப்பு அக்டோபர் 1999.

22. மேலது, இறைமைத் தமிழ்,
ஒளிப் பதிப்பகம்,
63, டாக்டர் அரங்காச்சாரி சாலை,
சென்னை - 600 018.
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

23.சாமிநாதையர், உ.வே.,(உ.ஆ) குறுந்தொகை மூலமும் உரையும்,
மூன்றாம் பதிப்பு,
கபீர் அச்சுக் கூடம்,
சென்னை - 1,
1955.

24.மேலது, ஐங்குறுநூறு,
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1966.

25.மேலது, நற்றிணை மூலமும்
விளக்கவுரையும்
1 முதல் 200 வரை,
அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை - 1,
1966.

26.மேலது, நற்றிணை மூலமும்
விளக்கவுரையும்
201 முதல் 400 வரை,
அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை - 1,
1968.

27. சிவகாமி — ஆனந்தாயி,
11, சிவப்பிரகாசம் தெரு,
பாண்டிபசார், தி.நகர்,
சென்னை - 600 017.
மூன்றாம் பதிப்பு-செப்டம்பர் 1995.

28. மேலது — நாளும் தொடரும்,
தமிழ்ப் புத்தகாலயம்,
11, சிவப்பிரகாசம் தெரு,
பாண்டி பஜார், தி.நகர்,
சென்னை - 600 017.
இரண்டாம் பதிப்பு ஜூலை 1995.

29. சிவசங்கரி — 47 நாட்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1979.

30. மேலது — ஆயுள் தண்டனை,
திருமகள் நிலையம்,
சென்னை,
1980.

31. மேலது — திரிசங்கு சொர்க்கம்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1983.

32. மேலது — பாலங்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1983.

33.மேலது பொய்,
திருமகள் நிலையம்,
சென்னை,
1985.

34. மேலது வெட்கம் கெட்டவர்கள்,
கங்கை புத்தக நிலையம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை - 600 017,
மூன்றாம் பதிப்பு, நவம்பர் 1991.

35. மேலது வானத்து நிலா,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1989.

36. மேலது மண் குதிரை,
திருமகள் நிலையம்,
சென்னை,
1985.

37. சிவம் சிவராசன் சங்க இலக்கிய வாழ்வியல்,
சிவம் பதிப்பகம்,
2/82 Q 9, காந்திநகர்,
விருபாட்சிபுரம்,
வேலூர் - 632 002.
முதற்பதிப்பு 1998.

38. சுப்பிரமணிய பாரதியார், சி., பாரதியார் கவிதைகள்,
பாரதி பதிப்பகம்,
108, உஸ்மான் சாலை,
தி.நகர், சென்னை - 17,
முதற்பதிப்பு டிசம்பர் 1995.

39. சுப்பிரமணியன். ச.வே.,(உ.ஆ), சிலப்பதிகாரம்,
கங்கை புத்தக நிலையம்,
13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை-17,
முதற்பதிப்பு மார்ச் 1998.

40. செயபால, இரா., (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.
41,பி, சிட்கோ இன்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை - 600 098.

41.சோமசுந்தரனார், பொ.வே., ஐங்குறுநூறு மூலமும் உரையும்,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1916.

42. செல்வராசு, நா. சிலம்பு., வள்ளுவப் பெண்ணியம்,
தாயறம்,
11 3, வயலூர் நெடுஞ்சாலை,
குமரன் நகர் பேருந்து நிறுத்தம்,
திருச்சிராப்பள்ளி - 620 017.
முதற்பதிப்பு அக்டோபர் 2002.

43. ஞானசம்பந்தன், அ.ச., அகமும் புறமும் (அகம்),
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை -1,
முதற்பதிப்பு ஏப்ரல் 1956.

44.நடராச பிள்ளை, அ., திணை மாலை நூற்றைம்பது
மூலமும் பழையவுரையும்,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1919.

45.நாராயணசாமி ஐயர், அ. (உ.ஆ) — நற்றிணை நானூறு,
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1952.

46. தட்சிணாமூர்த்தி, அ. (உ.ஆ), — ஐங்குறுநூறு மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.
41,பி, சிட்கோ இன்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை - 600 098.

47. தாயம்மாள் அறவாணன் — பெண் இன்று நேற்று அன்று,
பச்சைப்பசேல்,
11, இரண்டாம் தெரு,
மோகன் நகர், புதுச்சேரி - 5,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 1998.

48. தாமோதரம்பிள்ளை, சி.வை., — கலித்தொகை,
பாரி நிலையம்,
184, பிராட்வே, சென்னை-106,
முதற்பதிப்பு 2006.

49. பக்தவசலபாரதி, சீ., — பண்பாட்டு மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
1990.

50. புலியூர்க்கேசிகன் — மணிமேகலை,
பாரி நிலையம்,
184, பிராட்வே, சென்னை-18,
பதிமூன்றாம் பதிப்பு 2005.

51. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல்,
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு மார்ச் 1962.

52. மாணிக்கவாசகன், ஞா.,(உ.ஆ), சீவக சிந்தாமணி (இரண்டாம் பகுதி)
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு, சென்னை - 1,

53. முத்துலக்குமி, வே., இலக்கியப் பொழில்,
அனிதா பதிப்பகம்,
88 63, பட்டர்வொர்த் சாலை,
திருச்சிராப்பள்ளி - 620 002,
முதற்பதிப்பு திசம்பர் 2001.

54. மோகன், இரா., இலக்கிய வளம்,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு, சென்னை-600001,
இரண்டாம் பதிப்பு ஜூன் 1990.

55. மோகன், க., பொன்னான அடிகளார்,
நிதிஷ்பிரபா பதிப்பகம்,
848, முதல் தெரு, நேருநகர்,
காரைக்குடி - 630 006,
முதற்பதிப்பு 2006.

56. இராமையா பிள்ளை, நா., தொல்காப்பியர் அகத்திணை விளக்கம்,
ஏ-3, அடையாறு அடுக்குக் கட்டிடம்,
கோட்டூர்புரம்,
4வது முதன்மைச்சாலை,
சென்னை - 600 085,
1994.

57. விஜயலெட்சுமி, ஹரி., ராஜம் கிருஷ்ணன் புதினங்களில் பெண் மாந்தர், என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், உடுமலைப்பேட்டை, 1993.

58.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ) வேங்கடாசலம் பிள்ளை, (உ.ஆ) அகநானூறு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.

59.வேங்கடராமன், எச்., (ப.ஆ) நற்றிணை மூலமும் உரையும், உ.வே.சா. நிலையம், சென்னை, 1989.

60. .......................... பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும், மூன்றாம் தொகுதி, வர்த்தமானப் பதிப்பகம், சென்னை, 2005.

61. வேங்கடாசலம், புலமை., திருமணமும் விவாகரத்தும், தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி)லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098, நான்காம் பதிப்பு டிசம்பர் 2005.

62. வைரமுத்து கருவாச்சி காவியம், சூர்யா வெளியீடு, 22, நான்காம் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், சென்னை - 24. இரண்டாம் பதிப்பு ஜனவரி 2007.

63. கதிரைவேற் பிள்ளை, — தமிழ்மொழி அகராதி,
சாரதா பதிப்பகம்,
G4, சாந்தி குடியிருப்பு,
3, ஸ்ரீகிருஷ்ணபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.

64. சந்திரசேகரன், டி., — திவ்ய ப்ரபந்த அகராதி,
Government Oriental Manuscripts Library,
Madras,
1961.

65. சிங்காரவேலு முதலியார், ஆ., — அபிதான சிந்தாமணி, (திருத்தியது)
(ஆ.சிவப்பிரகார முதலியார்)
சாரதா பதிப்பகம்,
G4, சாந்தி குடியிருப்பு,
3, ஸ்ரீகிருஷ்ணபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.

66. மாதையன், பெ. (ப.ஆ) — பெருஞ்சொல்லகராதி (தொகுதி 4),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 001,
முதற்பதிப்பு மே 2002.

67. நாகசாமி, இரா.,டாக்டர் — அகராதி நிகண்டு,
மகாமகோபாத்தியாய டாக்டர்
உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,
திருவான்மியூர், சென்னை - 41,
1983.

68. வையாபுரிபிள்ளை, எஸ்., — நாபதீப நிகண்டு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு மார்ச் 1985.

69. இராசேந்திரன், ச., தற்காலத் தமிழ் சொற்களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு ஜூன் 2001.

70. ...................... மதுரைத் தமிழ்ப் பேரகராதி, (முதல் பாகம்), சந்தியா பதிப்பகம், ஃபிளாட் ஏ, நியூடெக் வைபவ், 57-53ஆவது தெரு, அசோக் நகர், சென்னை - 600 083, முதற்பதிப்பு டிசம்பர் 2004.

## ஆய்வுக்கோவை

71. குருநாதன், இராம, முத்துக்குமாரசுவாமி, ப., (தொ.ஆ) சிலப்பதிகாரம் (ஆய்வுக்கோவை) பழனியப்பா பிரதர்ஸ், 25, பீட்டாஸ் சாலை, சென்னை - 600 014, முதற்பதிப்பு '2004.

## ஆய்வேடுகள்

72. செந்தமிழ்ப்பாவை, சே., சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 3,

73. இராஜசேகரன், வை, திலகவதியின் பத்தினிப் பெண் புதினம் - ஓர் ஆய்வு ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 3, டிசம்பர் 2007.

## இதழ்கள்

74. குங்குமம் வார இதழ்,
சென்னை,
பதிப்பு 22.10.2006

75. செந்தமிழ்ச் செல்வி,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
78, பிராட்வே, சென்னை,
அக்டோபர் 2005.

76. தமிழ்ப் பொழில்,
கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
தஞ்சாவூர் - 613.002.
நவம்பர் 2006.